# அறிவு ஆராய்ச்சி இயல்

இர. இராமானுஜாசாரி



தமிழ் வெளியீட்டுக் கழகம் — தமிழ்நாடு - அரசாங்கம்

# அறிவு ஆராய்ச்சி இயல்

## (EPISTEMOLOGY)

இர. இராமானுஜாச்சாரி, எம்.ஏ.,
தத்துவத்துறைத் தலைவர்,
கல்வித்துறைப் பதின்மர் தலைவர் (Dean),
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழ்நாடு - அரசாங்கம்

தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண்—85

# அறிவு ஆராய்ச்சி இயல்

## (EPISTEMOLOGY)

**இர. இராமானுஜாச்சாரி,** எம். ஏ.,
*தத்துவத்துறைத் தலைவர்,*
*கல்வித்துறைப் பதின்மர் தலைவர்* (Dean),
*அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.*

...வது ...வெளியீடாகும்.

தமிழ் வெளியீட்டுக் கழகம்
**தமிழ்நாடு - அரசாங்கம்**

First Edition—March, 1966.
B.T.P. No. 85



EPISTEMOLOGY
R. Ramanujachari

Printed by
Guru Printers,
Madras-1.

# அணிந்துரை

(திரு. எம். பக்தவத்ஸலம், தமிழக முதலமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கி ஆறு ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி. ஏ., வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வருகின்றனர். தொடக்கத்தில் இருந்த இடர்ப்பாடுகள் மெல்ல மெல்ல மறைந்துவருகின்றன. நாடு முழுதும் பரந்துள்ள மாணவர்களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன் வந்துள்ள கல்வி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி, இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே திருப்திகரமாக நடைபெற்று வருகிறது.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், தத்துவம் ஆகிய பல துறைகளில் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இருவகையிலும் தமிழ் வெளியீட்டுக் கழகம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான 'அறிவு ஆராய்ச்சி இயல்' என்ற இந் நூல் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் 85 ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 120 நூல்கள் வெளிவந்துள்ளன.

கணக்கிலடங்காத் தடைகளை எல்லாம் அகற்றித் தமிழன்னை கல்லூரிக் கலையாசனத்தில் அமர்ந்துள்ளாள். எனவே, இவ்வன்னையை வாழ்த்துவோமாக. உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும்; அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். சென்னைப் பல்கலைக் கழகத்தின் பலவகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக.

**எம். பக்தவத்ஸலம்**

# ஆசிரியர் முன்னுரை

தங்கத்தை அளவிட்டு மதிப்பிடுவது தராசு. ஆனால், தராசு சரியானதா? என்ற ஆராய்ச்சி முதன்மையானது. அறிவு என்ற அளவு கருவியைக்கொண்டு உலகப் பொருள்களை—ஏன் மனிதனையே—தரம் பிரித்து ஆராய்கிறோம். ஆனால், அறிவு என்ற அளவு கோலையே ஆராய்வது முக்கியமானதல்லவா?

நெய்க்கு தொன்னை ஆதாரமா? அல்லது தொன்னைக்கு நெய் ஆதாரமா? என்ற வினாவை எழுப்பி, நெய்யையே கொட்டி விட்டதாக ஒரு பழங்கதை உண்டு. தத்துவ ஞானியானவன் அறிவுப்போதையில் மயங்கித் தன்னையும் தன் கடமையையும் மறந்துவிட்டதை எடுத்துக்காட்டி, அறிவுறுத்தி, அவனை மீளவும் உயிர்பெறச் செய்த தத்துவக் கொள்கலமே அக் கதை.

அறிவு என்ற அளவுகோலைக் கொண்டுதான் உயிர்களை ஆறு வகையாகப் பிரித்தார் தொல்காப்பியர். புலன்களை வழிகளாகக் கொண்டு உள்சென்றும் வெளிவந்தும் இயங்குகின்ற பல்வகைச் செய்திகள், அறிவு என்ற பொருள் முழுமையாக மலரக் காரணமா கின்றன. மனிதனை முழுமையுடையவனாக ஆக்குவது அவ் வறிவே. அறிவைக் கருவியாகக்கொண்டு பொருள்களை ஆராய்வது அறிஞர் செயல்; ஆனால், அறிவு என்னும் கருவியையே நாடிபிடித்து ஆராய்வது தத்துவ ஞானியின் செயல்.

அறிவு என்ற அளவு கருவியின் உண்மையான அளவு என்ன? அறிவைப் பெறுவதற்குரிய வழிகள் யாவை? பிழைபட்ட அறிவு உண்டா? என்ற ஆராய்ச்சியை இந்திய தத்துவ ஞானிகள் பண்டைக்காலந்தொட்டே செய்துவந்திருக்கின்றனர். அறிவைப் பற்றி இவ்வாறு ஆராய்கிற துறை அறிவாராய்ச்சி இயல் (Epistemology) எனப் பெயர் பெறுகிறது. இன்று வளர்ந்துவரும் விஞ்ஞானம் அறிவாராய்ச்சி இயலை மேலும் மேலும் வலிவுபெறச் செய்கிறது.

இந்திய தத்துவ ஞானிகளைப் போன்றே பிளேட்டோ, சாக்ரடீஸ் போன்ற மேலைநாட்டுப் பேரறிஞர்களும் இத் துறையில் சிறந்த ஆராய்ச்சியைச் செய்துள்ளார்கள். இன்னும்

இவ்வாராய்ச்சி தொடர்ந்து நடைபெறுகிறது. இவ்வகையில் வெளியான ஆங்கில நூல்கள் பல.

பல்கலைக் கழக முதுகலை வகுப்புகளுக்குப் பல்லாண்டுகளாகப் பாடம் சொல்லும்போதெல்லாம் இத்தகைய நூல்கள் தமிழில் இல்லாத குறையை அடிக்கடி எண்ணுவதுண்டு. அரும்பெருங் கலை நூல்களைத் தமிழ்த் தாய்க்கு அணிகலன்களாக ஆக்கித்தரும் சிறந்த—தேவையான பணியை மேற்கொண்டிருக்கும் அரசாங்கத் தமிழ் வெளியீட்டுத் துறையினர் தமிழ்த் தாயின் முடியணியாக விளங்கும் அறிவைப்பற்றிய ஆராய்ச்சி இயல் நூல் ஒன்றைத் தமிழில் ஆக்கித் தருமாறு கூறியது என் உள்ளத்து ஆசையை மலர்வித்தது. அவர்களுக்கு என் உளமார்ந்த நன்றி.

அறிவாராய்ச்சி இயல்பற்றிய இந் நூல் மாணுக்கர்களேயன்றி மற்றவர்களும் படித்தறியவேண்டும் என்ற எண்ணத்தில் ஒரு தொடக்க நூலாக அமைக்கப்பெற்றது. இந்திய, மேலைநாட்டுத் தத்துவ ஞானிகள் முறையாகச் செய்து வளர்த்த அறிவாராய்ச்சி இயலின் ஒரு சுருங்கிய தொகுப்பு என இதைக் கொள்ளலாம்.

என்னை இப் பணியில் ஈடுபடுத்திய அரசாங்கத் தமிழ் வெளியீட்டுத் துறையினர் அவர்களுக்கும், உடனிருந்து உதவிய பூம்புகார் அரசாங்கக் கீழைக்கலை, பண்பாட்டு இயல் கல்லூரி முதல்வர், சிவத்திருவாளர் சி. இராமலிங்கனுர், M.A., அவர்களுக்கும், அண்ணுமலைப் பல்கலைக் கழகத் தத்துவத்துறை ஆராய்ச்சி மாணுக்கர், வித்துவான் வை. இரத்தினசபாபதி, M.A., B.O.L., அவர்களுக்கும், திருவருளுக்கும் என் இதயம் கலந்த நன்றி.

இர. இராமானுஜாச்சாரி

## பொருளடக்கம்

### 1. தோற்றுவாய்

# 1. தோற்றுவாய்

## A. அறிவு அளவை இயல் அல்லது அறிவாராய்ச்சி இயல் (EPISTEMOLOGY)

அறிவு அளவை இயல் மெய்ப்பொருளியலின் (Philosophy) ஒரு பகுதியாகும். அறிவின் தோற்றம் (Origin), இயல்பு (Nature), உண்மை (Truth, Value, Certitude), வரம்புகள் (Limits) முதலியவற்றைக் குறித்து எழுகின்ற பிரச்சினைகளை அறிவளவை இயல் ஆராய்கின்றது. இப் பிரச்சினைகளை இரு கூறுகளாகப் பிரிக்கலாம். ஒன்று, அறிவின் தோற்றத்தைச் சார்ந்தது. மற்றொன்று அறிவின் உண்மையைச் (Truth, Certitude) சார்ந்தது.

அறிவளவையியலில் கருதுகின்ற பிரச்சினைகள் அடங்கிய துறைக்கு முதலில் ஜே. எஃப். ஃபெர்ரியர் (J. F. Ferrier) 1854ஆம் ஆண்டில் தமது 'இன்ஸ்டிடியூட்ஸ் ஆஃப் மெடாபிஸிக்ஸ்' (Institutes of Metaphysics) என்ற வெளியீட்டில் எபிஸ்டிமாலஜி (Epistemology) என்ற பெயரை முதன்முதலாக வழக்கிற்குக் கொணர்ந்ததாகத் தெரிகிறது. ஆயினும், இத்துறையை அவர் தொடங்கி வைத்ததாகக் கருதுவதற்கு இல்லை. மனிதன் தீவிரமாக சிந்திக்க ஆரம்பித்தபொழுதே, இப் பிரச்சினைகளைக் கருதியிருத்தல் வேண்டும். 'எபிஸ்டிமாலஜி' என்ற சொல் இரு கிரேக்கச் சொற்களால் ஆனது. 'எபிஸ்டெமே' (Episteme) என்ற சொல் 'அறிவு' என்னும் பொருளைத் தரும்; 'லோகாஸ்' (Logos) என்ற சொல் முறைமை பெற்ற ஆராய்ச்சி என்ற பொருளைத் தரும். ஆகவே, 'எபிஸ்டிமாலஜி' என்ற சொல் 'அறிவளவை இயல்' அல்லது 'அறிவாராய்ச்சி இயல்' என்று குறிக்கப்படும். மேலைநாட்டுத் தத்துவ வரலாற்றைப் பார்க்கும்போது கிரேக்க நாட்டுச் சிந்தனையாளர்களுள் ஒரு வகையினரான 'சோபிஸ்ட்ஸ்' (Sophists) என்பவர்கள் தங்கள் காலத்திற்கு முன்

வழங்கிய தத்துவக் கொள்கைகளை விவாதித்து ஆராயத் தொடங்கியபோது, 'அறிவாராய்ச்சி' அல்லது 'அறிவளவையியல்' என்ற பகுதி மெய்ப்பொருள் இயலில் தோன்றியதாகக் கருத இடமுண்டு. தத்துவக் கோட்பாடுகள் ஒன்றோடொன்று முரண்படும்பொழுது எந்தக் கோட்பாட்டை ஏற்பது என்ற பிரச்சினை எழுவது இயல்பேயாகும். ஒரு கோட்பாட்டை ஏற்பதற்கும் மற்றொன்றை மறுப்பதற்கும் காரணம் யாது? உண்மையான கொள்கையை, தவறானவற்றிலிருந்து பிரித்தறிவது எவ்வாறு? உண்மையை உள்ளவாறு அறியப் பயன்படும் உரைகல் (Touch-stone ; criterion) யாது? இக் கேள்விகளைக் கருதும்போது மேலும் அடிப்படையான கேள்வியாகிய 'அறிவின் தோற்றம் எவ்வாறு?' என்பதும் எழுகிறது. கிரேக்க நாட்டுத் தலைசிறந்த தத்துவ ஞானிகளாகிய ஸாக்ரடீஸ் (Socrates), பிளேட்டோ (Plato) ஆகியோர் தம் நூல்களுள், அறிவு அளவை இயலைச் சார்ந்த பல பிரச்சினைகளை விரிவாக ஆங்காங்கு விவாதித்துள்ளதைக் காணலாம். பிளேட்டோவின் தியேடிட்டஸ் (Theatetus) என்னும் உரையாடல் 'அறிவு அளவை இயலின்' ஒரு சிறந்த விளக்கம் எனக் கருதலாம். அறிவு அளவை இயலின் சிக்கல்கள் ஐயக் கொள்கையினரால் (Sceptics) ஆராயப்பெற்றன. இதன் காரணமாக இச் சிக்கல்கள் மெய்ப்பொருள் இயலில் சிறப்பான இடம் பெறலாயின.

மறுமலர்ச்சி இயக்கத்திற்குப் (Renaissance) பிறகு ஜான் லாக் (John-Locke) என்கிற ஆங்கில நாட்டு மெய்ப்பொருளியல் வல்லுநர் ஒருவரால் அறிவு அளவை இயலுள் எழுகின்ற பிரச்சினைகள் தத்துவ உலகில் முக்கியத்துவம் பெறலாயின. 'மக்கள் அறிவைப்பற்றிய கட்டுரை' (Essays on Human Understanding) என்கிற தமது புகழ்பெற்ற நூலில் 'வாசகருக்கு விடுத்த கடிதம்' (Letters to the Readers) என்ற பகுதியில் 'லாக்' என்பவர் தம் இளமைப் பருவத்தில் சில தத்துவப் பிரச்சினைகளைத் தமது நண்பர்களுடன் கூடி ஆலோசித்ததாகவும், அப்பொழுது அவர்களது சிந்தனைகள் பயனற்ற வழிகளில் செல்லுவதை உணர்ந்ததாகவும் கூறுகிறார். ஆதலால் தத்துவக் கொள்கைகளைக் கருதுவதற்கு முன்னர் அறிவின் திறனை (capacity) ஆய்ந்து, எவ்வெப் பொருளை அறிவு உணர இயலும், எவ்வெவற்றை உணர இயலாது (limits of knowledge) என்பனவற்றைப் போன்ற அடிப்படைக் கேள்விகட்கு விடை காணுதல் வேண்டும் என்ற எண்ணம் தமக்குத் தோன்றிற்று எனவும் 'லாக்' கூறுகிறார். சுருங்கக் கூறின், அறிவு அளவை இயலின் பிரச்சினைகள் மற்றப்

பிரச்சினைகள் அனைத்திற்கும் முற்பட்டவை என்று அவர் எண்ணினார். இவ்வாறு, 'லாக்' கருதி உணர்த்தியதன் பயனாக ஐரோப்பியத் தத்துவக் கொள்கைகளின் போக்கு பெரிதும் மாற்றமுற்றது எனலாம்.

'லாக்' என்பவருக்குப் பிறகு தோன்றிய பார்க்லி (Berkeley), ஹியூம் (Hume) போன்ற ஆங்கிலத் தத்துவ அறிஞர்கள் 'லாக்' சிந்தித்த வழியே சென்று அறிவு அளவை இயலின் பிரச்சினைகளுள் சிலவற்றை ஆழமாகக் கருதியுள்ளனர்.

பதினேழு, பதினெட்டு ஆகிய இவ்விரண்டு நூற்றாண்டு களிலும் ஐரோப்பியத் தத்துவ அறிஞர்களாகிய 'டேகார்ட்' (Descartes), 'ஸ்பினோஸா' (Spinoza), 'உல்ஃப்' (Wolfe), 'லைப்னிட்ஸ்' (Leibnitz) ஆகியோர் தத்துவப் பிரச்சினைகளையே பெரிதும் கருதினர். அவர்களால் அறிவு அளவை இயலைக் குறித்த பிரச்சினைகள் இடையிடையே கருதப்பெற்றன.

பதினெட்டாம் நூற்றாண்டிற்கும், பத்தொன்பதாம் நூற்றாண் டிற்கும் இடையே காவலர்போல விளங்கிய இம்மானுவல் காண்ட் (Immanuel Kant) என்ற ஜெர்மானியத் தத்துவ ஞானி, 'அறிவு அளவை இயலுக்கு'ச் சிறப்புத் தந்து, அதன் பிரச்சினைகளை விரிவாக ஆராய்ந்தார். இத்துறையில் பின் தோன்றியவர்களுக்குக் 'காண்ட்' வழிகாட்டியாக விளங்கினார்.

'லாக்', 'பார்க்லி', 'ஹியூம்' ஆகிய மூவரையும் தத்துவ உலகில் 'அனுபவ வழிக் கொள்கையினர்' (Empricists) என்று கூறுவர். நாம் பெறும் அறிவனைத்தும் அனுபவத்திலிருந்து தோன்றும் என்ற கருத்து அனுபவ வழிக் கொள்கையினரின் முக்கியக் கருத்தாகும். 'டேகார்ட்', 'ஸ்பினோஸா', 'லைப்னிட்ஸ்' ஆகிய மூவரும் தத்துவ உலகில் 'அறிவு வழிக் கொள்கையினர்' (Rationalists) என்று கூறப்பெறுவர். நாம் பெற்றுள்ள அறிவனைத்தும், சிந்தனையின் விளைவே என்ற அடிப்படைக் கருத்தை 'அறிவு வழிக் கொள்கையினர்' வற்புறுத்துவர்.

காண்ட் என்பவர் ஆங்கில அனுபவ வழிக் கொள்கையையும், ஐரோப்பிய அறிவு வழிக் கொள்கையையும் இணைத்துத் தீர்வுகாண முற்படுகிறார். அறிவு அளவை இயலுள் எழுகின்ற சிக்கல்கட்குரிய தீர்வுகளைக் 'காண்ட்' கருதுகிறார். 'லாக்' என்ற தத்துவ ஞானி கருதியதுபோல், ஆன்மா, கடவுள், உலகம் போன்ற தத்துவப் பிரச்சினைகளை விளக்க முற்படுவதற்கு முன்னர், மனித அறிவின்

ஆற்றல் யாது? அவ்வறிவு அறிதற்குரிய பொருள்கள் யாவை? என்பன போன்ற அடிப்படைக் கேள்விகளைக் கருதுதல் வேண்டும் என்கிறார் காண்ட். மனித அறிவிற்குரிய வரம்புகளை உணராது, தத்துவப் பிரச்சினைகட்கு விடை காண முயல்வதானது திசை காட்டும் கருவியுடன், விண்மீன்கள், திசைகள் இவற்றைப்பற்றிய அறிவுமின்றி ஒருவன் பரந்த கடலில் பிரயாணம் செய்ய முன் வருவதை ஒத்ததாகும். பல்வேறு கொள்கையினரும் 'காண்ட்' என்னும் ஜெர்மானிய அறிஞரின் தத்துவக் கொள்கைகளைப் பல படியாக உணர்ந்து, தத்தம் கொள்கைகளுக்குக் 'காண்ட்' ஆதர வளித்ததாகக் கொண்டனர். அப் பல்வேறு கொள்கைகளுக்கு இணங்க, அறிவு அளவை இயல் கொள்கைகளும் பலவாயின.

ஜெர்மானிய-கருத்து முதற் கொள்கையினர் (German-Idealists) அறிவளவை இயலில் அடங்கியனவாக நாம் கருதும் பிரச்சினைகள், அளவை இயலிலும் (Logic) அடிப்படைத் தத்துவ இயலிலும் (Metaphysics) அடங்குவன என்று கூறி, அறிவு அளவை இயலைத் தனியொரு துறையாக்வோ, யாவற்றிற்கும் முற்பட்ட ஒன்றுகவோ கருதவில்லை. ஆனால், இதற்கு மாறாக, 'காண்ட்டைப்' பின்பற்றிய புதிய சிந்தனையாளர்கள் அறிதலாகிய நிகழ்ச்சியைத் திறனாய்வு முறையில் கருதுதலே அனைத்துச் சிந்தனைக்கும் அடிப் படையாக அமைதல் வேண்டும் என்றனர். தற்காலத்தில் அறிவு அளவை இயலில் எழும் சிக்கல்கள் முக்கியத்துவம் பெறுகின்றன. இன்று விஞ்ஞானம் அடைந்துள்ள வளர்ச்சியில் நாம் அறிவு அளவை இயலைப் புறக்கணிப்பதற்கில்லை. இன்றைய பௌதிக ஆராய்ச்சிகளில் (Physical Sciences) விஞ்ஞானிகளே அறிவுப் பிரச்சினைகளை விரிவாக ஆராய்கின்றனர் என்பதைக் காணலாம்.

நமது நாட்டுத் தத்துவ வரலாற்றை ஆராயும்போது பிரமாணங்களைப்பற்றிய ஆராய்ச்சி, எல்லாத் தத்துவக் கொள்கைகளிலும் (தரிசனங்களிலும்) முதலிடம் பெறுவதை அறி கிறோம். தத்துவங்களை நிர்ணயிப்பதற்குப் பயன்படுத்தும் கருவி கள், பிரமாணங்கள் யாவை? என்ற பிரச்சினையை முதலில் இந்தியத் தத்துவ அறிஞர் மேற்கொள்கின்றனர். பிரமாணம் என்ற சொல் 'பிரமா'வை (Prama) ஏற்புடைய அறிவை—உண்மை அறிவைத் தருவது என்ற பொருள்படும்.[1] (Means of true knowledge) மெய்ப்பொருள் இயல், உண்மைப் பொருளை உள்ளவாறு அறிய முற்படுகிறது. உண்மையை அறிவதற்குரிய வாயில்களாக

[1] Pramā என்பது உண்மை அறிவு; இதற்கு மாறாக Bhrama என்பது பிழைபடும் அறிவைக் குறிக்கும்.

விளங்கும் பிரத்தியட்சம் (காட்சியளவை), அனுமானம் (கருதலளவை), சப்தம் (உரையளவை, ஆகம அளவை) போன்ற முக்கியமானவற்றைக் கருதி, அவற்றால் பெறும் அறிவின் தரத்தை நிர்ணயித்தல் அல்லாமல் உண்மையைப்பற்றிய அறிவின் திறத்தை உறுதியாக ஏற்றுக்கொள்வதற்கு இயலாது. இவ்வுண்மையை நன்கு உணர்ந்த இந்தியத் தத்துவ ஞானிகள் பிரமாண ஆராய்ச்சியை ஒவ்வொரு தரிசனத்திலும் முதற்படியாக அமைத்தனர். ஒவ்வொரு சித்தாந்தத்திலும் உண்மை அறிவு யாது என்றும், பிழைபடும் அறிவு எப்படி ஏற்படுகிறது என்றும் விரிவாக ஆராய்ந்து பல கருத்துகளை வெளியிட்டுள்ளனர். கியாதிகள் (Khyati) என வழங்குபவை இத் தரிசனங்களில் 'பிழைகள்' நேருகின்ற வகைகளை விளக்குவனவாகும்.

(i) **உள்ளத்தியலும், அறிவு அளவை இயலும் (Psychology and Epistemology)** : மனத்தின் அமைப்பு, செயல் ஆகிய பிரச்சினைகளை விரிவாக ஆராயும் துறை உள்ளத்தியல் எனப்படும். உள்ளம் ஆராயப்படுகிறபோது அறிவு (cognition), விழைவு அல்லது உணர்ச்சி (affection), செயல் (conation) என்ற அதன் மூன்று முக்கிய அம்சங்களும் விளக்கம் பெறுகின்றன. புலக் காட்சி (perception), நினைவாற்றல் (memory), கற்பனை (imagination), கருத்தமைவு (conception), சிந்தனை (thinking) ஆகியவற்றை, உள்ளத்தியலார், அறிவு நிலையின் பல்வேறு முறைகளாகக் கருதி ஆராய்கின்றனர். இவை யாவும் அறிவின்பாற்படுகின்ற காரணத்தினால், அறிவானது அளவையியலால் ஆராய்தற்கு உரியது எனினும், அத் துறை சிந்தனையைமட்டுமே சிறப்பாகக் கருதுகிறது. உள்ளம் என்பது அறிவு, விழைவு, செயல் ஆகிய முக்கூறுகளால் ஆன கூட்டுநிலையாகும். உள்ளம், இம் மூன்றன் இணைப்பேயெனினும், ஒவ்வொன்றின் நுட்பங்களையும் நன்கு அறிவதற்காக, அம் மூன்றையும் தனித்தனியே ஆராயலாம். உள்ளத்தின் தொழிற்பாடுகளுள் ஒன்றாகிய அறிவுநிலையைமட்டும் அறிவளவையியல் அறிய முற்படுகிறது.

ஆனால், உள்ளத்தியலார் அறிவு நிலைகளை ஆராய்வதற்கும், அறிவு அளவை இயலார் அறிவு நிலைகளை ஆராய்வதற்கும் வேற்றுமை உண்டு. அவ்விருவர்களுடைய நோக்கமும் வேறுபடுகின்றன. இவ்வேறுபாடுகளை அறிதல் வேண்டும். உள்ளதை உள்ளவாறு, நிகழ்ச்சிகளை நிகழ்கின்றவாறு அறிகின்ற முறையை விஞ்ஞானம் மேற்கொள்கிறது. இவ்வாறு அறிகின்ற துறைகள் 'பாசிடிவ் சயன்ஸஸ் (Positive-Sciences) அல்லது வர்ணனை விஞ்ஞானம் (Descriptive Science) என்று கூறுவர். ஆனால்,

ஆராயப்பெறும் நிகழ்ச்சிகள் எவ்வாறு எழுகின்றன, வளர்கின்றன (how knowledge originates and develops) என்று விசாரியாது, அவை உண்மைக்கு உரியனவாக விளங்குதல் வேண்டுமெனின், அந் நிகழ்ச்சிகள் எவ்வாறு அமைதல் வேண்டும் என்று ஆராய்வது தத்துவத் துறையின் முறையாகும். எனவே, அளவை இயல் (Logic), அற இயல் (Ethics), அழகு இயல் (Aesthetics) ஆகிய துறைகளை மதிப்பீட்டுத் துறைகள் (Normative Sciences) என்பர். இவை குறிப்பிட்டதொரு மதிப்பினை (Norm) எவ்வாறு பெறுவது? என்பதைச் சிறப்பாக ஆராயும் தன்மையன.

அறிவு அளவை இயலில் விளங்குகின்ற முக்கியமான பிரச்சினையை நாம் மற்றொரு வகையில் சுருக்கிக் கூறலாம். உள்ளத்தியல் உண்மைகளை அறிந்தோர், உள்ளத்தை அல்லது மனத்தை உணர்வின் அல்லது அறிவின் தொடர்ச்சியாகக் கருதுகின்றனர். இவ்வுணர்வின் தொடர்ச்சியில் பல்வேறு உருவங்கள், உருவங்களின் தொகுப்புகள், எண்ணங்கள் முதலியவற்றைக் காண்கின்றனர். எண்ணங்களும் மற்றவையும் ஒன்றையொன்று இயக்கித் தொழிற்படவும் காண்பர். இவ்வாறு தொழிற்படுகின்ற நிலையில் இவை கருத்தமைவுகளாக இயைகின்றன. இயைபின் காரணமாக 'ஆன்ம உணர்வு' தலைப்படுகின்றது. இவ்வுணர்வின் தொடர்ச்சியில் சில கூறுகள் பொதிந்து விளங்குகின்றன. இவை பொதிந்து விளங்குவனவாகக் கொள்ளுதல் வேண்டுவதாகின்றது. இவ்வாறு தொடர்ந்து பல கூறுகளுடன் விளங்குவது தனி ஒருவனிடத்தில் விளங்கும் மனமாகும். இம் மனம் தனியோர் உடலோடு இயைந்தே விளங்கும். ஆதலால், மனம் என்பது தனி நிலையில் அறிவு நிலைகளை மட்டும் உடையதாகக் கருதுவதற்கு இல்லை. உடலோடு தொடர்புடையது ஆதலால், உடலில் தோன்றும் உணர்ச்சிகளும் செயல்நிலைகளும் சேர்ந்தே மனம் இயங்குகின்றது. இவ்வாறு, ஒவ்வொருவனது மனத்தினிடையே தோன்றும் எண்ணங்கள் முதலியன அவனது உள்ளத்தில் சிறப்பாக அமைகின்றன எனினும், அவன் மனத்தைமட்டும் விளக்காது புற உலகில் உள்ளவற்றைப்பற்றியும் விளக்குகின்றன. எண்ணங்கள், தம் தோற்றத்தைப்பொறுத்த அளவில், உள்ளத்தைச் சார்ந்தன எனினும் புற உலகை விளக்குகின்றன. வெளியுலகம் தனி ஒருவனுக்குமட்டும் உரியதன்று. எல்லோருக்கும் பொதுவான உலகையும் மனத்திடையே விளங்கும் எண்ணம் விளக்குவதாகும். தனியொருவனிடத்தில் உடலோடு ஒன்றிய நிலையில் விளங்கும் உணர்விற்கும் (knowledge that arises in a particular mind) அவனால் அறியப்படும், விரும்பப்படும் உலகிற்கும் என்ன தொடர்பு உள்ளது? இந்நிலையில்தான் உள்ளத்

தியலில் உண்மையாக விளங்குகின்ற ஒன்று, அளவை இயலில் கருதுவதற்கு உரியதாக மாறுகிறது. உள்ளத்தியல் ஒருவனது மனத்தில் விளங்கும் எண்ணங்கள், உணர்ச்சிகள் ஆகியவற்றின் தொடர்ச்சியை அறிகிறது; உணர்த்துகிறது. ஆனால், அளவையியல் ஒருவனது மனம் அறியப்படுகின்ற உலகை எவ்வாறு உருவாக்குகின்றது என்பதைக் கருதுகிறது (how the mind constructs a world of reality). ஒருவனது உள்ளத்திலே விளங்குகின்ற எண்ணங்களும் உணர்ச்சிகளும் எவ்வாறு பொருள்களும் மனிதர்களும் நின்றந்த உலகை உடையதாகின்றது? இப்பொருள்களும் மனிதர்களும், இவன் உள்ளத்தில் எவ்வாறு விளங்குகின்றனர்?

புற உலகு நம்மால் எண்ணங்களாகவும் கருத்துகளாகவும் அறியப்பெறுகிறது. மனிதன் அறிவது, நேராகச் சூரியன் பூமி ஆகியவற்றை. ஆனால் அவனுக்கு நேராகத் தொடர்புள்ளவை சூரியனைக் காணும் கண்ணும், மண்ணைத் தொட்டு அறியும் கையுமேயாகும். இவ் வுறுப்புகளின் வாயிலாகப் பெறுகின்ற எண்ணங்களே—கருத்துகளே சூரியனைப்பற்றியும், பூமியைப் பற்றியும் அவன் அறிவதற்குத் துணை செய்வனவாகும். 'பூமி சூரியனைச் சுற்றி வருகின்றது' என்ற உண்மையை நாம் அறியும் போது நமது மன நிலையை விளக்கவில்லை. பூமி என்ற கருத்து சூரியன் என்ற கருத்தைச் சுற்றுகிறது என்பதன்று. பூமி, சூரியன் ஆகிய கோள்கள் புற உலகில் நமக்கு அயலாக விளங்குவன; அவற்றுள் பூமி சூரியனைச் சுற்றுகிறது என்பதே. இவற்றை நாம் அறிவதெல்லாம் கருத்துகளாலேயே என்று கொள்ளவேண்டும். ஆனால், கருத்துகளுக்கு வெளியுலகை விளக்கும் திறமை உண்டு என்பதை மறக்கலாகாது (ideas have objective references). அறிவதற்கு உரியதாக விளங்குகின்ற அனைத்தும், இவ்வுலகு முழுமையும், அறிவான் ஒருவனுக்கு அறிபொருளாக விளங்குகிறது. காண்பான் ஒருவனுக்குக் காட்சியாக விளங்குகிறது. சுருங்கச் சொன்னால், கருத்தாக விளங்குகிறது. ஆதலால், அறிவு அளவை இயலில் அறிவான் ஒருவன் எங்ஙனம் அறிகிறான்? அறிவின் அகத்தே விளங்குவனவாகிய எண்ணங்களும் பிறவும் புறத்து விளங்குவனவாகிய பொருள்களையும், மற்றவற்றையும் அறிய நேர்தல் எவ்வாறு? இவ்வாறு அறியும் அறிவு எந்த அளவிற்கு உண்மை அறிவாகிறது? எப்பொழுது தவறுடையதாகிறது? உண்மை அறிவு எது? தவறுடைய அறிவு எது? என்று பிரித்தறிவதற்கு அளவுகோல் யாது? இத்தகைய அடிப்படைப் பிரச்சினைகளைத் தெளிவுபடுத்தி இவற்றிற்குரிய விடைகளைக் காணுதலே அறிவு அளவை இயலின் முக்கிய நோக்கமாகும்.

சிந்தனையை ஒரு நிகழ்ச்சியாகக் கருதி, அந்நிகழ்விற்கு உரிய நிலைகள் யாவை என உள்ளத்தியல் அறிகிறது. சிந்தனையின் வளர்ச்சியைச் சிறு குழவிப் பருவம் தொடங்கி நல்ல மூளை வளர்ச்சி நிரம்புகின்ற பருவம் வரை தொடர்ந்து, வெவ்வேறு படிநிலைகளை எல்லாம் முறையாக உள்ளத்தியல் ஆராய்கிறது. பல்வகைச் சிந்தனைகளையும் கருதி, 'சிந்தனை' என்னும் நிகழ்ச்சி குறித்து, பொதுவான உண்மைகள் யாவை என உள்ளத்தியல் உணர்த்து கிறது. சிந்தனைகளை அறியும்பொழுது, முறையான சிந்தனை, முறை பிறழ்ந்த சிந்தனை அல்லது மனநலம் குன்றியோரது சிந்தனை உட்பட அனைத்துவகைச் சிந்தனைகளையும் உள்ளத்தியல் ஆராய்கிறது. சிந்தனையின் தோற்றம், வளர்ச்சி, பொது உண்மைகள் ஆகியவற்றைக் குறித்து அறிவு அளவை இயல் அறிவதில்லை. சிந்தனையின் விளைவான கருத்துகள், எண்ணங்கள் ஒரு மொழியின் வாயிலாக வெளிப்படுத்தப்பெற்ற பின்னர், அவ்வெண்ணங்கள் அளவை இயல் விதித்துள்ள சட்டங்கட்கு முரணாகாமல் விளங்குகின்றனவா எனக் காண்கின்றனர். சிந்தனையின் விளைவாகத் தோன்றும் தீர்ப்புகளது உண்மையே, அறிவாராய்ச்சி இயலின் முக்கிய நோக்கமாகும் (not the process but the products of thoughts). அறிவு அமையும் வகை அல்லது அறிவின் வாயில்கள், அறிவின் ஆற்றல், வரம்புகள் போன்ற வற்றை ஆராய்வதே அறிவு அளவை இயலின் நோக்கமாகும். எனவே, உள்ளத்தியலும் அறிவு ஆராய்ச்சி இயலும் முக்கியமாக இரண்டு அம்சங்களில் வேறுபடுவதைக் காணலாம் : (1) அவற்றின் பொருட் பரப்பைச் சார்ந்தது; (2) அவ்விரண்டு ஆராய்ச்சியின் நோக்கங்களைச் சார்ந்தது. உள்ளத்தியல் மக்களது பல்வேறு மன நிலைகளை நன்கு ஆராய முற்படுகிறது. ஆனால், அறிவு ஆராய்ச்சி யியலோ அறிவு நிலையை மட்டுமே ஆய்கிறது. மேலும், இவ்விரண்டு இயல்களும் அறிவை ஆராயும்போது வெவ்வேறு நோக்கத்துடன் ஆராய்கின்றன.

(ii) அளவை இயலும் அறிவு அளவை இயலும் (Logic and Epistemology) : அளவை இயல் அறிவு அளவை இயலுள் அடங்குவதேயாகும். அளவை இயல், அறிவு அளவை இயலுக்கு முதற்படி என்று கூறலாம். அளவை இயலைத் தொன்று தொட்டு இரு பகுதிகளாகக் கருதுவர். அவை பகுப்பு வழி அளவை (Deductive), தொகுப்பு வழி அளவை (Inductive) என்பன. பகுப்பு வழி அளவையை 'வடிவ நிலை அளவை' (Formal) என்றும் வழங்குவர். சிந்தனையானது தான் மேற்கொள்ள வேண்டிய வடிவத்தை வரையறை செய்வதையே பகுப்பு வழி அளவை முக்கியமாகக் கருதுகிறது. எந்த ஒரு

சிந்தனையையும் 'முக்கூற்று அளவை முறை'யில் (Three-membered-syllogism) அடக்கலாம். மேற்கோள்கள் (premises) இரண்டும் முடிபும் (conclusion) சேர்ந்து 'முக்கூறுகளாகின்றன. முடிபு, மேற்கோள்களிலிருந்து பெறத்தக்கதாக இருக்க வேண்டும். உதாரணத்தைக் கருதுவோம் :

மனிதன் இறப்பான் ;
தேவதத்தன் மனிதன் ;
ஆகவே, தேவதத்தன் இறப்பான்.

இங்கு முடிபு மேற்கோள்களோடு பொருந்துகிறது. ஆதலால், முடிபு ஏற்புடையதாகிறது. பெறுகின்ற முடிபு, கொடுக்கப் பெற்றுள்ள மேற்கோள்களோடு (premises) பொருந்துதல் வேண்டும். தேவதத்தன் இறப்பான் என்னும் உண்மை, மனிதன் இறப்பான் என்னும் உண்மையில் அடங்குவதேயாகும். ஆதலால், மேற்கோள்களுக்கு உட்படுதல், பொருந்துதல் என்பது பகுப்பு வழி அளவையின் உயிர் நிலையாகும்.

தொகுப்பு வழி அளவை, பொது உண்மைகளை நாம் எவ்வாறு பெறுகிறோம் என்பதை விளக்குகிறது. பல தனி நிலைகளை ஆராய்ந்து, அவற்றுள் விளங்கும் பொது உண்மையைத் தேர்ந்தெடுப்பதைத் தொகுப்பு வழி என்கிறோம். எடுத்துக்காட்டு ஒன்றைக் கருதுவோம்.

சாத்தன் இறந்தான் ;
தேவதத்தன் இறந்தான் ;
குப்பன் இறந்தான் ;
இதுவரை பலர் இறந்துள்ளனர் ;
ஆகவே, மனிதர் அனைவரும் இறப்பர்.

பகுப்பு வழி அளவையானது சிந்தனையில் பெறப்பெறும் முடிபு மேற்கோள்களோடு ஒத்திருக்க வேண்டும் (formal consistency) என்பதை மட்டும் கருதுகிறது. சிந்தனையில் வெளிப்படும் கருத்து, பொருள் நிலையில் பொருந்தாமல் இருப்பினும், சிந்தனை முறையில் வடிவ நிலைப் பொருத்தத்தையே கருதுகிறது. வடிவ நிலைப் பொருத்தம் அமைந்து பொருள்நிலை பொருந்தாது இருக்கும் ஒரு முக்கூற்று அளவை முறையைக் கருதுவோம் ;

மனிதன் அமரன் ;
தேவதத்தன் மனிதன் ;
ஆகவே, தேவதத்தன் அமரன்.

இந்த முக்கூற்று அளவை முறையில் முடிபு மேற்கோள்களோடு இயைவதே எனினும், பொருள் பொருத்தமில்லை. தேவதத்தன் அமரன் அல்லன். ஆதலால், அளவை இயலுள் வடிவநிலைப் பொருத்தம் அல்லது ஏற்புடைமையை (formal consistency) பகுப்பு வழி அளவை இயலும், பொருள் பொருத்தத்தைத் (material consistency) தொகுப்பு வழி அளவை இயலும் முறையே கருதுவனவாகும்.

சிந்தனையுள் பொதுவுண்மைகளைக்கொண்டு சிறப்புண்மைகளை அல்லது தனி உண்மைகளை அறிதல் ஒரு நிலையாகும். தனிநிலை உண்மைகள் பலவற்றை முறையாக ஆராய்ந்து அவை உணர்த்தும் பொதுவுண்மைகளை உணர்தல் மற்ருெரு நிலையாகும். முன்னதைப் பகுப்பு வழி அளவை மேற்கொள்கிறது. பின்னதைத் தொகுப்பு வழி அளவை மேற்கொள்கிறது. தொகுப்பு வழி அளவை முறை பொதுவாக விஞ்ஞானத்துறைகளுள் பயிலப்பெறும் முறையாகும். ஆதலால், பகுப்பு வழி அளவையும், தொகுப்பு வழி அளவையும் நமது சிந்தனையின் அமைப்பை, வடிவ நிலையை விளக்குவன. அறிவு அளவை இயல் இதற்குமேலும் சென்று சிந்தனையினின்றும் தோன்றும் தீர்ப்புகள் (judgments) உண்மையா? என்று ஆராய்கின்றது. தீர்ப்புகள் எவ்வாறு பிழைபடுகின்றன என்றும் கருதுகிறது. எனவே, அறிவு அளவை இயலானது ஆராய்கின்ற முறை அடிப்படையான முறையாகும். நாம் பெறுகின்ற அறிவு எவ்வாறு தோன்றுகிறது? இவ்வறிவின் இயல்பு யாது? இவ்வறிவின் தோற்றத்திற்குரிய நிலைகள் யாவை? இவ்வறிவின் ஆற்றல் யாது? என்பன போன்ற கேள்விகட்கு விடை காணுவதே அறிவு அளவை இயலாகும்.

**(iii) அடிப்படைத் தத்துவ இயலும் அறிவு அளவை இயலும் (Metaphysics and Epistemology):** அடிப்படைத் தத்துவ இயல் அனைத்துக்கும் மூலமான அடிப்படையான கேள்விகளை எழுப்புகிறது. நாம் யார்? நம்மைச் சூழ்ந்துள்ள உலக அமைப்பு யாது? உள்பொருள் ஒன்ருே, பலவா என்பன போன்ற அடிப்படையான கேள்விகளை எழுப்புவதால் அடிப்படைத் தத்துவ இயல் என இதை வழங்குவர். அறிவான், அறியப்படும் பொருள், அறிவு ஆகிய மூன்று கூறுகள் எல்லா அறிவு நிலைகளிலும் அடங்கக் காண்கிருேம். அறிவினுள் இம்மூன்று கூறுகளும் இணைந்தே தோன்றுவதால், அறிவைத் 'திரிபுடிசம்வித்' என வழங்குவர். அறிவு வெற்றிடத்தில் தொழிற்படாது. அறிவு யாதானும் ஒன்றைப் பற்றியதாகவே அமைதல் வேண்டும். அறிவு ஆராய்ச்சி இயலில் அறிவானைப் பற்றியோ, அறியப்பெறும் பொருள்களைப்பற்றியோ நாம் கருது

வது இல்லை. அறிவு அல்லது ஞானம் குறித்தே அறிவு அளவை இயல் கருத்துக் கொள்கிறது. 'அறிவின்' தோற்றம், இயல்பு, எல்லைகள் போன்ற பிரச்சினைகள் அடிப்படையான பிரச்சினைகளே. அடிப்படையானவற்றை ஆராய்கின்ற நிலையில், 'அறிவு அளவை இயல்' அடிப்படைத் தத்துவ இயலை ஒத்ததேயாகும்—ஏன் அதன் பகுதி என்றே கூறிவிடலாம். இந்தியத் தத்துவ சாஸ்திரங்கள், உள்பொருள் குறித்துத் (அறிவான்—அறியப்படுபொருள்) தமது கொள்கைகளை வரையறை செய்வதற்கு முன்னர் அதை அறிதற்குத் துணை செய்யும் பிரமாணங்களை ஆராய்கின்றன. பிரமாண ஆராய்ச்சி 'அறிவு அளவை இயலின்' பாற்படும். ஆதலால் அடிப் படைத் தத்துவ இயலும், 'அறிவு அளவை இயலும்' ஒன்றை யொன்று சார்ந்தனவாகவே உள்ளன.

அறிவான் குறித்தும் (Knower—Perceiver) அறியப்படு பொருள் (Perceived—Known Object) குறித்தும் நாம் கொள்ளும் கொள்கை கட்கு ஏற்பவே 'அறிவு அளவை இயலின் கொள்கை'களும் அமைகின்றன. புறவுலகம் அறிவானையின்றியே தனித்திருக்க வல்லது; ஆயினும், அவனுடைய அறிவுக்கு விஷயமாக இருக்கிறது. இக் கொள்கைப்படி உலகம் நம்மால் கண்டு அறிதற்கு உரியது எனக் கொள்வோமாஞல் இதற்கேற்ப நாம் பெறுகின்ற அறிவை உலக உண்மைகளோடு பொருத்தி உண்மையை அறிதல் இயலும். இவ்வாறு, நமது அறிவு, அவ்வறிவிற்குக் காரணமான புறநிலை களோடு பொருந்துவது எவ்வாறு என அறிதல் 'அறிவு அளவை இயலி'ன் ஒருவகைக் கொள்கையாகும். உள்பொருள் ஒன்றெனக் கொள்வோர், அறிவு அளவை இயலில் தழுவும் கொள்கை மற்றொரு வகையாகும். ஆதலால், அறிவு அளவை இயலில் நாம் ஏற்கும் கொள்கை உலகு குறித்தோ, உள்பொருள் குறித்தோ, கொள்ளும் கொள்கையைச் சார்ந்தே விளங்கக் காண்கிறோம். அறிவு அளவை இயலும் அடிப்படைத் தத்துவ இயலும் ஒன்றோ டொன்று பின்னிப் பிணைந்து விளங்குகின்றன. இவ்விரு இயல் களும் கருதுகின்ற பிரச்சினைகள் ஒத்தனவேயாகும். ஆனல், இப் பிரச்சினைகளை அணுகி ஆராய்கின்ற முறைகளில் வேறுபாடு உண்டு. அறிவு அளவை இயல் அறிவின் நிலைகளை ஆராய்வதை வற்புறுத்துகின்றது. அடிப்படைத் தத்துவ இயல், அறிவால் அறியப்படுவதாகிய உலகு, உள்பொருள் போன்றவற்றை ஆராய்வதன் அவசியத்தை வற்புறுத்துகிறது. ஆனல், அறிவை அறியப்படும் பொருளினின்று பிரித்து அறிதல் இயலாது. ஆத லால், 'திரிபுடிசம்வித்' என்னும் மூன்று உறுப்புகள் கொண்ட நிலை அறிவு அளவை இயலுக்கு அடிப்படையானதாகும்.

## B. அறிவு அளவை இயலுள் வழக்கிலிருக்கும் சில முக்கியக் கருத்து நிலைகள்

அறிவு அளவை இயலின் பிரச்சினைகளை விளக்குமுன் சில முக்கியக் கருத்து முறைகளைச் சிறிதளவேனும் அறிதல் வேண்டும். எனவே, அவற்றைக் குறிப்பாக இங்கு ஆராய்வோம்.

(i) ஆட்சிக் கொள்கை [ஆதிக்கக் கொள்கை (Authoritarianism) : சமயம் எங்கெங்கு ஆட்சி செலுத்தியதோ அங்கங்கு இக் கொள்கை மிக்க இடம் பெற்று வந்தது என்று வரலாறு காட்டுகின்றது. அன்றாட வாழ்க்கையிலும் இது கையாளப்படுகிறது. நாம் ஒருவகைக் கருத்தை ஏற்பதற்குக் காரணம் பல இருக்கலாம்.

(1) அவற்றுள் ஒன்று அக் கருத்து மதிப்பிற்கு உரியவர்களால் கொள்ளப்பெறுகிறது என்பதாகும். அறிவின் ஏற்புடைமை, அதனின் ஆட்சியினால், மதிப்பு மிக்கார் ஆதரவினால் அமைவது என்று இக் கொள்கை கருதுகின்றது. பொதுவாக மனிதன் பிறர் கருத்துகளை ஏற்பவன். தான் பெறுகின்ற கருத்துகள் அனைத்தையும் சரிபார்த்த பின்னரே ஏற்பது என்பது இயலாததாகும். அதற்குத் தேவையான நேரமோ, திறமையோ, அக்கறையோ யாவர்க்கும் அமைவது என்பது இயலாது. ஆதலின் சில கருத்துகளை அவற்றின் ஆட்சியை நோக்கி மனிதன் ஏற்கலானான். கொள்கைகளின் தகுதியை, உண்மையை அளக்கும் அளவுகோல்கள் சில உள என்பர். ஒரு கருத்து எங்கும் பரவியிருக்குமானால் ஏற்புடையதாகும் என்பர்.

(2) மக்களில் பெரும்பாலோர் ஒரு கொள்கையை ஒப்புக் கொண்டால் அக் கொள்கை ஏற்புடையதாகும் என்பர். நமது அன்றாட வாழ்வில் ஒழுகலாறு குறித்து நாம் கொள்ளும் கருத்துகள் பெரும்பான்மையினரால் போற்றப்பெறுகின்ற அடிப்படையைக் கொண்டனவாகும். நமது தேசிய வாழ்வில் நாம் கொள்ளும் சில கருத்துகள் அல்லது உளச் சார்புகள் பலரால் ஏற்கப்பெறுகின்ற காரணத்தால் தகுதி பெறுகின்றன. இவ்வாறு பலரால் ஏற்கப்படுவது என்பது ஓர் அளவுகோலாகக் கொள்ளுதற்கு உரியதன்று. 'மக்கட் கருத்து இறைவனின் கருத்தாகும்' என்று ஒரு கொள்கை உண்டு. பெரும்பாலும் இக் கொள்கை பிழையானதாகும். வரலாற்றை நாம் ஊன்றிப் பார்க்கும்போது இவ்வுண்மை புலப்படும். பெரும்பான்மைக் கருத்துப் பிழைபடுவதைச் சில சமயங்களில் நாம் காண்கிறோம். முற்காலத்தில் பூமி

தட்டை வடிவமானது என்ற கருத்து நிலவியது. இக் கருத்தைப் பலர் கொண்டிருந்தனர். ஆனுல், இக் கருத்துப் பிழையான தாகும். பெரும்பான்மையோர் இக் கருத்தைக் கொண்டிருந்த காரணம்பற்றியே இதனை ஏற்பதற்கில்லை.

(3) சில கருத்துகள் நெடுங்காலமாக வழங்கி வருகின்றன. இவை நெடிது நிலவுகின்ற காரணம்பற்றியே ஏற்கத்தக்கன என்று சிலர் வாதிடலாம். நெடிது நிலவுதற்குக் காரணம் இருத்தல் வேண்டும். அக் காரணம்பற்றியே சில மூடப் பழக்க வழக்கங்கள் நம்மிடை நிலவி வருகின்றன. இங்கு நாம் கருத வேண்டுவது யாதெனில், மூடப் பழக்க வழக்கங்களின் நீண்டகால ஆட்சியே அவற்றை நாம் ஏற்குமாறு செய்கின்றது. ஆனுல், மூடப் பழக்க வழக்கங்கள் நிலவுவதற்கு உரிய வேறு காரணம் (கால நீட்சியன்றி) இருப்பதாகக் கொள்வது பொருந்தாது.

(4) சில கருத்துகள் தக்கோரால் விளக்கப்பெறுகின்றன. அக் கருத்துகள் தகுதியுடையவரால் ஏற்றம் பெறுகின்றன. பல நோய்களைத் தீர்ப்பதில் வெற்றிகண்ட, அனுபவம் வாய்ந்த, அறிவு சான்ற மருத்துவர், ஒருவனது நோய் குறித்துக் கூறுவதை நாம் தயக்கமின்றி ஏற்கிருேம். காரணம் இவனது நோயினை இன்னது என நாடி உரைப்பவர் புகழ்வாய்ந்த மருத்துவர் என்பதாலேயாகும். இதேபோல சில உண்மைகள் விஞ்ஞானப் புகழ் பெற்ற விஞ்ஞானிகளால் விளக்கப்பெறுகின்றதால் ஏற்புடையன வாகின்றன. வேறு சில உண்மைகளை நாம் போற்றும் ஆசிரியர்கள் கூறுவதால் ஏற்கின்ருேம். சமய உலகிலே சில கொள்கைகள் நாம் போற்றும் சமயப் பெரியோரால் எடுத்து உரைக்கப்பெறுகின்ற காரணத்தினுலேயே ஏற்புடையன என்கிருேம். தக்கோர் கூறுவன வற்றைத் தகுதி வாய்ந்த மொழியென—'ஆப்த வசனம்' எனப் போற்றுகிருேம். இதனை இந்தியத் தத்துவம் சப்தபிரமாணம் என்று குறிக்கும். இதனை ஆகம அளவை என்றும், உரை அளவை என்றும் வழங்குவர். ஆன்ருேர், உலகு குறித்த உண்மைகளையும் உலகு கடந்த உண்மைகளையும் உரைக்கலாம். ஆன்ருேர் இவ்வுண்மைகளைப் புலன் அறிவுகொண்டு அறிவதில்லை. அக உணர்வினுல் தெளிகின்றனர். ஒரு துறையில் தேர்ச்சி உடைய ஒருவர் அத்துறை குறித்த உண்மைகளை உறுதியுடன் உரைக்கலாம். நாமும் அத்துறை குறித்த உண்மைகளை அவர் உரைக்கின்ற காரணத்தால் ஏற்கலாம். ஆனுல், ஒரு துறையில் உள்ள தேர்ச்சி பிற துறைகளிலும் அமையும் எனக் கொள்வது எங்ஙனம் பொருந்தும்? சமய நூல்கள் விஞ்ஞான உண்மைகளை விளக்குதல்

எவ்வாறு? அரசியல் தலைவர்கள் தம் துறைகட்கு அயலான துறைகளது உண்மைகளைக் குறித்து உரைத்தல் இயலுமோ?

ஆட்சி, தகுதி, பலர் ஏற்பு, கால நீடிப்பு ஆகியவற்றை அளவு கோல்களாகக் கொண்டு நாம் ஒரு கருத்தை ஏற்க இயலாது. இவ் அளவுகோல்கள் பிழையுடையனவாதலை நாம் அவ்வப்பொழுது வாழ்க்கையிலே காண்கின்றோம். ஆட்சிக் கொள்கை அல்லது ஆதிக்கக் கொள்கை அறிவு ஆராய்ச்சி இயலுள் ஒரு வலுவான கொள்கையெனக் கூறுவதற்கு இயலாது. அறிவு குறித்த கொள்கையாக இக் கொள்கை திகழ்தல் இயலாது. இரு வேறு கொள்கைகள் தகுதியின் அடிப்படையில் வலியுறுத்தப்பெறுமேல், எக் காரணம் கொண்டு நாம் ஒன்றை ஏற்பது? மற்றொன்றை மறுப்பது? ஏற்பதற்கு உரிய காரணம் யாதாக விளங்கவேண்டும்? விஞ்ஞானம், கலை, அரசியல், சமயம் ஆகிய துறைகளுள்ளும் பிறவற்றிலும் முரண்படும் கருத்துகள் விளங்குகின்றன. இவற்றுள் தக்கனவற்றை, ஏற்புடையனவற்றைத் தேர்வதற்கு உரிய அளவுகோலாக ஆதிக்கம் விளங்காது. சில சமயங்களில் சில கருத்துகளை ஏற்கும்போது ஆதிக்கத்தைக் கருதியே ஏற்கிறோம்; அவற்றின் உண்மையை நம்புகிறோம்; இவ்வாறு ஏற்றல், நம்புதல் துணிகரமேயாகும். உண்மை நாட்டத்திற்கு ஆதிக்கம் பெரிதும் துணை செய்யாது. ஆதிக்கத்தின் அடிப்படையில் அறிவன வற்றை அறிவு, அனுபவம் ஆகியவற்றின் துணைகொண்டு தெளிதலே உண்மை அறிவிற்கு வேண்டுவதாகும்.

(ii) **ஐயக் கொள்கை (Scepticism);** ஐயம், திரிபு இன்றித் திட்டமாக ஏற்கத்தக்க அறிவு என்பது ஏதும் இல்லை என்று ஐயக் கொள்கையினர் கூறுகின்றனர். உண்மை அறிவே பெறுதற்கு இயலாது என்று ஐயக்கொள்கையினர் மறுத்துவிடுவதால் சிக்கல்கள் தீர்ந்துவிடுகின்றன. ஏனெனில், பிரச்சினைகள் ஒழிந்த இடத்து அறிவு ஆராய்ச்சிக்கு இடம் இல்லை. தத்துவ ஆராய்ச்சியின் வரலாற்றை நோக்குமிடத்து 'ஐயக் கொள்கை' அவ்வப்பொழுது தோன்றி மக்களிடையே ஆதரவு பெற்றதாகத் தெரிகிறது. இந்நாளிலும் ஐயக் கொள்கையைத் தழுவுவோர் உளர். அக்கொள் கையை விளக்கும் நூல்களும் எழுதப்பெறுகின்றன. இந்நிலையில் ஐயக் கொள்கை மக்கள் மனத்தைக் கவர்வது ஏன்? என்ற கேள்வி எழுகிறது. இதனைக் கருதுதல் வேண்டும். பல்வேறு அறிவுத் துறைகளில் வல்லுநர் நுணுகிய ஆராய்ச்சியின் பயனாகப் பல உண்மைகளைத் தேறுகின்றனர். இவ்வுண்மைகளுள் சில ஒன்றோ டொன்று ஒவ்வாது முரணுகின்றன. இவ்வாறு முரணுதல் துறை தோறும் நாம் காணலாம். பல்வேறு அறிஞரிடையே கருத்து

வேறுபாடு நிலவுவது வெளிப்படை. இவ்வகையில் அறிஞர்களிடையே கருத்து வேறுபாடும், கொள்கைகளிடையே முரண்பாடும் நிலவக் காணும்பொழுது பொதுமக்கள் எவ்வாறு உண்மைகளை நாடுதலும் துணிதலும் இயலும்? ஐயக் கொள்கையினர் இத்தகைய நிலையைக் கருதுகின்றபொழுது 'அறிவே நாம் அடைதற்கு உரியது அன்று' என்ற முடிவிற்கு வந்துவிடுகின்றனர். அல்லது எதையும் திடமாக நம்புதற்கு இயலாது என்ற நிலையைக் கொள்வாராகின்றனர். எல்லோராலும் ஆராய்ந்து உண்மையைத் துணிதல் என்பது இயலாததாகும். துறைதோறும் காணப்படும் கருத்து வேறுபாடுகள் கொண்டு 'உறுதியான உண்மை என்பதே கிடையாது; அதை நாம் பெறவும் இயலாது' என்ற முடிவிற்கு வருவது பொருந்தாததாகும். துறைதோறும் கருத்து வேற்றுமை இருந்து வருவது உண்மையே எனினும், மக்கள் எதிர்காலத்தில் திட்டமான அறிவைப் பெறமாட்டார்கள் என்று ஏன் ஐயம் கொள்ளல் வேண்டும்? கருத்து வேறுபாடுகள் அறிவு வளர்ச்சிக்கு வேண்டுவன. கருத்து வேறுபாடு இல்லாத இடத்து அறிவு வளர்ச்சி இல்லை என்று துணிந்து கூறலாம். விஞ்ஞானத்தின் வரலாற்றிலே உண்மைகள் மறுக்கப்பெறுதலையும், புதிய உண்மைகள் நிறுவப்பெறுதலையும் நாம் காண்கிறோம். இதனால் நாம் அறியும் உண்மை யாதெனில் உண்மைகள் தோன்றுகின்ற காலத்திற்கு ஏற்பச் சில ஆதாரங்களைக் கொண்டு விளங்கும். பின்னே, வேறு ஆதாரங்கள் கிடைக்கும்பொழுது, முன்னே கொள்ளப்பெற்ற உண்மைகள் மறுக்கப்பெறுகின்றன. இவ்வாறு நிகழ்வதை நாம் மறந்து மனிதன் உறுதியான, மறுக்க முடியாத உண்மைகளைக் கண்டறியவில்லை என்று கூறுவது பொருந்தாது. எடுத்துக்காட்டு ஒன்றைக் கருதுவோம். இப் பூமி ஒரு காலத்தில் அண்டங்கட்கெல்லாம் நடுவணதாகக் கருதப்பெற்றது. பின்னர், இக் கருத்துப் பிழை உடையது என அறியப்பெற்றது. சூரியனே நடுவணதாக விளங்குகின்றதென்னும் உண்மை காணப்பெற்றது. இவ்வாறு புதிய உண்மைகளின் தேர்ச்சி, வான இயலில் நாம் காண்பது போல அறிவுத் துறைகள் ஒவ்வொன்றிலும் நாம் காண்பதற்கு உரியனவாகப் பல உண்மைகள் விளங்குகின்றன. புதிய ஆதாரங்கள் அறியப்பெறும்பொழுது பழைய கொள்கைகள் மாற்றம் கொள்ளும். விஞ்ஞானி, புதிய உண்மைகளை அறியுமிடத்து, தான் கொண்ட கொள்கைகளை மாற்றியமைக்கத் தயங்குவதே இல்லை. உண்மை நாட்டமே விஞ்ஞானியின் குறிக்கோளாகும்.

ஐயக் கொள்கையினர் தங்களது கொள்கையை நிலைநாட்டப் பயன்படுத்தும் மற்றொரு முறை 'விவாத முறை'யாகும்.

இம்முறை எளிதில் பிறர் கருத்தை ஓர் அளவிற்கு இசைவிக்கும். இவ் விவாத முறைக்கு அடிப்படையாக விளங்குவது சிந்தனை யாகும். சில பேருண்மைகளைக் கருதுகின்றபோது அறிவு தனது ஆற்றல் இன்மையை உணர்கின்றது. அறிவு தொழிற்படும் பொழுது முரண்நிலைகளும் மாறுபாடுகளும் எதிர்ப்படுவதை அறிய லாம். இவ்வாறு தோன்றுகின்ற இடர்ப்பாடுகளைக் கொண்டு அறிவு நமக்கு உண்மைகளைத் தரவல்லது எனத் துணிதல் பொருத்தமன்று.

பண்டைய கிரேக்க மெய்ப்பொருள் அறிஞராகிய ஃஸீனோ (Zeno) என்பார் ஐயக் கொள்கையைத் தழுவியவர் அல்லர். எனினும், புகழ்வாய்ந்த சில முரணுரைகளை அமைத்துள்ளார். இயக்கம் குறித்து அவர் அமைத்த முரண் உரை ஒன்றைக் கருது வோம். இயக்கம் என்பது யாது? இயக்கம் என்பதைக் காலத்தில் நிகழும் பொருள்களின் இடப் பெயர்ச்சி என விளக்கு கின்றனர். இயக்கம் இடத்தில் மட்டும் நிகழ்வது ஒன்றன்று; அல்லது காலத்தில் மட்டும் நிகழ்வது ஒன்றன்று. அது இட, காலக் கூறுகளையும் தொடர்புபடுத்தி நிகழ்வதாகும். அம்பானது கொள்ளுகின்ற இயக்கத்தில் ஒவ்வொரு இடத்திலும் அசைவற்று இருக்குமானால், அது இயக்கமே கொள்ளாது. இயங்கும் பொருள் செல் நெறியில் குறித்த ஒரு புள்ளியாகும். நுண்ணிய இடத்தில் நிலைக்கிறது என்று கொண்டால் அச்செல் நெறியை அந் நுண்ணிய இடத்தில் இரண்டாகக் கத்தரி கொண்டு கத்தரிப்பதாகும். ஐயக் கொள்கையினரது மற்றொரு வழக்குரை எளிதில் தவிர்க்கக்கூடியது அன்று. அக் கொள்கை கூறுவதாவது உண்மை உலகைப்பற்றிய மெய்யறிவு நமக்குக் கிட்டாது. கிட்டினாலும் அது உண்மை என்று நிச்சயிக்க இயலாது; ஏனெனில், நாம் கேட்கும் ஒலிகள், காணும் நிறங்கள், உணரும் வடிவங்கள், வன்மை மென்மைகள், நுகரும் மணங்கள், சுவைக்கும் சுவைகள் ஆகிய புலனுகர்ச்சிகள் யாவும் நம்மிடத்து விளையும் மாற்றங் களேயாகும். இம் மாற்றங்கள் புறப்பொருள்களின் தொடர் பினால் விளைவனவாகும். இம் மாற்றங்கள் புற உலகிலே நிகழ்வன அல்ல. ஒரு மலர், நல்ல மணத்தைப் பரப்புகிறது. அம் மணத்தை நாம் நுகர்கிறோம். அம் மண நுகர்வு நமது மூக்கின் துணையினால் அமைவதாகும். இந் நுகர்வு மலரிடத்து அமைவ தற்கு இல்லை. முள் தைக்கின்றது, நோய் செய்கின்றது. நோய் உணர்வு நம்மிடத்து நிகழ்கின்றதேயன்றி முள்ளிடத்து அமைவ தன்று. இதைப்போல் புலன் அனுபவங்கள் யாவும் நம்மிடத்து விளைவன; ஆதலால், புற உலகில் நிகழ்வனவற்றை நாம் உள்ள வாறு அறிகிறோம் என்று கூற இடமில்லை. புற உலகின் நிகழ்ச்சி

களை, பொருள்களை நாம் அறியும்போது அறிகின்ற நிகழ்ச்சி காரணமாக, நமது காட்சிகள் பலவும் திரிபுறுகின்றன; மாற்றங் கொள்கின்றன. ஆதலால், புற உலகு நமது காட்சியில் உள்ளவாறு பிரதிபலிப்பது இல்லை.

நமது இந்திரியங்கள், அறிகருவிகள், புலன்கள் எல்லைக் குட்பட்டே தொழில் புரிகின்றன. மிக நுண்ணிய வடிவங்களைக் கருவிகளின் உதவியின்றிக் காண முடியாது. உருப்பெருக்கி (microscope) கொண்டு சிறிய நுண்ணிய உயிர்களை, பொருள்களைக் காண்கிறோம். மிகவும் தொலைவில் உள்ள பொருள்களைக் காணுவதற்குத் தொலைநோக்கி (telescope) வேண்டும். மேலும், தொலைவில் உள்ள பொருள்கள் சிறியனவாகத் தோன்றுகின்றன. மிகுந்த உயரத்திலிருந்து பார்க்கும்போது பொருள்கள் சிறியனவாகத் தோன்றும். கண் அமைப்பிலே நிற வேறுபாடுகளை உணர்த்தும் உறுப்புகள் (rods and cones) உண்டு. இவ் வுறுப்புகள் நன்றாக வளர்ச்சி அடையாத நிலையில் வேறுபாடுகளை உணர இயலாது. செவிப் புலனின் ஆற்றல் கடந்த ஒலிகள் (ultra-sonics) உண்டு. நிறமாலையில் நமது கண்ணால் காணுதற்கு இயலாத நிறம் ஒன்று ஊதாவைக் (ultraviolet) கடந்து விளங்குகிறது. இதேபோல் சிவப்பு நிறத்திற்கும் (infrared) கீழே நிறம் ஒன்று விளங்குகிறது. இவைபோன்ற பல உண்மைகளை நமது புலன்கள் நேராக அறிய முடியாது. கருவிகளின் துணைகொண்டே அவற்றை அறிய வேண்டும். கருவிகளும் கண் முதலிய பொறிகளும் ஒன்றோடொன்று ஒவ்வும் வகையில் திறம்படத் தொழிற்பட்டாலன்றி அறிவு தகுதி பெற்ற, ஏற்புடைய அறிவாக அமைதல் இயலாது. புற உலகு நாம் அறிகின்ற வகையிலே பல்வகை மாற்றங்கட்கு உட்படுவதைக் காண்கிறோம். புற உலகு குறித்த நமது அறிவு, மாற்றங்கட்கு உட்படுகின்ற நிலையில் உண்மை அறிவு ஆகாது. அனுபவ அறிவு அனைத்துமே உறுதியாக நம்பக்கூடியதன்று என்று ஐயக் கொள்கையினர் கூறுவது அறிவு அமைவதையே ஐயுறுவதாகும்.

நமது மனநிலையைக்கொண்டு நோக்குமிடத்து ஐயக் கொள்கை வலியுறுகிறது என்று கூறுவர். அஃதெவ்வாறு எனில், 'எத்தருணத்திலும் நாம் நிலைத்த நிகழ்காலத்தில் உள்ளோம், 'எதிர்வு' என்பது இப்போது நாம் எதிர்பார்க்கும் நிலையாகும். இறப்பு கழிந்தகாலம், தற்போது நமது 'நினைவாகும்' நினைவு அறிவு அமைவதற்குரிய உறுதியான ஆதாரமன்று. எதிர்காலம் பெரும்பாலும் கற்பனையே ஆகும். எனவே, கழிந்த காலத்தினின்று பெறப்பெற்ற நமது அறிவு 'எதிர்வு யாதாக இருக்கும்' என எதிர்

நோக்கும் அறிவாக எவ்வாறு இருக்க முடியும். பெயரளவில்தான் இதனை அறிவு எனக் கருதுதல் இயலும் (இவ்வழக்குரைகளால் பொதுவாக ஐயக்கொள்கையை நிருபிக்க இயலாது). அக்கொள்கை ஒப்புக்கொள்ளத்தக்கது அன்று எனினும், அதைப் பயனற்ற தெனத் தள்ளிவிடல் ஆகாது. ஆராயாது எதையும் ஏற்கும் உளப் பாங்கிற்கும், தான் கொண்ட முடிபே சிறந்த முடிபு என்ற பிடிவாத மனப்பான்மையைத் தடுப்பதற்கும், தக்க மாற்றமைப்பு களாக 'ஐயக்கொள்கை' பயன்படுகிறது. எனினும், அறிவு நிகழ்வையே ஐயுறுதல் நாம் ஏற்கத்தக்கது அன்று. உண்மையாக, கருத்துரைகளைக் காண வல்ல திறனை மறுத்தல் ஏன்? ஆனல், இங்கு வியக்கத்தக்க நிலை ஒன்று விளங்குகிறது. ஐயுறுவோர் தம் அறிவாற்றலைமட்டும் ஐயுறுவதில்லை. தாம் கொள்ளும் முடிவு களும் பிறரால் ஐயுறக் கூடியன என்பதை மறுக்கின்றனர். அறிவின் அமைப்பைத் தகர்க்கின்ற ஒவ்வொரு கணமும் அவ்வமைப்பை நம்பியே அதன் ஆதாரத்தைக் கொண்டே வழக்குரைகளை விளக்கு கின்றனர்.

நாம் சாதாரணமாக அறிவு பெறுகின்ற வாயில்களான புலக் காட்சி, சிந்தனை போன்றவைகளைச் சிறந்த அறிவை வழங்குவன வாகக் கருதுவதற்கு இல்லை. இக் காட்சிகளினல் அமையும் அறிவு பிழைபடும் அறிவாகவும், முரணும் அறிவாகவும், மாற்றங்கொள் அறிவாகவும் விளங்குவதால் இவ்வாயில்களுக்கு அயலான பிறி தொரு வாயில் உண்டு எனக் கொள்வோர் சிலர். இவ்வாயில் அகக் காட்சி, அகவுணர்வு என்று பெயர் பெறுகிறது; மறைபொருள் அறிவு எனவும், அனுபூதி அறிவு எனவும் வழங்குவர். நேர்க் காட்சியிலே புலனகும் உண்மைகள் உள என்று இக்கொள்கை யாளர் கூறுகின்றனர். புலன்களின் துணை இன்றியே உண்மைகளைத் தேர்தல் கூடும் என்பது இவர்கள் கருத்தாகும். அக உணர்வில் அமைவன, புற உலகிற்குப் பொருந்துவன என்றும் கூறுவர். ஆனல், அகவுணர்வில் தெளிவனவெல்லாம் பெரும்பாலும் உலகு க்கடந்த உண்மைகள் ஆகும். அகக் காட்சியில் இறையொடு அல்லது உலகொடு ஒருமை உணர்வு நேர்கிறது என்று கூறுவது சரியான விளக்கம் அன்று. சமயத் துறையில் பெரியோர் சிலர் இத்தகைய அகக் காட்சி, ஒருமை உணர்வு பெற்றுள்ளமையை அவர்தம் வாக்கால் அறிகின்றோம். ஆனல், இத்தகைய அகவுணர்வு எல்லோருக்கும் நிகழக்கூடியதன்று.

இத்தகைய கொள்கை உண்மையா, பிழையா என்று விவாதம் செய்வது வேண்டுவது அன்று. அறிவு அளவை இயலில் முக்கியமாக விளங்கும் சில பிரச்சினைகளை அகக் காட்சி கருதாது

விடுகின்றது எனலாம். (புற உலகு பொய்ம்மை என்னும்) விஞ்ஞானம் இவ்வுலகை ஆராய்கின்றது. பல உண்மைகளை அறிகின்றது. மெய்ப்பொருள் இயல் விஞ்ஞானம் தருகின்ற உண்மைகளைப் பகுத்து ஆய்ந்து, விளக்கித் தொகுப்புக் காட்சியினை வழங்குகிறது. ஆதலால், அறிவு அளவை இயலில் விளங்கும் பிரச்சினைகளை அகக் காட்சிக் கொள்கை கருதாது விடுகின்றது; அதற்கு அயலானவற்றைக் கருதுகின்றது என்று கூறலாம்.

(iii) உள்ளுணர்வுக் கொள்கை (Intuition): மேற்குறித்த கொள்கையோடு தொடர்புடைய மற்றொரு கொள்கை உள் உணர்வுக் கொள்கையாகும். இதனைத் தனித்த தொரு கொள்கையாகக் கருதவேண்டுவது இல்லை. உள் உணர்வு அனைத்து வகை அறிவிலும் முக்கியப் பங்கு பெறுகிறது. இதனை இந்திய மெய்ப்பொருள் இயலார் 'யோகக் காட்சி' என்பர். பிரஞ்சு நாட்டுத் தத்துவ ஞானியாக விளங்கிய பெர்க்ஸன் (Bergson) என்பார் அக உணர்வைப் (intuition) பெரிதும் வற்புறுத்தியுள்ளார். சிந்தனையின் வளர்ச்சியிலே கருத்தமைவுகள் தோன்றுகின்றன. கருத்தமைவுகள் இன்றி அறிவு வளர்ச்சி தோன்றாது. துறைதோறும் கருத்தமைவுகள் தோன்றுவதைக் காண்கிறோம். 'உள்ளது சிறத்தல்' அல்லது 'பரிணாமம்' என்பது ஒரு கருத்தமைவாகும். இக் கருத்தமைவு உயிரியல் துறையிலே தோன்றியது எனினும் பல்வேறு துறைகளில் பயிலப்பெறுவதைக் காண்கிறோம். சமுதாய வளர்ச்சியை, அறிவு வளர்ச்சியை, உள்ளத்தின் வளர்ச்சியை, கொள்கைகளின் வளர்ச்சியை, பரிணாம முறைப்படி (evolution) கருதுதல் இயலும். ஆதலால், இத்தகைய கருத்தமைவுகள் அறிவு வளர்ச்சிக்கு இன்றியமையாதவை. மேலும், கருத்தியல்பான எண்ணங்கள் விஞ்ஞானத் துறைகளின் வளர்ச்சிக்குத் தேவையானவை. கருத்தமைவுகளும், கருத்தியல் எண்ணங்களும் விஞ்ஞான வளர்ச்சிக்குத் துணை செய்வதை நாம் காணும்பொழுது எவ்வாறு இவற்றை நீக்கி அகக் காட்சிக்கு முதன்மையான இடத்தைத் தருவது? அகக் காட்சியினர் சிந்தனை வாயிலாகக் கருத்தமைவுகளின் துணைகொண்டு எழுகின்ற அறிவு உண்மை உடையதன்று என்று மறுக்கின்றனர். பொருள்களின் உண்மை நிலையை உணர்த்துவன அல்ல என்றும், பிழைபட உணர்த்துகின்றன என்றும் கூறி, உள்ளுணர்வே நமக்கு உண்மை அறிவை வழங்கத்தக்கதாகும் என்று கூறுகின்றனர்.

## C. அறிவின் வாயில்கள் (SOURCES OF KNOWLEDGE)

பிரமாணம் என்ற சொல்லிற்குப் பொருள் யாது? 'அளத்தல்' என்ற பொருளைத் தருகின்ற வேரின் அடியாகப் பிரமாணம் என்ற

சொல் பிறக்கின்றது. பின்னர் 'எதைக்கொண்டு அளக்கின்றேமோ அது' என்ற பொருளைத் தருவதாகிறது. அளத்தற்குரிய கருவி எனவும் பொருள்படும். சுருங்க, 'அளவை' எனக் குறிக்கலாம். இந்தியத் தத்துவத்தில் பிரமாணங்களின் நோக்கம் யாதெ என அறிதற்குப் பிரமாணம் என்ற சொல்லின் பொருள் அறிவு துணை செய்யும். நாம் பெறுகின்ற அறிவு சரியா பிழையா என அளந்து அறிவது பிரமாணத்தின் நோக்கமாகும். தற்காலத் தத்துவ சாத்திரத்தின் நோக்கமும் இந்தியத் தத்துவத்தில் பிரமாணங்களின் நோக்கமும் ஒன்றாக விளங்குதலைக் காண்கிறோம். இவ்வொற்றுமையை மேலைநாட்டு அறிஞராகிய டாய்சன் (Deussen) விளக்குகின்றார்.[1] 'நியாய சூத்திரத்தை' வகுத்தவர் கௌதமர். அச் சூத்திரத்திற்கு வாத்சியாயனர் பேருரை கண்டார். முதற் சூத்திரத்தின் உரையில் வாத்சியாயனர் மெய்ப்பொருளியலின் நோக்கத்தைத் தெளிவுபடுத்தினர். அனுபவத்தில் அமைவனவற்றைப் பிரமாணங்களின்மூலம் ஆராய்ந்து அறிதல் அந் நோக்கம் என வாத்சியாயனர் குறிக்கின்றார். ஆதலால், பிரமாணம் 'அறிவு பெறுதற்கு வாயி'லாக விளங்குவது என்ற வரையறை அமைகின்றது. வேறு சொற்களில் கூறினல், அறிவான் ஒரு பொருளை அறிதற்குப் பயன்படுத்துகின்ற சாதனம் பிரமாணமாகும். மற்றொரு நியாய வல்லுனர் பிரமாணத்தை 'அறிவிற்கு உரிய காரணம்' என்று கருதுகிறார். இந்தியத் தத்துவ தரிசனங்கள் பிரமாணங்களை வெவ்வேறுவகையாகக் கருதுகின்றன. பிரமாணங்களின் தன்மையையும் பிரமாணங்களின் எண்ணிக்கையையும் குறித்துத் தத்துவ தரிசனங்கள் பிரத்தியட்சம், அனுமானம், சப்தபிரமாணம் ஆகிய மூன்று பிரமாணங்களை ஏற்கின்றன. நாம் இவற்றைத் தனித்தனியே கருதுவோம். பின்னர், வேறு சில பிரமாணங்களைக் குறித்து ஓரளவிற்கு அறிவது பொருந்தும்.

**வாயிற் காட்சி :** புலன், இந்திரியம், வாயில் ஆகிய மூன்று சொற்களும் ஒரு பொருளன. மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐந்து இந்திரியங்களின் வாயிலாக அறிவது வாயிற் காட்சி அல்லது இந்திரியக் காட்சி என்று வழங்கும். புலன்களில் முதலில் பதிவுகளே ஏற்படுகின்றன. பின்னர், புலப்பதிவுகள் வகைப் படுத்தப்பெற்ற வெவ்வேறு பொருள்கட்கு உரியனவாக அறியப் பெறுகின்றன. புலப்பதிவுகளின் விளக்கமே காட்சி எனப்படும். இதனை இந்தியத் தத்துவ இயல் பிரத்தியட்சம் என்று வழங்கும். காட்சி எவ்வாறு நேர்கிறது? இந்திரியத்திற்கும் அதற்குரிய பொருளுக்கும் தொடர்பு ஏற்படும்போது காட்சி ஏற்படுகிறது. புலன்களின் வாயிலாக அமையும் காட்சி பிறிதொன்றின் உதவியை நாடாது, நேராக, உடனுக அறிவை அளிக்கவல்லதாகும். உடனுக

அறிவனவற்றை உணர்த்துகின்ற இந்த அம்சமும் காட்சியின் இயற்கையாகும். ஆதலால், பிரத்தியட்சம் உடனுகை அறியும் அறிவு என்று காங்கேசர் விளக்குகின்முர். ஓர் எடுத்துக்காட்டின் வாயிலாக இவ்வுண்மையை அறிவோம். நமக்கு எதிரில் ஒரு மரம் ஓங்கி வளர்ந்துள்ளது. பிற பொருள்களும் நமக்கு முன்னுல் உள்ளன. இப்பொருள்களை நோக்கித் தனித்தனியே இது மரம் என்றும், இது படம் என்றும், இது சுவர் என்றும் உணரும்போது, மற்றவற்றின் துணையின்றி நாம் பொருள்களை நேராக அறிகிறோம். இது நேர்க் காட்சியாகும். மற்றைய பிரமாணங்கள் ஒன்றின் வாயிலாகவே தொழிற்படுகின்றன. அனுமானம், உபமானம், சப்தபிரமாணம் ஆகியவை முறையே மேற்கோள்கள் (testimony), ஒப்புமை, மரபு, ஆன்றோர் மொழி ஆகியவற்றை அடிப்படையாக வைத்தே தொழிற்படுவனவாகும். ஆனுல், பிரத்தியட்சமோ நேராக, உடனுக அறியவல்லதாகும். இவ் வேற்றுமையை உணர்த்தவே அறிவை 'பரோக்ஷ' (Paroksa) ஞானம் என்றும், அபரோக்ஷ (Aparoksa) ஞானம் என்றும் இருவகைப்படுத்தினர். முன்னது ஒன்றின் மூலமாகப் பெறும் அறிவு (Mediate Knowledge) என்றும், பின்னது நேராக எழும் அறிவு என்றும் கூறுவர்.

ஐவகைப் பொறிகளின்மூலம் ஐம்புலன்கள் புறவுலகோடு கொள்கின்ற உறவால் எழுகின்ற அறிவு புற அறிவாகும். இதனை 'பாஹ்ய ஞானம்' என்பர். மேலும், அந்தக்கரணம் ஆகிய மனத்தின் வாயிலாக அகத்து அறியும் அறிவு 'அந்தர் ஞானம்' எனப்படும். இதனை 'மானச ஞானம்' எனவும் வழங்குவர். இந்தியத் தத்துவ தரிசனங்கள் 'நிர்விகற்பக் காட்சி' யெனவும், 'சவிகற்பக் காட்சி' யெனவும் வேறொரு வகையிலே காட்சியைப் பாகுபடுத்தக் காண்கிறோம். ஆனுல், இவ்விரு காட்சிகட்கும் தரிசனங்கள் தருகின்ற விளக்கத்தில் வேறுபாடு விளங்கக் காண் கிறோம். நிர்விகற்பக் காட்சியை 'எழுவாய்க் காட்சி' யெனவும், 'பொதுமைக் காட்சி' யெனவும் கூறுவர். சவிகற்பக் காட்சியைப் 'பகுத்துணர்வுக் காட்சி' யென விளக்குகின்றனர்.

அனைத்தறிவுக்கும் மூவகை நிலைகள் உள. ஒன்று அறிவான், பிரமாதா (Pramata); இரண்டு அறிபொருள் அல்லது பிரமேயம் (Prameyam); மூன்று அறிவு அல்லது பிரமிதி (Pramiti). ஆகும் 'அறிவான்' அறிவனைத்திற்கும் அடிநிலையாக அமைபவன் ஆவான். 'அறிபொருள்' நோக்கி அறிதலாகிய செயல் செலுத்தப்பெறு கிறது; நிகழ்கிறது. அறிதலாகிய செயலின் விளைவு 'அறிவாகும்'. அறிவு ஏற்புடையதாயினும், ஏற்புடையதன்றாயினும் மூன்று கூறுகளை உட்படுத்தும் என்பதை மேலே கண்டோம். இம் மூன்று

கூறுகளை அறிவான், அறிபொருள், அறிவு என்று சுருக்கிக் கூறலாம். இதனை ஞாதா, ஞாதுரு, ஞேயம் என்பர். காண்பான், காணப்படும் பொருள், காட்சி என வழங்கும் மூன்றும் இப் பாகுபாட்டையே உணர்த்தும்.

காட்சியை வேறு சில நூல்கள் நால்வகையினவாகப் பகுத்துக் கூறக் காண்கிறோம்.[1] சிவஞான சித்தியாரில் காண்டல், வாயில், மனம் தன்வேதனையோடு யோகக்காட்சியென நான்கு என்று குறிக்கப்பெறுவதைக் காண்கிறோம். காண்டல் என்பது இந்திரியக் காட்சியைக் குறிப்பதாகும். இந்திரியக் காட்சியில் தெளிந்தவற்றை மனத்திலே தெளியும்போது 'மானதக் காட்சி'யெனப் பெயர் பெறுகின்றது. தோன்றுகின்ற பொருள் சிப்பியா, வெள்ளியா, பழுதையா, பாம்பா எனத் துணியாத நிலையில் தோன்றும் அறிவு ஐயமாகும். பழுதையைப் பாம்பெனப் பிறழ்வாக உணர்வது திரிபுக்காட்சியாகும். பொருள்களோடு கொள்ளும் உறவுகளால் விளையும் இன்பதுன்ப உணர்வுகள் தன்வேதனைக் காட்சியின்பாற்படும். யோகநெறி நின்று, காலம், இடம், காரணம் முதலியவற்றால் தடையுறாதவகையில், யாவற்றையும் ஒருங்கே அகவுணர்வின்கண் தெளிவது யோகக் காட்சியாகும். மனம் புலன்களின் துணையின்றித் தொலைவில் நிகழ்வனவற்றையும், கழிந்த காலத்து நிகழ்ந்தனவற்றையும், எதிர்காலத்தில் நிகழ இருப்பனவற்றையும் இருந்த இடத்திலிருந்தே அறியுமானால், அது 'யோகக் காட்சி' அறிவாகும். காட்சியை லௌகிகக் காட்சி (Laukika) யென்றும் 'அலௌகிகக் காட்சி' (Alaukika) யென்றும் இருவகைப்படுத்திக் கூறுவதுண்டு. லௌகிகக் காட்சி சாதாரண நிலையில் உலகப் பொருள்களைப்பற்றிய அறிவாகும்; இந்திரியங்களின் வாயிலாகப் பெறுவதாகும். அலௌகிகக் காட்சி சாதாரண வழியில் அல்லாது அகவுணர்வின் வாயிலாக அமைவதாகும்.

பிரமாணங்களுள் 'அனுமானம்' என்பது பிரத்தியட்சத்திற்கு அடுத்த நிலையில் அமைவதாகும். இதனைக் 'கருதல் அளவை' யென்றும், 'வழியளவை' யென்றும் கூறுவர்.[2] தொலைவிலே சிறு

[1] தருமகீர்த்தி நால்வகைக் காட்சிகளைக் குறிக்கிறார். அவையாவன: புலக்காட்சி (Sense perception) மனோவிஞ்ஞானம் (Manasam), தன் உணர்வு (Self-consciousness), யோக உணர்வு (Yogic perception).

[2] மேலைநாட்டிலே அளவை நெறியை வகுத்தவர் கிரேக்க அறிஞராகிய அரிஸ்டாட்டல் ஆவார். பகுப்பு வழியளவை, தொகுப்பு வழியளவை என்ற இரு முறைகள் (Deduction and Induction) குறிக்கப் பெறுகின்றன. பொது உண்மையினின்று சிறப்புண்மையைப் பெறுகின்ற வழியைப் பகுப்பு வழியென்றும், தனி உண்மைகளினின்று பொது உண்மைகளைப் பெறுகின்ற வழியைத் தொகுப்பு வழியென்றும் கூறியுள்ளதை நாம் காண்கிறோம்.

குன்று ஒன்றைக் காண்கிறோம். அக் குன்றை ஊன்றிப் பார்த்ததில், அக் குன்றினின்று புகை மேலெழுவதைப் பார்க்கிறோம். நெருப்பு இன்றிப் புகையாது; புகை உளதேல் நெருப்புளதாதல் வேண்டும். நெருப்பும் புகையும் பிரிவு அற யாண்டும் உடனாக நிகழ்வன. தருக்க நூலார் இந்த எடுத்துக்காட்டைக் கொண்டு அனுமானம் எவ்வாறு நமக்கு அறிவைத் தருகின்றது என்பதை விளக்கு வார்கள். மணிமேகலை ஆசிரியர் சீத்தலைச் சாத்தனார் 'காண்டற் பொருளால் கண்டிலது உணர்தல்' என்று அனுமானத்தை மிகச் சுருக்கமாகச் சூத்திர வடிவிலே விளக்கியுள்ளார். இங்கே காணப் பெறுவது புகையாகும். புகையைக்கொண்டு அப் புகையோடு பிரிவற யாண்டும் உடனாய் நிகழ்வதாகிய நெருப்பினை நாம் ஊகிக் கிறோம். எங்கெங்கு புகையுண்டோ அங்கங்கெல்லாம் நெருப்பு உண்டு என நாம் அறிவோம். ஆதலால், இக் குன்றினிடத்துப் புகையுண்மையை அடிப்படையாகக் கொண்டு நெருப்புண்மையை ஊகிக்கிறோம். பல்வகை மட்பாண்டங்களை அவை வனையப்பெறு கின்ற இடத்தில் கண்ட ஒருவன் குயவனையும் மட்பாண்டங்களை யும் சேர்த்த நிலையில் அறிவான். பின்னே, மட்பாண்டங்களைக் காணும்பொழுது, அப் பாண்டங்களை உருவாக்கிய குயவன் ஒருவன் உளதாதல் வேண்டும் என்று ஊகிக்கிறான்.

அனுமானம் பலவகைப்படும். ஒருவன் தான் கருதுகின்ற கருத்தைத் தெளிவாக உணரும்பொருட்டு அனுமானத்தைப் பயன்படுத்தலாம். இதனைத் தன்பொருட்டு அனுமானம் (Swartha Anumana) என்பர். பிறருக்கு விளக்குதற்பொருட்டு அனுமானத்தைப் பயன்படுத்தும்போது, அது பிறர்பொருட்டு அனுமானம் (Parartha Anumana) எனப் பெயர்பெறும்.

புதிய உண்மைகளை அறிதற்கும், நிகழ்ச்சிகள் ஒன்றோடொன்று இன்றியமையாத தொடர்புடையன என்று அறிதற்கும் அனுமான அளவை துணைபுரிகின்றது. மேற்கோள்களில் அடங்கியுள்ளதையே முடிபு உணர்த்துகின்றது. எனினும், உணர்த்துகின்ற வகையில் புதிய உண்மைகள் புலனாகின்றன. மேலும், இன்றியமையாமை புலனாவதற்கு அனுமான அளவை துணைபுரிகின்றது. மேற்கோள் களில் அடங்கியுள்ளதையே முடிபு உணர்த்துகின்றது. எனினும், உணர்த்துகின்ற வகையில் புதிய உண்மைகள் புலனாகின்றன. மேலும், இன்றியமையாமை (necessity) புலனாவதற்கு அனுமான அளவை அவசியமாகும்.

உவமை (Upamana) என்ற பிரமாணம் ஒப்புமையால் பெறும் அறிவாகும். ஒரு பொருளைப்பற்றி அறியப்படும் உண்மை, மற்றொரு

பொருளோடு கொள்ளும் ஒப்புமையினின்றும் தோன்றலாம். ஓர் எடுத்துக்காட்டைக் கருதுவோம். ஒருவன் காட்டுப் பசுவைக் (கவயம்) கண்டதில்லை. காட்டுப் பசு வீட்டுப் பசுப்போல்வது என்று சொல்லக் கேட்டிருக்கிறான். ஒரு சமயம் வீட்டுப் பசுவைப் போன்ற உறுப்பு அமைப்புகள் உள்ள மிருகத்தைக் காண நேரிட்டது. இது காட்டுப் பசு என்று அறிகிறான். இங்கு உவமையறிவு தோன்ற இரு கூறுகள் தேவை. இவற்றுள் ஒன்று நன்கு அறியப்பெற்றது. மற்றொன்று, நன்கு அறியப்பெற்ற ஒன்றினோடு சில அம்சங்களில் ஒத்திருப்பது ; சில அம்சங்களில் வேறுபட்டிருப்பது. சில கூறுகளில் ஒத்திருப்பதை ஆதாரமாகக் கொண்டு வேறு கூறுகளிலும் ஒத்திருக்கும் என்று ஊகிக்கிறோம். ஒப்புமைமூலம் அடையும் முடிவுகளை எப்பொழுதும் உண்மை என்றே நம்பிவிடலாகாது. உவமையளவை சிற்சில சமயங்களில் மிக முக்கியமான உண்மைகளை நமக்குத் தருகின்றது. எனினும், பெரும்பாலும் தவறிவிடுவதைக் காணலாம். ஆகையால், நன்கு ஆராயாது உவமையால் விளையும் அறிவை ஏற்கலாகாது. பொதுவாக உவமையின் முடிவுகள் ஒப்புமையின் எண்ணிக்கையைச் சார்ந்தன அல்ல ; அதன் முக்கியத்துவத்தைச் சார்ந்தன என்று கூறலாம். உதாரணம் ஒன்றைக் கருதுவோம்: இரு பொருள்கள் பல்வேறு வகையில் ஒத்திருப்பினும் முக்கியமான வகையில் வேறுபட்டிருந்தால், அவ்வடிப்படையில் எழும் அறிவு பயனற்றதாகும். திமிங்கிலத்திற்கும் மீனுக்கும் பல ஒற்றுமைகள் இருந்தபோதிலும், சில வேறுபாடுகள் உள்ளன. ஒற்றுமைகளைக் கொண்டு நாம் எல்லாவற்றிலும் இவை ஒத்தன என்ற முடிவிற்கு வர இயலாது. திமிங்கிலமும் மீனும் பலவகைகளில் ஒத்திருப்பதைக் கொண்டு, மீனைப்போலவே திமிங்கிலமும் செதில்களினால் சுவாசிக்கின்றது எனக் கூறமுடியாது. ஏனெனில், இவ்விரண்டும் சுவாச உறுப்புகளின் அமைப்பில் மாறுபடுகின்றன. இங்கு ஓர் உண்மையை நினைவில் வைத்தல் வேண்டும்.

ஊகிக்கும் முடிவிற்கும் ஒப்புமைக்கும் நெருங்கிய தொடர்பு, காரண-காரிய உறவு இருத்தல்வேண்டும். இல்லையேல், முடிவு தவறுடையதாகும். இவ்வுண்மையை உணர்வதற்கு ஓர் எடுத்துக் காட்டைக் கருதுவோம். பூமி, தன்னைத்தானே சுற்றிவருவதோடு சூரியனையும் சுற்றிவருகிறது ; சூரியக் குடும்பத்தைச் சேர்ந்தது. இதேபோல், செவ்வாய்க் கிரகமும் தன்னைத்தான் சுற்றுவதோடு சூரியனையும் சுற்றிவருகின்றது. அக் கிரகமும் சூரிய குடும்பத்தைச் சேர்ந்ததாகும். பல நிலைகளில் பூமியும் செவ்வாய்க் கிரகமும் ஒத்தனவாக விளங்கக் கண்ட ஒருவன் பூமியிலே மக்கள் வாழ்வதைப்போலச் செவ்வாய்க் கிரகத்திலும் மக்கள் வாழ்தல்

கூடும் என ஊகிக்கின்றுன். இந்த யூகம் பொருந்தும் யூகம்தானு? மக்கள் உயிர்வாழ்வதற்கு இன்றியமையாது வேண்டுவனவாகிய நீர், காற்று, உணவுப் பொருள்கள் ஆகியவை செவ்வாய்க் கிரகத்தில் உளவா என்று அறியாத இடத்து, ஆங்கு மக்கள் வாழ்தல் கூடும் என்று எவ்வாறு துணிதல் இயலும்? ஆதலால், புற ஒற்றுமைகளை அடிப்படையாகக் கொண்டு நாம் முடிபு கொள்ளுதல் தவருகும். மேலைநாட்டு அளவை இயலார் உவம அளவையை 'அஞலஜி' (Analogy) என்பர்.

## சப்தபிரமாணம் அல்லது உரையளவை

இப் பிரமாணத்தை 'ஆகமப்' பிரமாணம் என்றும், 'ஆப்த' வசனம் என்றும் கூறுவர். நாம் நேரில் கண்டோ, கேட்டோ அறியாதனகுறித்துப் பிறரிடமிருந்து அறிகிறேம். இவ்வாறு நாம் நம்புவதற்கு உரிய செய்திகளை வழங்குவோர் தக்கோர் எனக் கருதுகிறேம். இவ்வாறு, தகுதியுடையோராகக் கருதப்பட்டவரது உரையே ஆப்தவசனமாகும். பொதுமக்களிடையே வழங்குகின்ற செய்திகள், முதுமொழிகள் முதலியன கொண்டும், வரலாற்று மரபு கொண்டும், மறை நூல்கள் கொண்டும் அறிவன உரையளவையின்பாற்படும். ஆன்றேர் உரை பிழைபடாது என்ற நம்பிக்கையின் அடிப்படையிலே அவர்களது உரைகள் போற்றப் பெறுகின்றன.

மேலே கண்ட நான்கு பிரமாணங்களோடு சிலர் அருத்தாபத்தி (Arthapatti), அனுபலப்தி (Anupalabdi) என்ற வேறு இரண்டையும் சேர்த்துக் கருதுகின்றனர். வேறு சிலர் ஐதிகத்தையும் (மரபு, உலகுரை) பிரமாணமெனக் கொள்வர். ஐதிகம் சப்தபிரமாணத்தில் அடங்கும். தவிர்க்கவொணுத ஈருண்மைகளிடையே முரண்பாடு காணும்போது, அவற்றுள் ஒன்றையும் மறுக்காமல் முரண்பாட்டை எவ்வாறு தவிர்ப்பது என்று சிந்தித்து, பிறிதொன்றை யூகித்து, அதன்மூலமாக முரண்படுவனவற்றைப் பொருந்துமாறு காணுதல் அருத்தாபத்தியாகும். எடுத்துக்காட்டு ஒன்றைக் கருதுவோம். பருமையாக உள்ள தேவதத்தன் பகலில் உணவு கொள்வதில்லை. இவன் பகலில் உணவு கொள்ளாதது உறுதியாக அறியப்படுகிறது. இதேபோல அவனது பருமையும் உறுதியேயாகும். உடற் பருமைக்கு உணவு இன்றியமையாதது என்பதும் உறுதி. பருமையும் பகல் உண்ணுமையும் பொருந்தாதனவாகும். உண்ணுது பருத்திருத்தல் இயலாது. ஆதலால், இரவிலே அவன் உணவு கொள்பவன் ஆவான் என்று யூகிக்கிறேம்.

முழுமையினிடத்துப் பகுதியின் உண்மையை அறிதல் கூடும். இது சம்பவம் என்னும் பிரமாணம் ஆகும். நூற்றில் ஐம்பது உண்டு என்பது 'சம்பவம்' ஆகும். இதனை உள்ள நெறி எனவும் வழங்குவர்.

அபாவம் அல்லது இன்மை சிலரால் தனித்தொரு பிரமாணமாகக் கருதப்பெறுகிறது. இன்மை, அறிபொருளாக உணரப்பெறுவதில்லை. ஆதலால், தனியே பிரமாணம் ஆகாது என்று நையாயிகர் கூறுவர். பாவம், உள்ளது என்று பொருள்படும்; அபாவம் இல்லது ஆகும். ஓரிடத்து முன்னர் இருந்த பொருள் தற்போது புலனாகவில்லை. ஆதலால், அப்பொருளின் இன்மையை உணர்கிறோம். புலனாகாமைகொண்டு இன்மையை உணர்கிறோம். அபாவம் என்ற சொல்லிற்குப் 'புலன் ஆகாமை' என்றே பொருள் கொள்வர்.

## இயல்பு அளவை

இவ்வளவையைச் 'சகசம்' அல்லது 'சுபாவலிங்கப் பிரமாணம்' என்று கூறுவர்.

ஒழிபு அளவை பாரிசேடப் பிரமாணம் எனப்படும். இதனை 'மீட்சி யறிவு' எனவும் வழங்குவதுண்டு. 'இம்மூவரில் இருவர் கற்றவரல்லர்' எனில், மற்றைய ஒருவர் கற்றவர் எனக் கொள்ள வேண்டும். இவ்வாறு கொள்வது 'மீட்சியறிவு' அல்லது 'பாரிசேடம்' ஆகும். தனியொரு பொருளைப் பல பொருள்கள் உள்ள இடத்துச் சுட்டுதற்கு 'மீட்சி' அளவை பயன்படும்.

பிரத்தியட்சம், அனுமானம், உபமானம், சப்தம், அருத்தாபத்தி, அபாவம் என ஆறுவகைப் பிரமாணங்களையும் ஒத்துக் கொள்ளும் இந்தியத் தத்துவங்கள் உள. இவ்வாறோடு, பாரிசேடம், சம்பவம், ஐதிகம், சுபாவம் என்னும் நான்கையும் சேர்த்து, அளவைகள் பத்து எனக் கொள்ளுதலும் உண்டு. ஆனால், முக்கியமாகப் பிரத்தியட்சம், அனுமானம், ஆகமம் என்னும் மூன்றனுள் மற்றை அனைத்தையும் அடக்கி, இவற்றையே முதன்மையானவையாகக் கொள்வர். அருத்தாபத்தி, உபமானம், பாரிசேடம், சுபாவம், சம்பவம் என்னும் அளவைகள் அனுமானத்தில் அடங்குவன. மேற்கூறிய பத்துவகைப் பிரமாணங்களுள் உலகாயதர் 'பிரத்தியட்சம்' ஒன்றைமட்டுமே ஏற்பர்; ஜைன, பௌத்த தத்துவங்கள் 'அனுமானத்தையும்' ஏற்கும்; சாங்கியர், பிரத்தியட்சம், அனுமானம், ஆகமம் ஆகிய மூன்று அளவைகளையும் உடன்

படுவர். நையாயிகர், இம் மூன்றோடு உபமானத்தையும் கொள்வர். மீமாம்சகருள் ஒரு சாராராகிய 'பிரபாகரர்' மேற் கூறியனவற்றோடு அருத்தாபத்தியையும் சேர்த்து, அளவைகள் ஐந்தென்பர். மற்றொரு சாராராகிய பாட்டர், அபாவத்தைச் சேர்த்து அளவைகள் ஆறு எனக் கொள்வர்.

## D. புற உலகைப்பற்றிய பொதுக் கருத்து (COMMON SENSE THEORY)

இங்கு நாம் கருதுவதைப் பல கேள்விகளின் வாயிலாக அறியலாம்.

நம்முடைய புலன்கள் புற உலகைப்பற்றிய எத்தகைய செய்தியைத் தருகின்றன ?

இச் செய்தி நம்புதற்குரியதா ?

நம்புதற்குரியதானால், வெளியுலகில் காணும் பொருள்களின் தன்மை என்ன ?

வெளியுலகம் எத்தகைய பொருள்களாலாயது ?

இக் கேள்விகட்கு மக்கள் பொதுவாகத் தரும் விடைகள் :

*(1)* புற உலகம் பொருள்களாலாயது. அப் பொருள்கட்குக் குணங்கள் உண்டு. மரம்—மென்மையுடையது, வன்மையுடையது; உலோகம்—மஞ்சள் நிறமுடையது, வெண்மையுடையது.

*(2)* புற உலகில் பொருள்களாகப் பலவற்றைக் காண்கிறோம். விஞ்ஞானி, இப் பொருள்களைப் பகுத்து எந்த எந்த அணுக்களாலாயது என்பதை ஆராய்கிறான்.

நாம் பயன்படுத்தும் கருவிகள் நுட்பம் வாய்ந்தவை என்றால், மேலும்மேலும் நமது பகுப்பு நுணுகிச் செல்லும்.

*(3)* புறப்பொருள்கள் நமக்கு அயலாக வெளியே புற உலகில் உள்ளன.

இப் பொருள்களின் தன்மையை உள்ளவாறு நமது புலன்கள் உணர்த்த வல்லன. நமது புலன்கள் புறப்பொருள்களோடு

பொருந்தும் அல்லது தொடர்பு கொள்ளும் உறவில் 'புலனுணர்வு' ஏற்படுகிறது. அறிவது புலனு? உணர்வா? அல்லது மனமா? புலன்களின் வாயிலாக நமக்குப் புற உலகினைப்பற்றிய செய்திகளின் பதிவு ஏற்படுகிறது. புலன்களை வாயில்கள் எனலாம். புலன்களின் வாயிலாக நாம் பெறும் அறிவை 'வாயிற் காட்சி' எனலாம்; சைவசித்தாந்திகள் 'வாயிற்காட்சி' என்றே குறித்துள்ளனர். புலன்களின் வாயிலாகப் புற உலகைப்பற்றிய அறிவு மனத்தைச் சேர்கின்றது.

மேற்காணும் விடைகளிற் பலவற்றை எண்ணி மெய்ப்பொருளியலாருள் பலர் உடன்படாது மறுத்துள்ளனர். இவற்றை விரிவாக நாம் இங்கே கருதுவதற்கில்லை. ஆனல், ஒரு கேள்வி இன்றியமையாதது.

புறவுலகம் நமது காட்சிக்கு அயலானதா? அல்லது அப்பொருள்களின் இருப்பு நம் காட்சியைச் சார்ந்து விளங்குகின்றதா?

புறப்பொருள்களைப் புலப் பொருள்களெனக் கூறலாம். நமது புலன்கள் புறப்பொருள்களைப்பற்றி என்ன அறிவிக்கின்றன? அவை நமக்கு நிறைந்த செய்திகளை அறிவிப்பனபோல் தோன்றலாம். சிறிது சிந்தித்தால் நாம் புலன்களின் வாயிலாக அறிவனவெல்லாம் நமது உள்ளத்தில் நிகழ்வனவற்றைப் பொறுத்தவையே என அறிவோம். என்னுடைய நாவினுல் பற்களை அழுத்தி உணர்வதாகக் கொள்வோம். உணரப்படுவது யாது? 'பற்களை அறிகிறேம்' எனக் கூறலாம். ஆனல், இவ் விடை பொருந்துமா? நான் உணர்வது எனது நாவினிடத்து எழும் உணர்வு; இவ்வுணர்வு பற்களும் நாவும் பொருந்துவதால் அமைவதாகலாம். எனினும், உணர்வு உள்ளத்தின்பாற்பட்டது. மற்ருேர் எடுத்துக்காட்டு, எனது விரல்களைக்கொண்டு மேசையை அழுத்துகிறேன். நான் மேசையினது தன்மையை உணர்கிறேனு? இவ்வனுபவத்தைப் பரிசீலித்தால், எனது விரல்களின் வாயிலாக உணரும் மென்மை, வன்மை, தண்மை முதலிய நிலைகட்கும், உணர்ச்சிகட்கும், புலனுணர்வுகட்கும் அயலாக வேறு உணர்வு இல்லை என்பதைத் துணியலாம்.

**பரிமாணம் அல்லது அளவுபற்றிய அறிவு:** கிறித்தவக் கோயிலின் கோபுரம் (steeple) பற்றிய அளவு குறித்து நாம் கருதுவோம். அதனுடைய உயரம் நாம் காணுகின்ற தொலைவைப் பொறுத்தது. அரை மைல் தொலைவிலிருந்து காணும்பொழுது ஓர் உயரம் உடையதாகவும், 100 கெஜம் தொலைவிலிருந்து காணும்பொழுது மற்ருேர் உயரம் உடையதாகவும் காட்சியளிக்கிறது. அக் கட்ட

டத்தின் நிழலில் நின்று நோக்கும்பொழுது உயரத்தைக் கணிக்க, மதிக்க இயலாது. கோபுரம் (steeple) பல்வேறு வகையான உயரங்களை உடையது எனலாமா? எது அதனுடைய உண்மை உயரம்? அல்லது கோபுரத்தின் உயரம்தான் என்ன? பொதுவாக எதனுடைய உயரமும் நாம் எந்த அளவுகோல் கொண்டு அளக்கிறோமோ அதைப்பொறுத்தது என்பார்கள். இஞ்சு (inch) டேப் கொண்டு அளந்து அறியும் அளவினை 150 அடி எனக் குறிக்கலாம். இது நமது அன்றாட வாழ்விலே அமைந்த பருப்பொருளை அளக்கவே பயன்பெறும். ஆனால், இவ்வளவை, கருத்துப் பொருளாகிய தத்துவ ஆய்விற்குப் பொருந்திவராது.

பல இடங்களிலிருந்து காண்போருக்குப் பலவகை உயரங்களை உடையதாகக் கோபுரம் தோன்றுவதற்குக் காரணம் என்ன?

பலவகையாகத் தோன்றும் இவ்வுயரங்களிடையே எது கோபுரத்தின் உண்மை உயரம்? அதனை உண்மை உயரம் என்று கொள்வதற்குக் காரணம் என்ன? டேப் (tape) சிறந்த அளவுகோல் எனக் கொள்ளப்பெறுவதற்குக் காரணம் என்ன? அளப்பதற்கு உரிய இடம் என ஓர் இடத்தை ஏன் கொள்ளவேண்டும்?

நாம், டேப்மூலம் பெற்ற அளவு நமக்கு அறிவிப்பது என்ன? நாம் அறிய விரும்புவது கோபுரத்தின் உயரம். நமக்கு அறிவிக்கப்படுவது '150 அடி' என்பதாகும். இது எண்ணுக் கணித வாய்பாடு. இன்ன உயரம் இருக்குமானால் இன்ன அளவினது என்பது கணித இயலில் காணும் ஒரு வரையறை. கோபுரத்தின் உயரம் அறிய விரும்பியவிடத்து அறிவிக்கப்பெறுவது 150 அடி என்பதாகும். '150 அடி' என்பது கோபுரத்தைக் குறிக்கும் பொழுதுதான் பொருளுடையதாகும். இங்கு ஒன்றை மற்றொன்றால் விளங்கிக்கொள்கிறோம்; உயரத்தை அளவினாலும், அளவை உயரத்தினாலும் ஒன்றை மற்றொன்றில் அறிகிறோம். ஆனால், 150 அடி கோபுரத்தினது உண்மை உயரம் என்பதாம்.

நாம் இதுகாறும் கருதிய எடுத்துக்காட்டுகளின் வாயிலாக அறிவது யாது? புற உலகில் புறப்பொருள்களின் குணங்களாக இதுவரை கொண்டனவெல்லாம் புறப்பொருள்கட்குப் பொருந்துவனவல்ல. நமது அனுபவத்தில் நாம் உணர்ந்த நிலையில் எழுந்தவையே.

**விஞ்ஞானத்திற்கும் அறிவாராய்ச்சியியலுக்கும் உள்ள இயைபுகள்:** பௌதிகமும் உடலியலும், 'காட்சியைப்' பற்றி

(perception) அறிவிக்கும் கொள்கைகள் இதுவரை நாம் கண்ட கருத்துகட்கு அரண் செய்வனவாகும். 'காண்பான்', 'காட்சி', 'காணப்படும் பொருள்' என்ற ஒருவகை மும்மையை இந்தியத் தத்துவ ஞானிகள், குறிப்பாக வேதாந்திகள் விளக்குவார்கள். காணப்படும் பொருள் தனது தனிநிலையை இழந்து காண்பானுடைய அனுபவமாகிய காட்சியில் ஒன்றிவிடுகின்றது.

'லாக்' (Locke—1632-1704), பர்க்லி (Berkeley—1685-1753), ஹியூம், (Hume—1711-1776) ஆகிய மூவரும் 17, 18ஆம் நூற்றாண்டுகளில் அறிவியலில் கண்ட முடிபுகள் இன்றைய பௌதிக ஆராய்ச்சிகளின் முடிபுகளை வலியுறுத்துவன. 17, 18ஆம் நூற்றாண்டுகளில் பௌதிகம் சிறந்த வளர்ச்சியுறவில்லை.

உடலியல்வல்லான் (Physiologist) ஒருவன் 'காட்சி'யைப் பற்றி அறிவிக்கும் செய்திகள் யாவை என அறிவோம். நான் 'ஸிரியஸ்' என்ற ஒரு விண்மீனை நள்ளிரவில் காண்கிறேன். இக் காட்சியில் நிகழ்வன யாவை?

பல ஆண்டுகட்கு முன்னர் ஸிரியஸிலிருந்து வெளிப்பட்ட ஒலி அலைகள் நெடுந் தொலைவு கடந்து இந் நிலவுலகிற்கு வந்து சேருகின்றன. அவை நமது கண்ணின் வாயிலாக மூளையைச் சேருகின்றன. சேருகின்ற நிலையில் நான் 'ஸிரியஸ்' என்று முடிபு காண்கிறேன். இவ் வொளியலைகள் ஸிரியஸினின்று பிறந்தவை. ஆனால், ஒளியலைகள் எனது கண்ணைச் சேர்ந்து காட்சியாகும் நாளில் ஸிரியஸ் (Sirius) நிலை என்ன? இவ் இடைக்காலத்தில் 'ஸிரியஸ்' மறைந்திருக்கலாம். இல்பொருட்காட்சிக்கு உரியதாகாது ஸிரியஸ் மறைந்திருக்குமேல், அதனது காட்சி அமைவது யாங்ஙனம்? ஆனால், ஒளியலைகள் நம்மைச் சார்ந்த நிலையில் ஸிரியஸின் இருப்பு நமக்குப் புலனாகாது. ஆக, நான் இன்று காண்பது ஸிரியஸ் ஆகாது. நான் காண்பதெல்லாம் ஒரு மஞ்சள் துணுக்கு. அதன் அளவு, அமைப்பு, ஆற்றல் முதலியன வரையறை செய்யக் கூடியன. இம் மஞ்சள் நிறத் துணுக்கிலிருந்து நான் அனுமானிப்பது பல ஆண்டுகட்கு முன்னால், பல கோடி மைல்கட்கு அப்பால் இம் மஞ்சள் நிறத்தைத் தோற்றுவித்த, அல்லது இதற்குக் காரணமான ஸிரியஸ் என்பது ஒரு விண்மீன் என்பதாகும். இங்கு மஞ்சள் நிறக் காட்சிக்குப் பிற காரணங்களும் இருக்கலாம். மூக்கு பலமாகத் தாக்கப்பெற்றால் இக் காட்சி அமையலாம். ஆழ்கடலில் செல்லும் கப்பலின் விளக்கு ஒளியாகவும் இருக்கலாம்.

இக் காட்சிக்குக் காரணம் எனது கண்ணில் சிறந்த உறுப்பாக அமைந்து மூளைக்குச் செய்திகளை அறிவிக்கும் கண் நரம்பு (optic

nerve). அது எவ் வகையில் தூண்டப்பெறுகிறதோ அவ் வகையில் காட்சி அமையும்.

பெர்ட்ரண்ட் ரஸ்ஸெல் (Bertrand Russell) என்பார் மிகச் சிறந்த எடுத்துக்காட்டொன்றை விவரிக்கும்பொழுது, உடலியல் வல்லான் ஒருவன் தனது ஆராய்ச்சியில் நோயுற்ற ஒருவனது மூளையை அறிவதைக் குறிக்கிறார்.

காட்சியை உடனிகழ்த்துவது யாது? அது காண்பான் மூளையில் நிகழ்வது ஆகும். அது காணப்பெறும் பொருளினின்று காண்பானது கண்ணின் வாயிலாக மூளையைச் சேருகிறது. உடலியல் அறிஞன் காண்பதெல்லாம் அவனது மூளைக்குக் கண்ணின் வாயிலாக ஒளியலைகள் சேர்ந்தபின்னரேயாகும். காட்சி அமைவது இறுதியிலே ஆகும். தொடர்ந்து நிகழ்ச்சிகள் பல நிகழ்கின்றன. இந் நிகழ்ச்சிகளின் தொடர்ச்சி ஒரு முடிவைப் பெறுகிறது. அந்த முடிவு நமக்குக் காட்சியாக அமைகிறது. இக் காட்சி எங்கு நிகழ்கிறது?

எட்டிங்டன் (Eddington) என்பவர் ஒரு பௌதிகப் பேராசிரியர். அவரது கருத்துக்கொள்கையைக் கவனிக்கலாம். 'காட்சியை'ப்பற்றிய விளக்கத்தை பௌதிக முடிவுகள் துணை கொண்டும், உடலியல் முடிபுகள் துணைகொண்டும் கண்டோம். நம்முடைய அறிவும் புலனுணர்வும் சடப்பொருளின் (matter) இயக்கமாகா. நம்முள் நிகழும் நிகழ்ச்சிகளின் உணர்வு நமக்கு அயலாகப் புறம்பே தனித்து இயங்கவல்ல 'பொருள்களால்' நிகழ்வதன்று. ஒளி அலைகளும், வாயுக்களும், ஒலி அலைகளும், பிற ஆற்றல் வடிவங்களும் (forms of energy) புறப்பொருள்களினின்று புறப்பட்டு நம்மை வந்து தாக்கும்போது நாம் உணரும் நிகழ்ச்சிகளே நமது காட்சியாக அமைவன.

நாம் எங்ஙனம் சடப்பொருளை உணர்கிறோம்? எங்ஙனம் தொடர்பு கொள்கிறோம்? சடப்பொருளினின்று பிறக்கும் ஆற்றல் நமது உடலினுள்ள நரம்பு முனையைத் தாக்குகின்றன. இதன் விளைவாக, பௌதிக-இரசாயன மாற்றங்கள் நிகழ்கின்றன. இவை உரிய நரம்புகளின் வாயிலாக மூளையைச் சேர்கின்றன. அங்கு வியத்தகு நிகழ்ச்சிகள் அமைகின்றன. அதன் விளைவாகப் புலனுணர்வு ஏற்படுகிறது. இவ்விளைவு, புறஉலகில் இதற்குக் காரணமாக இருந்த பொருளை எவ்வகையில் ஒத்திருக்கிறது என்று கூறுவது, நாம் புறப்பொருள்களைப்பற்றி அறிகின்ற அறிவெல்லாம் புறப்பொருள்களில் எழும் தூண்டுதல்களும் (stimuli), அவற்றின்

பயனுக நம்மிடத்து அமையும் உணர்ச்சிகளும் (responses of sensation) ஆகும். இவையெல்லாம் நரம்புகளின் வாயிலாக அமையும் அறிவிப்புகளின் விளக்கமே.

இங்குள்ள வியப்பு யாது? நாம் புறவுலகில் உள்ள பொருள்களை நேரில் அறிய இயலாது. எனினும், புறப்பொருள்களைப்பற்றி நாம் அறிகின்ற அறிவு இயைபுடையதாக, முறையுடையதாக (coherent and systematic) அமைகிறது. புறவுலகைப்பற்றி அறிவதெல்லாம் கருதலளவையின் வாயிலாகவே ஆகும். நம் உள்ளத்து நிகழ்வனவற்றையே நேரில் அகக்காட்சியின் வாயிலாகவே (directness and immediacy of our knowledge of ourselves) அறிகிறோம். நமது உள்ளத்தின் உண்மைகளை நாம் அனுமானத்தின் மூலம் அறிவதில்லை. உள்ளத்து நிகழ்வனவற்றை நேரில் அறிகிறோம். உள்ளத்தில் நிகழ்வனவற்றை நேரிலும், முதலிலும் நாம் அனுபவ வாயிலாக உணர்கிறோம். உள்ளம், ஆன்மா ஆகிய வற்றின் இருப்பும் இயல்பும் நம்மைப் பொறுத்தனவாகும். இவற்றைப் பௌதிக முறைகள்கொண்டு அறிய இயலாது.

**அகநிலைக் கருத்துக் கொள்கை** (Subjective Idealism): புறவுலக உண்மைகளைப் புலன்களின் வாயிலாக உணர்கிறோம். இவை நமது புலன்களைச் சார்ந்து நிற்கின்றன. புறவுலகக் காட்சி அல்லது புறப்பொருள்களின் இருப்பு நமது உள்ளத்தைச் சார்ந்து நிற்கிறது. நாம் நமது உள்ளத்தைத்தான் அறிகிறோம். நாம் அறிவனவெல்லாம் நமது உள்ளத்து எழும் எண்ணங்களையே ஆகும். நெருப்பினிடத்தில் இருப்பதாகக் கருதும் வெம்மையானது நமது உள்ளத்தில் அமையும் எண்ணமே. அகநிலையில், உணர்வாளின் உணர்வு நிலையைச் சார்ந்து, புறவுலகப் பொருள்களின் குணங்கள் எண்ணங்களாக அமைகின்றன. நாம் உள்ளத்துணர்வனவற்றை உடலின்கண் நிகழும் மாற்றங்களாகப் பகுத்துணரலாம்.

மனித அனுபவத்தைப் பகுத்து, அதன் கூறுகளைக் காண 'லாக்' என்ற ஆங்கில மெய்ப்பொருளியல் வல்லார் முயன்றார். நாம் சிந்திக்கும்பொழுது நமது உள்ளத்தில் அமைவன யாவை? எந்த அளவிற்குப் புற உலகை அறிய இயலும்? என்ற வினாக்களுக்கு விடை காண முயன்றார். நமது மனத்தில் நிகழும் எண்ணங்களையே நமது மனம் அறிய வல்லது என்ற கருத்து 'லாக்' அவர்கட்குப் பெரிதும் உடன்பாடு. 'கருத்து' (idea) என்பது யாது? இதுபற்றி 'லாக்' கருதியது இங்குக் குறிக்கப்பெறுகிறது.

நாம் அறிவதற்குரியதாக அமைவதும் சிந்தனையில் தோன்றுவதும் கருத்து (whatever is the object of the understanding when a man thinks) ஆகும். கருத்துகள் பலவகையானவை. புலன்களின் சார்பில் எழும் கருத்துகள் ஒருவகை; சிந்தனையில் எழும் கருத்துகள் மற்றொரு வகை. புலக் கருத்துகளைச் சிந்திக்கும் பொழுது எழும் கருத்துகளும், அச் சிந்தனைகளது உணர்வும், நினைவுகூர்தல், ஒப்பிடுதல், கற்பனை செய்தல் ஆகிய செயல்களும் இரண்டாம் வகையைச் சேர்ந்தவை ஆகும். அவற்றைக் கொண்டே நமது சிந்தனை வளர்கிறது. இங்கு புலனுணர்வு அடிப்படையில் எழும் கருத்துகளையே கவனிப்போம். மனம் சிந்தனையில் ஈடுபடும்போது அமைவன மேற்குறித்த கருத்துகளே. உள்ளத்தில் எங்ஙனம் இவை அமைகின்றன என்பதை 'லாக்' விளக்கவில்லை. புறவுலகின் சாயல்கள் அல்லது தோற்றங்களே நம் உள்ளத்தில் அமையும் கருத்துகள். வெம்மையுள்ள பொருளொன்றை நாம் தொடுகிறோம். வெம்மையைப்பற்றிய உணர்வை நாம் பெறுகிறோம். நாம் வெம்மையை உணர்கிறோமேயன்றி, வெம்மையுணர்விற்குக் காரணமான புறப்பொருளை உணர்வதில்லை. அந்த வெம்மைப் பொருள் நிறம் உடையதானால், வெம்மையோடு நிறவுணர்வையும் பெறுவோம். வெம்மையைப்பற்றிய கருத்து அல்லது வெம்மைக் கருத்து ஒரு பொருளின் வெப்பநிலையாகும். நிறக்கருத்து அப் பொருளின் நிறமாகும். கருத்துலகம் என்பது புறப்பொருள்களின் குணங்களினுடைய கருத்துக் கோவை (A body of representatives of the qualities of real things). நமது உள்ளம் இத்தகைய ஒரு கருத்துக் கோவையைத்தான் அறிகிறது; புறவுலகப் பொருள்களை அறிவதில்லை.

**முதனிலைப் பண்புகளும் வழிநிலைப் பண்புகளும்** (Primary and Secondary Qualities): கணித இயலார் முதனிலைப் பண்புகளை ஆராய்கின்றனர். இடப்பரப்பு, எண்ணிக்கை, இயக்கம், பருமை ஆகியவை முதனிலைப் பண்புகள். இவை புறப்பொருள்களைச் சார்ந்தவை. வெண்ணெய் உருக்கப்பெற்றாலும், விறகு எரிக்கப் பெற்றாலும் நிறம் மாறலாம். உருவம், பொருள்தன்மை, எடை இறுதிவரை இருப்பன ஆதலால், முதனிலைப் பண்புகள் புறப் பொருள்களைச் சார்ந்தவை என்று 'லாக்' கருதினார்.

வழிநிலைப் பண்புகள் மாற்றங்கட்கு உட்படுகின்றன; சில சந்தர்ப்பங்களில் அடியோடு மறைகின்றன. நிறம், சுவை, மணம் முதலியவை வழிநிலைப் பண்புகளாகும். ஒளி இல்லையானால், பொருள்கட்கு நிறப்பண்பு தோன்றாது. காண்பானது காட்சி மாற்றமுறுமேல், வழிநிலைப் பண்புகளும் மாற்றமுறும்.

ஒருவனுக்கு நீர்க்கோவை (ஜலதோஷம்) இருக்குமானால், மோப்பத் திறன் குன்றுகிறது. வழிநிலைப் பண்புகள் புறப்பொருள்களைச் சார்ந்தவையல்ல. ஆதலால், அவ் வழிநிலைப் பண்புகள் புறவுலகில் காணப்பெறுவனவும் அல்ல. நம்மிடத்துச் சில பயன்களை விளை விக்கும் ஆற்றல் உடையனவாக், வழிநிலைப் பண்புகளை 'லாக்' கருதினர்.

**பிரதிநிதித்துவக் கொள்கை** (Representationalism): நாம் நேராகப் புறப்பொருள்களை அறிவதில்லை. புறப்பொருள்களது சாயல்களால், பதிவுகளால் நாம் புறப்பொருள்களின் இருப்பினை (existence) அறிகிறோம். இச் சாயல்களைச் சாதாரண, சிக்கலற்ற எண்ணங்களாக, கருத்துகளாக 'லாக்' கருதினர். புறவுலகில் உள்ள பொருள்கட்கு முதனிலைப் பண்புகளாகிய அளவு, பரிமாணம், இயக்கம், பரப்பு, எண்ணிக்கை, இடத்தை அடைக்கும் இயல்பு (occupancy of space) போன்றவை உரியவை. இவை நமது இந்திரியங்களைத் தாக்குகின்றன; மனத்தில் பதிவுகளை ஏற்படுத்துகின்றன. நமது உள்ளம் எவற்றை அறிகின்றதோ, அவைகளெல்லாம் அதனிடத்துத் தோன்றும் சாயல்களே. மனம் இப் பதிவுகளைப் பெருக்கி, வழிநிலைப் பண்புகளை அழகுறப் பொருத்தி அறிகின்றது. வெப்பதட்ப மாறுபாடுகள், நிறங்கள் போல்வன, மனத்தினால் புறப்பொருள்களினது சாயல்களுக்குப் பொருத்தப்பெறுவன. இங்ஙனம் மனம், வழிநிலைப் பண்புகளைப் புறப்பொருள்கள்மீது ஏற்றிக் காண்பதை மறந்து, புறப்பொருள் கள் வழிநிலைப் பண்புகளையும் உடையன என்று எண்ணி மயங்கு கிறது. இருண்ட புகைப்படப் பெட்டியாக மனத்தினை எண்ணிக் கற்பனை செய்துகொள்ளுங்கள். அதனுள்ளே அமைந்துள்ள திரை யின்மீது பேரொளியைச் செலுத்துகின்றோம். இத் திரையின்மீது நமது புலன்கள், புறவுலகிலிருந்து பெறும் பதிவுகளையெல்லாம் அமைத்துக் காண்கின்றன.

'ஒயிட் ஹெட்' (White Head) என்பார் தமது தலைசிறந்த நூலாகிய, 'விஞ்ஞானமும் இன்றைய உலகமும்' என்பதில் 'லாக்' என்பவரது கருத்தைத் தெள்ளிதின் விளக்குகிறார்.

புறப்பொருள்கள் பண்புகளுடையனவாகக் காணப்பெறு கின்றன. ஆனால், உண்மையில் பண்புகள் மனத்தினின்று தோன்றுபவை. நாம் புறப்பொருள்களிடத்தில் இல்லாத பண்பு களை அவற்றின்மீது ஏற்றிக் காண்கிறோம். இயற்கையில் இல்லாத பண்புகளை இயற்கையின்மீது ஏற்றிக் காண்கிறோம். 'ரோஜா மலரில் உள்ள மணம், வானம்பாடியின் குரலினிமை, கதிரவனின்

ஒளிச்சிறப்புபோல்வனவற்றை நமது உள்ளம் புறப்பொருள்கள் மீது ஏற்றிக் காண்கிறது' என்று ஒயிட்ஹெட் கூறுகிறார்.

'லாக்' தருகின்ற விளக்கம்தான் என்ன? 'லாக்' கருத்துப்படி புறவுலகம் உண்டு. புறவுலகில் உள்ள பொருள்கட்கு முதனிலைப் பண்புகள் உண்டு. நமது காட்சிக்கயலாகப் புறவுலகம் இருக்கிறது. 'லாக்' கொள்கையின் முக்கியக் கூறு 'பொருள் தன்மை' (substance) பற்றியதாகும்.

'பர்க்லி' லாக்கின் கொள்கையிலிருந்து இருவகைகளில் வேறுபடுகின்றார். (1) முதனிலை, வழிநிலைப் பண்புகள்: முதனிலைப் பண்புகட்கும் வழிநிலைப் பண்புகட்கும் உள்ள வேறுபாடு, நாம் கற்பித்துக்கொள்வதாகும். வழிநிலைப் பண்பாகிய வெப்பம் நமது மனத்தைச் சார்ந்தது என்றோ, மனத்தில் உள்ளது என்றோ கருதுவோமானால், முதனிலைப் பண்புகளாகிய அளவு, இயக்கம் போன்றவையும் நமது மனத்தில் உள்ளனவே என்ற உண்மை விளங்கும். புறப்பொருள்கட்கு உள்ளனவாகக் கருதப்படும் குணங்கள் புறப்பொருள்களைச் சார்ந்தனவல்ல; அவை காண்பானுடைய மனத்தைப் பொறுத்தன. ஒரு கிறித்தவக் கோயிலின் கோபுரப் பகுதியானது நாம் காணுகின்ற கோணம், இடம் ஆகியவற்றைச் சார்ந்த நிலையில் உயரத்தில் வேறுபாடு உடையதாக அறிகின்றோம். 'லாக்' அவர்களது கொள்கை மூன்று கூறுகளை உடையது. ஒன்று, காண்பானுடைய மனம் அல்லது உள்ளம்; இரண்டாவது, அந்த மனத்தில் அடங்கியிருக்கும் எண்ணங்கள் அல்லது கருத்துகள்; மூன்றாவது, புறவுலகப் பொருள்கள் அல்லது நமது எண்ணங்கட்குக் காரணமாக இருக்கும் புறநிலைகள். புறநிலைகள் அல்லது புறப்பொருள்கள் நமது இந்திரியங்களைத் தாக்க, அத் தாக்குதலின் விளைவாக, நமது உள்ளக் கிழியில் சாயல்கள் அமைகின்றன. இப் பதிவுகளையே, இச் சாயல்களையே நாம் எண்ணங்கள் என்கிறோம். நமது மனத்தில் அமையும் எண்ணங்களும், புறவுலகப் பொருள்களும் ஒத்திருப்பதால், அப் பொருள்களைப்பற்றிய அறிவு நமக்கு ஏற்படுகின்றது. இங்கு ஒரு நிலைமை ஏற்படுகின்றது. நாம் நேரிடையாகப் புறவுலகை அறிய இயலாது என்றால், நமது எண்ணங்கள் அவற்றிற்குக் காரணமான புறப்பொருள்களை ஒத்திருக்கின்றன என்று எங்ஙனம் கூறுவது? ஒருவன் தன்னுடைய முகச்சாயலைப் பல கண்ணாடிகளின் வாயிலாகப் பார்ப்பதாக வைத்துக்கொள்வோம், இதனால் நாம் பிரதிபலிப்புகளுக்கிடையே எது உண்மைத் தோற்றம் என்பதை எங்ஙனம் அறிவது? இக் கண்ணாடிகள் முகத்தைப் பிரதிபலிக்கும்போது பல வடிவங்களைத் தாங்கியிருப்பதாக அறிவோம். சில கருமையுற்றும், சில மஞ்சளாகவும், சில வெண்மையாகவும்

உள்ளன. தன்னை ஒரு கண்ணாடியின்முன் நிறுத்திக்கொண்டு தனக்கு உணர்ச்சிகள் ஏற்படும்போதெல்லாம் அவற்றின் வெளிப்பாடாகிய கூறுகள் புலப்படுவதைக் காணலாம். பல கண்ணாடிகளில் தோன்றிய பிரதிபலிப்புகள் மூலத்தை ஒத்திருக்கின்றன என்றாலும், வேறுபாடுகள் இல்லாமல் இல்லை.

'பார்க்லி' என்பார் இம் முடிவுகளை ஏற்கவில்லை. அவருக்கோர் ஐயம். இம் முடிவைத் தாம் ஏற்றுக்கொள்ள முடியாமைக்கு உரிய காரணங்களை அவர் விளக்குகிறார். நமது உள்ளம் புறவுலகத்தை உள்ளதாகக் கொள்வதற்கு என்ன காரணங்கள் என்று 'லாக்' கூறினார்? புறவுலகை நேரிடையாக நாம் அறிவதில்லை. அதன் பிரதிபலிப்புகளாகிய எண்ணங்களைக்கொண்டே புறவுலகை அறிகின்றோம். 'லாக்' அவர்களின் கொள்கையின்படி, 'ஞானம்' அல்லது 'அறிவெ'ன்பது நமது உள்ளத்தில் அமையும் எண்ணங்களின் விரிவேயாகும். நாம் இவ்வெண்ணங்கட்கு அடிப்படையாக அமையும் புறத்தூண்டுதல்களை அறிவதே இல்லை.

'லாக்' அவர்களின் கருத்து வளர்ச்சியைப் பார்க்கும்போது, புறப்பொருள்களும், புறப்பொருள்களோடு வரும் செய்திகளும் நீக்கப்பெறுவதைக் காணலாம். பார்க்லி என்பவர் இம் முடிவினை ஏற்கின்றார். நமது அகத்து அல்லது உள்ளத்து அமையும் எண்ணங்கள் 'லாக்கு'க்கு உடன்பாடானவை. இவற்றை பார்க்லி விளக்குகிறார். நாம் அறிவனவெல்லாம் எளிய குணங்கள். வெண்மை, இனிமை, கடுமைபோன்றவை. நம்மால் அறியப்பட்டாலும் புறப்பொருள்களை நாம் அறிவதாகச் சொல்ல இயலாது. பொதுவாகக் கருதப்படுவது நாம் காட்சியில் புறவுலகத்தோடு நேரிடையாக உறவு கொள்கிறோம் என்பதாகும்; இதுவல்லாமல் புறவுலகம் என்பது நமது காட்சிக்கு அயலாக இருக்கிறது என்பதுமாகும். 'பார்க்லி' அவர்களினுடைய சிறந்த உரையாடல்களில், ஒருவர் புறவுலகம் உண்டு என்று புறவுலக உண்மைக் கொள்கையை நிறுவுகிறார். மற்றொருவர் அளவை நெறியினால் அகவுலக நிலையினை அறுதியிட்டுக் கூறுகின்றார்.

'லாக்' என்பவர் 'கருத்து' (idea) என்ற சொல்லை உபயோகிக்கும்போது நமக்கு இருபொருள் தோன்றுகின்றன (Locke confuses the object of knowing with the content of knowledge). அறிவிற்குப் பொருளாக விளங்குவது (object of knowledge), கருத்து என்பது ஒரு பொருள் ஆகும். இனி, இரண்டாவது பொருள், 'கருத்து' என்பது மனத்தில் விளங்குவது. மனம் அறியும்போது, தன்னிடத்து விளங்குவதாக அறிவது (content of knowledge)

கருத்து ஆகும். கருத்துகள் புலன்களின் வாயிலாகவும் சிந்தனையின் வாயிலாகவும் அமைகின்றன என்றும், ஆதலால் அவை இருவகைப்படும் என்றும் லாக் கருதுகிறார் என்பது தெளிவாகிறது. 'லாக்' என்பவர் 'கருத்து' என்பதற்குக் கொண்ட இரண்டாவது பொருள் யாது? புலக்காட்சியின் வாயிலாகவோ, சிந்தனையின் வாயிலாகவோ, மனத்தினால் அறியப் பெறுவது, 'கருத்து' என்பது ஆகும். இங்கு நேர்கின்ற குழப்பம் யாது? முதலிலே, 'லாக்' 'கருத்து' என்ற சொல்லை, அறியப் பெறுவது (object of understanding) என்னும் பொருளில் வழங்கினார். பின்னர் கருத்து என்ற சொல் அறிபொருள் (content of knowing) என்ற பொருளில் அவரால் வழங்கப்பெற்றது. அறிவதற்குப் பொருளாக விளங்குவது ஒன்று; அறியும் நிலையாக விளங்குவது மற்றொன்று (object of awareness with the state of being aware). காணும் மனத்திற்கு அயலாக வழிநிலைப் பண்புகட்கு இருப்பு இல்லை. அப்படியானால், முதனிலைப் பண்புகளுக்கு மட்டும் எவ்வாறு தனித்த இருப்புண்டு என்று கூறுவது? ஏனெனில், முதனிலைப் பண்புகளும் வழிநிலைப் பண்புகளைப் போலவே புலன்களின் வாயிலாகவே அறியப்பெறுகின்றன. வழிநிலைப் பண்புகளாகிய நிறம்போன்றவை, புலன்களின் வாயிலாக அமைவன. புலக்காட்சிகள் தோன்றுவதற்கு வெளிச்சம்போன்ற புறநிலைகள் விளங்கவேண்டும். சில பௌதிகப் பொருள்கள் இருளில் தம் நிறத்தை நன்கு புலப்படுத்த இயலாமற் போகலாம். இதேபோல பிற புலன்களின் காட்சிகளும் அவ்வவற்றிற்குரிய புறக்காரணங்கள் அமையாத காலத்தில், புலனாகாமற்போகலாம். ஆனால், பொருள்கள் தம்முடைய திண்மை, அளவு, நிலைபோன்ற முதனிலைப் பண்புகளை எக் காரணத்தாலும் இழக்கமாட்டா. 'பார்க்லி' என்பார் முதல்நிலைப் பண்புகளும் வழிநிலைப் பண்புகளும் புறப்பொருளிலிருந்து பிரிக்க இயலாத நிலையில் விளங்குவன என்று கருதுகிறார். சடப்பொருள் என ஒன்று உறுதியாக உள்ளது என்று 'லாக்' கூறவில்லை. காட்சியிலும் சிந்தனையிலும் அறியப்பெறுகின்ற பொருள் யாதாக இருந்தாலும், நாம் அறிவது 'கருத்தே' (idea) என்று 'லாக்' கொண்டார். இந்த அடிப்படையை வைத்தே, பார்க்லி தமது சிந்தனைகளைத் தொடங்குகிறார். நாம், முதனிலைப் பண்புகளை அறியினும் சரி, வழிநிலைப் பண்புகளை அறியினும் சரி, நாம் அறிவனவெல்லாம் கருத்துகளே யாகும். ஆதலால், இக் கருத்துகட்கு அயலாக சடப்பொருள் என ஒன்றுள்ளதா என மனம் அறிதற்கு இயலாது. ஆதலால், 'பார்க்லி' ஆன்மீகப் பொருள்களும் அவற்றின் அகநிலைகளுமே உள்ளன. அவைகளையே நாம் அறிகிறோம் என்ற முடிவிற்கு வருகிறார்.

'பார்க்லி' என்பவர் எழுதிய இரண்டாவது நூல் மனித அறிவின் அடிப்படைத் தத்துவங்கள் (principles of human knowledge) யாவை என்பதை ஆராய்வதாகும். 'சடப்பொருள்' (material substance) யாது என்ற கேள்வியையே பார்க்லி முதலில் எழுப்புகிறுர். 'லாக்' என்பவர் 'கருத்து' (idea) எனக் கொண்டதை விளக்குவதில் ஏற்படும் இடர்ப்பாட்டை 'பார்க்லி' அறிந்தார். நாம் நேராகச் சடத்தைக் காண்பதில்லை என்றும், சடத்தின் பண்புகளையே நாம் அறிகிறோம் என்றும், 'லாக்' விளக்குகிறுர். இப் 'பண்புகளைத் தாங்குகின்ற ஆதாரம் ஒன்றை'க் கருதவேண்டுவதாகின்றதென்றும் குறிக்கிறுர். இவ் வாறு கருதுவதன் பொருள் யாது? நாம் புலன்களின் வாயிலாக அறியும் பண்புகள் 'பொருள்' (substance) என ஒன்றினிடத்து விளங்குவனவாகக் கொள்கிறோம். ஆனுல், இவ்வாறு கொள்வதில் பயனில்லை எனப் 'பார்க்லி' கூறுகிறுர். நிறம்போன்ற பண்பு கட்கு ஆதாரம் என ஒன்று உள்ளது எனில், மனமே புலக்காட்சி கட்கும் அல்லது கருத்துகட்கும் ஆதாரம் ஆகும் என்பது அவருடைய கருத்தாகும்.

சடப்பொருள்களின் உண்மை என்பது, நாம் பொருளென ஒன்று இருக்கவேண்டுமெனக் கற்பனையாகக் கருதுகிறோமே, அப் பொருளைச் சார்ந்ததன்று. ஆனுல், 'லாக்' கருதுகின்ற முதனிலைப் பண்புகளாகிய வடிவம், அளவு, திண்மை, நிலை, இயக்கம் போன்றவற்றில் பொருள்களின் உண்மை விளங்குதல் வேண்டும். புலப்பண்புகட்கு ஆதாரமாக விளங்குவது சடப் பொருள் என்ற கருத்தை 'பார்க்லி' மறுக்கிறுர். அத்தகைய சடப்பொருள் என ஒன்று உண்டு; அதை நாம் புலன்களின் வாயி லாக அறிய இயலாது. நாம் ஒரு பொருளைக் காண்கிறோம் என்றுல், அப் பொருளின் வெவ்வேறு பண்புகளாகிய நிறம், வடிவம்போன்ற வற்றையே அறிகிறோம். அறியப்பெறும் இப் பண்புகட்கு அயலாக, இவைகளைத் தோற்றுவிக்கும் ஆதாரப் பொருளாகச் சடப் பொருள் என ஒன்று உண்டு என்று கொள்வது எவ்வாறு? நிறங்கள், வடிவங்கள், வன்மை போன்றவை புலக்காட்சிகளே (sensation); அல்லது மனத்தில் அறியப்படுபவைகளே. அறியப் பெறும் இவற்றிற்கு அயலாக ஒரு பொருள் இருந்து, அவை பொரு ளிடத்துத் தங்கி விளங்குகின்றன என்று கொள்வதற்கு ஆதாரம் இல்லை. இந் நிலையில் 'பார்க்லி' கொண்ட முடிபு யாதெனில், நாம் அறிவனவற்றிற்கு அயலாக வேறு எவற்றையும் உள்ளன வாகக் கொள்ளல் இயலாது என்பதாகும். ஆதலால், 'உள்ளன' எனில், அவை காணப்பெற்றவையாதல் வேண்டும். பொருள் களின் இருப்பு நமது காட்சியில் அமையக் காண்கின்றோம்.

சிந்திக்கும் மனங்களும் அம் மனங்களால் சிந்திக்கப்பெறும் எண்ணங்களும் அன்றி வேறு எவையும் இல்லை என்ற முடிபிற்கு வந்தார் 'பார்க்லி'. 'பார்க்லி', 'லாக்' கருத்தில் உள்ள முரண்களைப் புலப்படுத்தினர். ஆனால், அவர் ஆன்மீகப் பொருளையும், கடவுளையும் உண்மைப் பொருள்களெனக் கொள்வதற்கு ஆதாரம் யாதென்று காட்டவில்லை.

'பார்க்லி' கொண்ட முடிவுகள் : இரு முக்கிய நிலைகள், குணங்கள் யாவும் நமது உள்ளத்தைச் சார்ந்தன. குணங்கட்கு அயலாக வடிவமற்ற, தனித்த பொருளென்று ஒன்றில்லை. குணங்களைத் தாங்கி நிற்கும் பொருள் (substance) ஒன்று குணங்கட்கு அயலாக இருப்பதாக 'லாக்' அவர்கள் கொண்டார்கள். நமது உள்ளம் அறிகின்ற அளவில்தான் புறப்பொருள்களுக்கு இருப்பு உண்டு. இருப்பு அல்லது உண்மை என்பது யாது? அது ஒருவனது உள்ளத்தில் எண்ணமாக அமைவதாகும். ஒன்றின் உண்மை அதனின் காட்சியில் அமைகின்றது (esse is percipii). தத்துவ உலகில் மிகச் சிறந்த முடிவாக 'பார்க்லி' அவர்களின் முடிவு கொள்ளப்படும். சில உண்மைகள் மிகத் தெளிவானவை; எளிதில் அறியக்கூடியவை; கண்ணைத் திறந்த அளவிலேயே நாம் அறிந்துகொள்ளலாம். விண்ணும், மண்ணும், இவற்றிற்கிடையே அடங்கியிருக்கும் பொருள்கள் யாவும் இவ்வுலகத்தை உருவாக்குகின்றன. நமது மனத்திற்கு அயலாக இவற்றிற்கு இருப்பு ஏது?

மற்றொரு முடிவு பின்னைய தத்துவ வளர்ச்சிக்கு அடிப்படையானதாகும். நாம் புறவுலகைப்பற்றிக் கொள்ளும் அறிவானது நமது உள்ளத்து அமையும் சில எண்ணங்களில் அடங்கிவிடக் காண்கிறோம். இவ்வெண்ணங்கள் சில எளிய பண்புகளின் அறிவேயாகும். 'புலனறிவு' என்பது சில குணங்களைப்பற்றி அமையும் அறிவேயாகும். ஒரு பொருளைப்பற்றிப் பல எண்ணங்கள் உடையவர்களாக இருக்கின்றோம். எடுத்துக்காட்டாக, ஓர் இனிய பண்டத்தைக் கருதுவோம். இப் பண்டத்தின் வடிவம், மென்மை, இனிமை, வெண்மை ஆகியவை இனிய பண்டத்தினிடத்து அமைந்தனவாகக் கருதுகிறோம். இனிய பண்டம் குணங்களாகப் பகுப்புக் கொள்ளும்போது, இனிய பண்டம் குணங்கட்கு அயலாக இல்லை. வேறு வகையில் நோக்கினாலும், வண்ணம், ஒளி ஆகியவற்றின் வேறுபாடாக நம்முடைய புலனறிவு அமையப் பார்க்கின்றோம். ஒரு பொருளைக் காணுகிறபோது நாம் அறிகின்ற உண்மை வேறு; அதனைத் தொட்டு அறிகின்றபோது அறிகின்ற கருத்து வேறு. ஒரே பொருளைக் கண்டும், உற்றும் அறிவதாகக் கொள்வது தவறு.

ஓர் அறைக்குள் நுழைகின்றோம். நாம் அவ்வறையினுள் காண் பது மேசை என்று உரைக்கின்றோம். இங்கு நிகழ்வது யாது? 'பார்க்லி' அவர்களின் கருத்துப்படி நமது உள்ளத்தில் நிகழ்வன வருமாறு: முதலில் கண்ணின் வாயிலாக ஓர் அனுபவம் அமை கின்றது. பளபளப்பு, கருமை, வட்ட வடிவம் ஆகியவை கட்புல னால் அமைவன. கழிந்த காலத்து எனக்கமைந்த அனுபவங்களின் அடிப்படையில் இவற்றை உணர்கின்றேன். பின்னர் அம் மேசை யைத் தொட்டறிவதனால் வன்மையை உணர்கின்றேன். முன்னர் உணர்ந்ததும் பின்னர் உணர்ந்ததும், ஒருங்கே ஒரு பொருளி னிடத்துத் தோன்றியனவாக உணர்கின்றோம். இவ்வுணர்வு 'லாக்' அவர்களின் கருத்துப்படி சரியே. ஆனால், 'பார்க்லி' அவர் கள் குணங்கட்கும் அயலாகப் பொருள் ஒன்றில்லை என்று கொள்கிற பொழுது, நமக்கமைந்த கட்புலனுணர்வும் தொடுபுலனுணர்வும் தனித்தனியே அமைவனவாகும்.

அறியப்படுவது எண்ணம்; இது அமைவது உள்ளத்தில். உள்ள மும் எண்ணங்களும்தாம் உள்ளபடி உள்ளவை. மேசைபோன்ற புற, சடப்பொருளைப்பற்றிய எண்ணங்கள் நமக்கு அமைவதில்லை. நமக்கு அமைவதெல்லாம் அப் பொருள்களின் வெப்பதட்ப நிலைகள், வெண்மை, கருமை, வட்டவடிவம், நீளவடிவம் என்பவை களேயாகும்.

நாம் புறப்பொருள்களைக் காணாதவிடத்து அப் பொருள்களின் நிலை யாது? நாம் அறையைவிட்டு அகலும்போது மேசையும் அகல்கின்றதா, மீண்டும் நுழையும்போது அப்பொருளும் நுழை கின்றதா? இது 'பார்க்லி' அவர்களின் முடிவாகாது. அவர் நிறுவி யது என்ன? இருப்பு அல்லது உண்மை என்பது எண்ணமாகவும், உள்ளத்தைச் சார்ந்ததாகவும் உள்ளமை இங்குக் கருதத்தக்க தாகும். இங்கு உள்ளம் என்று சொல்லும்போது, அது தனி ஒரு வருடைய உள்ளமாகவும் அமையலாம்; அல்லது ஆண்டவனுடைய தாகவும் அமையலாம். 'பார்க்லி' அவர்கள் மற்றொரு முடிவையும் வெளியிடுகின்றார். நாம் அறியும் எண்ணங்கள், நமது அறிவுக்கு அப்பாலும் இயங்குவன; இறைவனுடைய உள்ளத்தில் தொடர்ந்து இருப்பன. எனது விருப்பம் இல்லாமலேயே எனது உள்ளத்தில் எண்ணங்கள் அமையலாம். வேண்டும் என்கிறபோது அவற்றைக் கொள்ளலாம்; வேண்டாம் என்கிறபோது அவற்றை ஒதுக்கிவிடலாம். நான் அறியும் பொருள்கள் எனது உள்ளத்தில் அமையும் எண்ணங்களே. இவை ஆண்டவனுடைய உள்ளத்திலும் அமைவதால், புறவுலகத்தில் இருப்பு தொடர்ந்து அமைகின்றது. காரணம், எனது காட்சியால்மட்டும் அவற்றின் உண்மை அமைய

வில்லை. இறைவனது காட்சியை இன்றியமையாததாக ஆக்கு கின்றோம். இதை நாம் ஒப்புக்கொள்ளாவிட்டால் புறவுலகம் அமையாது. அப்பொழுது உள்ள பொருள்கள் நமது உள்ளத்து நிலைகளே ; பொருள்களே.

'லாக்', 'பார்க்லி' ஆகிய இருவருக்கும் பின் வந்த அனுபவ வழிக் கொள்கையினராகிய 'ஹியூம்' என்பார் அறிவு அளவை இயலில் மிகச் சிறந்த சிந்தனைகளை வழங்கினார். இவர் 'லாக்' என் பார் தொடங்கிய ஆராய்ச்சியையே தொடர்ந்து ஆராய்ந்து, 'பார்க்லி' கண்ட முடிவுகளை மறுத்து ஐயக்கொள்கைக்கு (scepticism) வித்திட்டவராவர். நம் சிந்தனையை உள்முகமாகத் திருப்பி ஆராய்ந்தால், நமக்குக் கிடைப்பன தனித்த எண்ணங்கள், உணர்ச்சிகள், புலப்பதிவுகள் ஆகியவைகளே. இவை தவிர, இவற்றின் கூட்டாக அல்லது இவற்றை உள்ளடக்கியதாக 'மனம்' என்ற ஒரு பொருள் இருப்பதாகக் கொள்வதற்குத் தக்க சான்றுகள் இல்லை என்று கூறினார். இந்தியத் தத்துவஞானத்தில், பௌத்தர் கள் பொருள்களின் தன்மையை விளக்கும்போது, 'பொருள்தன்மை' என்ற ஒரு தனிப்பொருள் இல்லை என்றும், பல்வகை இயைபுற்ற பண்புகளின் கூட்டே—பஞ்ச ஸ்கந்தமே—நமக்குத் தனிப்பொருட் காட்சியை வழங்குகிறது என்றும் மிக முற்பட்ட காலத்திலேயே கூறி யுள்ளார்கள். எடுத்துக்காட்டாக, பௌத்தர்கள் 'மிலிந்த பன் ஹாவில்', 'தேர் என்ற பெயர் அதன் எந்த உறுப்பையும் குறிக் கும் சொல்லாகாது. சக்கரம் முதலிய பல உறுப்புகள், தனியொரு வகையில் இயைபுபெற்றபோது, அவ்வுறுப்புகளின் கூட்டத்தைக் குறிப்பதற்கு வழங்கும் பெயர்' என்று கூறி விளக்கினார்கள். இவற் றிற்கு மேலாக, ஹியூம் என்பார் காரணகாரியக் கொள்கையைக் குறித்த ஓர் ஆய்வை வெளியிட்டுள்ளார். அனுபவத்தில் நாம் நிகழ்ச்சி களின் தொடர்ச்சியைத்தான் காண்கிறோம். தொடர்ச்சியைக் கொண்டு அவை காரணகாரியங்கள் என முடிவுசெய்தல் இய லாது. மேலும், சில கொள்கைகளை ஆராயாமல் ஏற்பதால் தெளிவு பிறக்காது ; ஆராய்ச்சி வளராது. இந்நிலை நீங்கும் வகையில் காண்ட் (Kant) தமது 'ஆராயாத, மயக்க உணர்விலிருந்து ஹியூம் என்ப வரால் அறிவுறுத்தப்பெற்றதாக'க் கூறுகிறார்.

'ஹியூம்' புறப்பொருள்களின் தூண்டுதலால் மனத்தில் அமையும் பதிவுகளைக் (impressions) கருத்துகளினின்றும் (ideas) பிரித்துப் பேசுகிறார். புலன்களின் வாயிலாக ஏற்படுவனவற்றைப் பதிவுகள் என்று கூறுகிறார். எண்ணம் அல்லது கருத்து என்பதைச் சிந்தனையில் விளங்கும் மங்கலான உருக்கள் (faint images) என்றார். கருத்துகளும் அனுபவத்தினின்றே அமைவன. இவையும் இந்திரி

யங்கள்மூலமாகவே உள்ளே நுழைகின்றன. அனுபவத்தில் சில பதிவுகள் நல்ல உயிர்ப்போடும் வேகத்தோடும் அமைகின்றன. மனத்தை எவ்வாறு புலப்பதிவுகள் வந்து தாக்குகின்றன என்று அறிந்தால், பதிவுகளைக் கருத்துகளினின்று பிரித்து அறியலாம். சில சமயங்களில் கருத்துகள் தெளிவாக மனத்தில் எழலாம்; மனத்தினுள் புகலாம். சில சமயங்களில் பதிவுகள் தெளிவற்ற நிலையிலும் விளங்கலாம்.

'லாக்' என்பார் பொதுவாகக் கருத்துகளை எளிய கருத்துகள் (simple ideas) என்றும், சிக்கலான கருத்துகள் (complex ideas) என்றும் பகுத்திருந்ததை ஹியூம் ஏற்கிறார். அனைத்து எளிய எண்ணங்களும் நேராகப் புலப்பதிவுகட்கு ஒத்தனவாக விளங்குகின்றன. புலப்பதிவுகளினின்று தோன்றாத எளிய எண்ணங்கள் இல்லை. சிக்கலான எண்ணங்கள், எளிய எண்ணங்களை அடிப்படையாகக் கொண்டு தோன்றுகின்றன. இந்திரியங்களின் வாயிலாக அமையும் பதிவுகளும் உண்டு; சிந்தனைப் பதிவுகளும் (impressions of sensation and reflections) உண்டு. இவ்வாறு பதிவுகளைப் பாகுபடுத்திக் காணுகின்ற பகுப்பாய்வு முறையினை 'லாக்', 'பார்க்லி' ஆகிய இருவரும் பயன்படுத்தினர். பல சொற்களை நாம் ஆக்கும்போது, அச் சொற்கள் உணர்த்தும் எண்ணங்கள் உண்டு என நினைக்கிறோம். ஆனால், நாம் பல சொற்களை ஆராயுமிடத்து, அவற்றுட் சில, இந்திரியங்கள் வாயிலாகவோ, சிந்தனையின் வாயிலாகவோ தோன்றியவையாகத் தெரியவில்லை. இத்தகைய சொற்கள் பொருளற்றன. கருத்தியலிலேமட்டும் விளங்குவனவாகிய கருத்துகள் (abstract ideas), பார்க்லி கொள்கைப்படி பொருளற்றன. எண்ணங்களை ஆராயும்போது 'காரணம்' என்னும் கருத்தமைவைப் பயன்படுத்துகிறார். எங்கே நாம் காரணத்தைக் காண்கிறோம்? நாம் நமது பசியை உணர்வதுபோல், புறத்து உள்ள பொருளைக் காண்பதுபோல் காரணத்தை எங்கே காண்கிறோம்?

நாம் அவற்றைக் கருத்துகளாக உணர்கின்றோம். இக் கருத்துகள்—புலப்பதிவுகள் தனித்தனியே அமைவன. இவ்வடிப் படையில்தான் நம் அறிவு அமைகின்றது. நாம் மேசையை அறிவதாக எண்ணுகின்றபோது, நம்முடைய அனுபவத்தில் அமைவன சில புலப்பதிவுகளாகும். எடுத்துக்காட்டாக, மென்மை, வன்மை, தண்மை, நிறமுடைமை ஆகியவற்றின் தொகைதான் மேசையைப்பற்றிய அறிவு. இக் கருத்தினை மேலும் தொடர்ந்து

நாம் கருதும்போது, நம்மால் அறியப்படுவன நம்முடைய உள்ளத்தில் புறப்பொருள்களின் காரணமாக அமையும் பதிவுகள் ஆகும். மேசையினை நாம் அறிவதில்லை என்றும், அறியக்கூடுவ தில்லை என்றும் நாம் முதலில் கருதிக்கொள்ளுதல் வேண்டும். அப்படியானல் மேசையினல் அமையும் புலப்பதிவுகள் கொண்டு, மேசையின் இயல்புகளை நாம் எப்படி அறியமுடியும்? முதலாவதாக, மேசையினல் புலப்பதிவுகள் அமைகின்றன என்பதே ஐயப்பட வேண்டுவதாகும். மேஜையின் இருப்பினையே ஐயுறவேண்டியவர் களாகின்றோம். ஹியூம் என்பார் நம்முடைய காட்சிகள் தனித் தனியே உள்ளன என்றும், இவற்றிடையே எத்தகைய உறவினையும் மனம் தெளிவதில்லை என்றும் கூறுகின்றார். தனித்தனியே அமையும் புலப்பதிவுகளை ஒருங்கே உணர்வது மனம் என்பதனை அவர் மறுக்க வில்லை. ஆனல், ஒரு வன்மையும் பளபளப்புத் தன்மையும் கொண்ட புறப்பொருள் ஒன்று உண்டு என்பதனை மறுக்கின்றார். ஒரு பொருளைப்பற்றிய அறிவினை நாம் எண்ணுகின்றபோது, அவ் வறிவானது பல பதிவுகளாகப் பகுப்புக் கொள்கின்றது. அவை யாவும் ஒரே பொருளின்கண் தோன்றுவன என்று நம்முடைய மனம் உணர்வதாகக் கொள்கின்றோம். இவ்வாக்கம் மனத் தினல் ஏற்படுகின்றது என்ற ஹியூம் கருத்தை எங்ஙனம் நிறுவுவது?

'காண்ட்' என்பார் இப் பிரச்சினைகளைத் தீர்த்தார். மனத் திற்குச் சில ஆற்றல்கள் உண்டு. பலவாக அமையும் பதிவுகளை ஒழுங்குக்கு உட்படுத்தி, அவற்றின் இடையே இயைபு கண்டு பொருள் பயக்கும் காட்சியாகக் காணத் துணைசெய்வது மனம் (coherent and intelligible whole) என்றார். அனுபவம் நமக்கு அமைகின்றபோது, தனித்தனிக் குறிப்புகளாக அமைந்தாலும் அவற்றை நாம் ஒழுங்குபடுத்திக் காண்கின்றோம். புலப்பதிவுகளைத் தொகுத்துக் காணுகின்ற உரிமை மனத்திற்கு எங்ஙனம் அமை கின்றது? மனத்தின் ஆற்றல்கட்குப் புலப்பதிவுகளைப் பொருந்து மாறு செய்கின்ற உரிமை எப்படியமைகின்றது? ஏன் பொருந்துதல் வேண்டும் என்று பயன்வாதி (Pragmatist) கேட்கின்றன்.

மேற்கண்ட அறிவு அளவை இயலின் கருத்துகளை நாம் ஏற்க வேண்டுமா? இவற்றை ஏற்றுக்கொள்ளாமலேயே பயன்வாதி தன் கருத்தினை நிறுவுகின்றன். 'லாக்' என்பவர் நம்முடைய அனுபவம் தனித்தனிப் புலப்பதிவுகளை உடையன என்றும், அவற்றிடையே தொடர்புடையன என்றும் கூறினர். ஜேம்ஸ் என்பவர் இதை மறுத்து, அனுபவம் என்பது தொடர்ச்சி உடைய

தென்றும், முழுமை உடையதென்றும், அவற்றிடையே பகுப்பு களைக் காண்பது மனமென்றும் கூறுகின்றார். 'மேசையின்மீது ஒரு முட்டை இருக்கின்றது' என்ற ஒரு வாக்கியத்தை மூன்றாக வகுக்கலாம். முதலாக அமைவது முட்டை, அடுத்தது மேசை, அதற்கடுத்தது மேசையின்மீது இருப்பதாகக் கருதப்படும் முட்டை. வில்லியம் ஜேம்ஸ் என்பவர் கூற்றுப்படி, தொடர்ச்சியான ஓர் உணர்வு இருக்கின்றது என்றும், அவ்வுணர்வு முட்டை, மேசை என்று பகுத்து அறியப்படுவது என்றும், மனத்தினுடைய திறத்தினாலே இவை பகுத்தறியப்படுகின்றன என்றும் கருதப் படுகின்றது. ஆகவே, மனத்தினுடைய ஆற்றலானது பகுப்பிலே அமைகின்றது. அனுபவம் வரையறை செய்யவொண்ணாத காட்டாறுபோலத் தொடர்ந்து செல்கின்றது; அவ் வெள்ளத்தினை ஆங்காங்கே தடுத்து, பலப்பல பொருள்களாகப் பகுத்துக் காண்கின்றது. பகுக்கின்றபோது மனம் செயற்படு கின்றது; சிலவற்றைத் தள்ளி, சிலவற்றைத் தேர்ந்து காண் கின்றது. சில கூறுகள் சேர்க்கப்பெறலாம்; அக் கூறுகள் உள்ளத்தில் அமையும் நோக்குகளைப் பொறுத்தன. உண்மை யாவது நாம் அமைப்பதேயாகும்; அமைப்பு, பயனைப் பொறுத்தது. ஆகவே, அனுபவம் தொடர்ந்து நிகழ்வது என்றும், பகுக்கப்படுகின்றபோது பகுப்புகளாகவும் உணர்வுகளாகவும் ஆகின்றன என்றும் கொள்கின்றனர். இரண்டாவது, விருப்பம், பயன் இவை நோக்கி அமைவன. 'லாக்', 'பார்க்லி' ஆகிய இருவரையும் பின்பற்றி 'ஹியூம்' அவர்கள் உடன்படுவது யாதெனில், நமது உள்ளத்தின் நிலைகளே காட்சிக்குரியன என்ப தாகும். இதை இருவகையாக ஹியூம் பிரிக்கின்றார். ஒன்றைப் 'பதிவுகள்' (impressions) என்கிறார்; மற்றொன்றை 'எண்ணங்கள்' (ideas) என்கிறார். முன்னதில் புலனறிவு அடங்குகின்றது; உணர்ச்சி களும் இதனுள் அடங்குகின்றன. 'மனித இயற்கையைப் பற்றிய கட்டுரையின் முற்பகுதியிலேயே இப் பாகுபாட்டைக் காணலாம்; இப் பாகுபாடு இயல்பில், அமைப்பில் உள்ள வேறுபாடுகளைப் பொறுத்தன. இவற்றை அக இயல்பு (intrinsic quality) என்கிறார். அதாவது, எந்தக் குணம் மற்றவற்றைச் சாராது தனித்து அமைகின்றதோ, அதுவே அப் பொருளுக்கு இயல்பில் அமையும் குணமாகும். பொன்னுக்கு மஞ்சள் நிறமும் எடையும் இயல்பாக உள்ளன; பிரிக்க ஒண்ணாதவை; மதிப்பீடு, பொன்னிற்கு அயலான ஒன்றாகும்.

பதிவுகள் புலன்களின் வாயிலாக அமைவன என்றும், எண்ணங்கள் நம் கருத்தில் அமைவன அல்லது சாயல்கள் என்றும் கூறலாம். புலப்பதிவிற்குப் புறவுலகில் காரணமுண்டு.

நெருப்பின் அயலில் அமர்ந்திருக்கும்போது, நெருப்பின் வெம்மையை நாம் உணர்கிறோம். இது வெம்மையின் உணர்வா, நெருப்பின் உணர்வா ? இன்று எனது உள்ளத்தில் 'தாஜ்மஹால்' நினைவிற்கு வருகின்றது. நான் இப்போது அதைக் காணவில்லை. எனது நினைவில் எழுவதற்கு அப் புலக்காட்சி வேண்டுவதில்லை. சில சமயங்களில் நமது கற்பனைகளில் எழும் காட்சிகட்குப் புறவுலகில் பொருள்கள் இருப்பதில்லை. குடிமயக்கத்தில் இருக்கின்றபோது, விளக்குத் தூண் இரண்டாகக் காணப்படுகின்றது. ஆனால், உள்ளது ஒன்று. நான் கற்பனை உலகில் சஞ்சரிக்கலாம். கற்பனையுலகக் காட்சிகட்கு நிலவுலகில் ஒத்த கூறுகளில்லை. பதிவுகளைச் சாயல்களினின்றும் பிரித்தறிவதற்குப் புறவுலகத் தொடர்பு தேவை. புலப்பதிவுகள் புறவுலகத்தைச் சார்ந்துள்ளன. சாயல்கட்குப் புறவுலகத் தொடர்பு தேவையில்லை. 'ஹியூம்' கருத்துப்படி, நாம் நமது உள்ளத்து நிலைகளைத் தாம் அறிகின்றோம். ஆதலால், புறவுலகைப்பற்றிப் பேச உரிமை இல்லை. 'லாக்' என்பார் 'நான் புறவுலகைப்பற்றி அறிவதெல்லாம் நமது உள்ளத்து அமையும் பதிவுகளின் வாயிலாகவே' என்று குறித்தார். பதிவுகளுக்குக் காரணமான புறவுலகை நாம் அறிவது யாங்ஙனம்? அதனையறிய இயலாத நிலையில் நாம் உறுதியாக நமது உள்ளத்து நிலைகளைப்பற்றிதான் பேச இயலும். அதனால் 'ஹியூம்' அவர்கள் தெளிவாக இந்நிலையினை மேற்கொள்கின்றார். புறப்பொருள்களே கருத்துகளைத் தோற்றுவிக்கின்றன என்ற எண்ணம் பெரும்பாலோரிடத்து வலுத்து விளங்குகிறது. ஆதலால், எண்ணங்கட்குப் புறக் காரணம் இருத்தல் வேண்டும் என்று பலர் கருதுகின்றனர். 'பார்க்லி' நமது எண்ணங்களைப் புறப்பொருள்கள் விளைப்பதில்லை என்றும், அவற்றிற்குப் புறவுலகப் பொருள்கள் காரணமாகா என்றும் விளக்குகிறார். எனினும், சில எண்ணங்கள் புறத் தூண்டுதல்களால் எழுவன எனக் கூறுகிறார். இவ்வகையில் இறைவன் ஒருவன் இருந்து சில எண்ணங்களைத் தோற்றுவித்தல் வேண்டும் என்று கூறுகிறார். எண்ணங்கட்குக் காரணங்கள் இருத்தல் வேண்டும் என்று கருதுவதன் அடிப்படை யாது? என்று ஹியூம் வினவுகிறார். காரணமின்றி எந்த நிகழ்ச்சியும் நிகழ்தல் இயலாது என்பது பொதுவாக அனைவரும் ஏற்கும் உண்மை. தோற்றுவித்தலின்றித் தானே தோன்றுதல் எந் நிலையிலும் அமையாது. ஆதலால், நமது எண்ணங்களைத் தோற்றுவிக்க ஏதேனும் ஒன்று இருத்தல் வேண்டும் என்று வாதிடலாம். இந் நிலையிலும் 'ஹியூம்' தொடர்ந்து, இவ்வாறு காரணமின்றி எந் நிகழ்ச்சியும் அமைதல் இயலாது என்று நம்புவதன் அடிப்படையை ஆராய்கிறார். காரணம் குறித்த நமது நம்பிக்கையை

‘ஹியூம்’ விளக்கினார்; இவ் விளக்கம் அவருக்கு இறவாத புகழைத் தேடித்தந்தது. அனைத்து எளிய எண்ணங்களும் தொடக்கத்தில் புலப்பதிவுகளாகவே அமைவன என்ற உண்மை, அனுபவ வழிக் கொள்கையாளர்களாகிய ‘லாக்’, ‘பார்க்லி’ ஆகிய இருவருக்கும் உடன்பாடு. இக் கருத்தை ஹியூம் ஏற்கிறார் என்பதை முன்னர்க் கண்டோம். இக் கருத்தின்படி, ‘காரணம்’ குறித்த கருத்தும் புலப்பதிவுகளிலேதான் தோன்றியிருத்தல் வேண்டும். புலச் சார்பு இன்றி (apriori) காரணகாரிய உறவுபற்றிய அறிவு எழுகிறது என்று கூறுதற்கில்லை. தனியொரு நிகழ்ச்சி, காரணம் பற்றிய கருத்தைத் தோற்றுவிக்காது. ஏனெனில், ஒவ்வொரு காரியமும் ஒவ்வொரு காரணத்திலிருந்து தோன்றுவதாகும். ஆதலால், காரணகாரியக் கருத்துக்கு இருவேறு புலப்பதிவுகள் வேண்டும். இணையிணையாக அமையும் பதிவுகள் யாவும் காரண காரிய உறவுடையனவாகக் கருதுவதற்கில்லை. ஏனெனில், நாம் தொடர்புபடுத்தி எண்ணுவன அனைத்தும் காரியகாரண உறவு முறையில் அடங்காது. இருவேறு நிகழ்ச்சிகளை அடுத்தடுத்து ஒருங்கே நிகழக் கண்டாலும், அக் காட்சியே அவ்விரண்டும் காரண காரிய உறவுடையன என்று எண்ணுவதற்குத் துணைசெய்யா. ஒரு பொருளின் தோற்றம் குறித்த நிலையில் அத் தோற்றத்திற்குக் காரணமாக விளங்குவதே காரணகாரிய அறிவிற்கு அடிப்படை உணர்வு என்பர். இது குறித்து ஹியூம் கூறுவது, காரணம் குறித்த புலப்பதிவுகளில் இதுவே காரணம் என்று குறிப்பிடுகின்ற ஆற்றலைக் காணமுடியாது. புலப்பதிவுகளே நமக்கு அமைவன. ஆதலால், மேற்குறித்த ஆற்றல் நேராக அமைவது அன்று. காரண காரிய உறவு குறித்த ~~நம்பிக்கைக்கு~~ அனுபவத்தின் வழியாக நம்பிக்கை கொள்ளுதல் இயலாது. காரணம் இன்றி எந்த நிகழ்ச்சியும் நிகழாது என்ற கருத்தே, அனுமானத்தின்மூலம் அறியப்பெறுவதாகும். ஆதலால், காரணம்பற்றிய கருத்து, புலனனுபவத்தில் தோன்றுவதற்கில்லை. இயல்பில், பிறப்பிலேயே புலச்சார்பு அற்ற எண்ணங்கள் எவையும் இல்லை என்பது அனுபவ வழிக் கருத்தாகும். இந் நிலையில் எவ்வாறு நமக்குக் காரணம் பற்றிய கருத்துத் தோன்றுகிறது? இவ்வினாவிற்கு ஹியூம் தருகின்ற மறுமொழி என்னவெனில், மரபு (custom) அல்லது பழக்கத்தின் (habit) வழியாகத் தோன்றியிருத்தல்வேண்டும் என்பதே. சில பழக்க வழக்கங்கள் நம்மால் நம்புதற்குரியன அல்ல; இது போலவே, காரணகாரிய உறவும் நம்பமுடியாதது ஆகலாம். பார்க்லி, இந் நிலையில் தோன்றும் இடர்ப்பாட்டைத் தவிர்க்க, இறைவன் ஒருவன் இருந்து புறவுலகப் பொருள்கள்பற்றிய கருத்துகளைத் தோற்றுவித்திருத்தல்வேண்டும் என்று கூறுவதும் ஏற்கத்தக்கது அன்று என்பது ஹியூம் கொள்கை.

ஹியூம் இவ்வகையிலேயே ஆன்மீகப் பொருள் (spritual substance) என்ற ஒன்றும் இருத்தல் இயலாது என்பதை அளவை நெறிப்படி நிறுவுகின்றார். அது வருமாறு:

நமக்கு உள்ளங்கள் உள என்று எவ்வாறு அறிகிறோம்? நமது உள்ளத்தைப்பற்றிய கருத்துகளே நாம் பெறுவனவாகும். இது கருத்தேயன்றி, உள்ளமாகாது; உள்ளத்தைப்பற்றிய அனைத்தும் கருத்துகளே. அவ்வாறு இருக்கும்போது, கருத்துகளுக்கு அயலாக உள்ளம் என்ற ஒன்று இருக்கின்றது என்று எவ்வாறு முடிவுசெய்ய இயலும்? உள்ளம் கருத்துமட்டும் அன்று; உள்ளம் கருத்துகளை உடையது; உள்ளம் கருத்துகளைத் தோற்றுவிக்கின்றது. இந் நிலை வளர்ந்தால், மீண்டும் காரணகாரிய உறவு இடம்பெற்றுவிடுகிறது. இவ்வுறவுபற்றிய தத்துவம் புலனனுபவத்திலிருந்து பெறக்கூடியது என்றால், தத்துவம் தேவையில்லை. தத்துவம் தேவையில்லையெனில், உள்ளங்கள் இருந்து கருத்துகளைத் தோற்றுவிக்க வேண்டும் என்று கொள்ளவேண்டியது இல்லை. ஆதலால், உள்ளங்கள் குறித்தோ, இறைவன் குறித்தோ, புறவுலகப் பொருள்கள் குறித்தோ உறுதியான ஓர் அறிவை நாம் பெற இயலாது. இங்கே எழுகிற சிக்கல் யாதெனில், நாம் இவற்றிற்கு, நம் உள்ளத்திற்கு அயலான இருப்பைத் தர முற்படுவதேயாகும். உறுதியான அறிவு பெற இயலாதெனின், ஐயுறுதலே இயல்வது ஆகும். இதுவே 'ஐயக்கொள்கை' ஆகும்.

சில மெய்ப்பொருளியலறிஞர், தாம் ஒவ்வொரு கணமும் தத்தம் ஆன்மாவின் இருப்பை நேரே அறிவதாகக் கூறுகின்றனர். இக் கருத்தை ஹியூம் மறுக்கிறார். அவர், தம் அனுபவத்தில் உணர்ந்ததெல்லாம், மனம் என்பது வெவ்வேறு காட்சிகளின் தொகுப்பே ஆகும். இக் காட்சிகள் ஒன்றை ஒன்று விரைவாகத் தொடர்கின்றன என்று கூறுகிறார். மனத்தை அவர் ஒரு வெள்ளித் திரைக்கு ஒப்பிடுகின்றார். அத் திரையில் பல்வேறு காட்சிகள் தொடர்ச்சியாக விழுகின்றன; தொடர்ந்து அமையும் காட்சிகளே மனம் என்ற ஒன்று உண்டு என்ற கருத்தை நமக்குத் தோற்றுவிக்கின்றன.

## E. 'சிந்தனை வளர்ச்சி'

### கிரைட்டன் (Creighton) என்ற அறிஞரின் கருத்துகள்

#### தீர்ப்பு

தீர்ப்பு (judgment) என்பது அறிவு—சிந்தனை வளர்ச்சியின் முதற்படியாகும். தீர்ப்பு எளிமை பொருந்தியது. முதலில் சிந்தனையானது பிற நிகழ்ச்சிகளிலிருந்து எவ்வகையில் வேறுபடுகின்றது என்பதைக் கருதுவோம்.

அளவை இயல் (Logic) என்பது சிந்தனையைப்பற்றிய அறிவியல் என வரையறுக்கப்பெற்றுள்ளது. உண்மையைப் (truth) பற்றித் தெளிவான விளக்கத்தைக் கொடுப்பதுதான் அளவையியலின் குறிக்கோள். சிந்தனையானது உணர்வு முறையில் எழுவதாகும். இயந்திர நிகழ்ச்சிகள் உணர்வு முறையினின்று வேறுபடுவன. அழுத்தம், ஈர்ப்பு, வெறுப்புப் போன்றவை இயந்திர நிகழ்ச்சி களாகும். தாவரங்களிலும் விலங்குகளிலும் நாம் காண்கின்ற வளர்ச்சி முறைகள் சிந்தனையின் வளர்ச்சி முறையை அறியத் துணை புரிவனவாகும். இயந்திரங்களின் நிகழ்ச்சிகள், இயந்திரங்களின் உறுப்புகளையும் அவற்றின் அடிப்படை இலக்கணங்களையும் பொறுத்தே நிகழுகின்றன. சிந்தனை முறையை உயிர்ப்போடு—மூச்சோடு கூடிய இயக்கமெனக் கருதுதல் வேண்டும். செயலற்ற, இயக்கமற்ற சடப்பொருள்கள் போலல்லாமல், சிந்தனை முறை யானது வளர்ச்சிக் கூறுகள் உடையதாக, உயிர்ப்புடையதாக விளங்கக் காண்கிறோம்.

பரிணமம் அல்லது உள்ளது சிறத்தல் என்ற அறிவியல் கருத் தமைவு (concept of evolution in science) சிந்தனை முறையை நன்கு அறிந்துகொள்ளத் துணைசெய்வதாகும். உயிரியலில் இக் கருத் தமைவு தோன்றியது. இது உயிர்களையும் உயிர்களின் வளர்ச்சி முறைகளையும் அறியத் துணைசெய்கிறது. ஆராயப்பெறுபவை நிலைத்த மாறுத பொருள்கள் எனக் கருதாதவிடத்து, பரிணமக் கொள்கை பெரிதும் பயன்படுவது ஆகும். எந்த ஒன்றின் இயற்கையையும் அது பிறவற்றோடு கொள்ளும் உறவையும் அறிய வேண்டுமானால், அதனின் தோற்றம், வளர்ச்சி ஆகியவற்றை முறையே அறிதல்வேண்டும். சிந்தனை, உணர்வோடு கூடிய தொழிற்பாடு ஆகும்; அது ஒருவகைச் செயல் முறையும் ஆகும். ஓர் உயிர்ப்பொருள் வளர்ச்சியுறுவதைக் கூர்ந்து அறியும்போது, அவ் வளர்ச்சிக்குக் காரணமான சட்டங்கள் நமக்குப் புலனாகும். இதைப்போல, சிந்தனையின் வளர்ச்சியை வரையறை செய்யும் சட்டங்கள் இருக்கின்றன. சிந்தனையில் இடம்பெறும் வெவ்வேறு அறிவுச் செயல்களிடையே வேறுபாடு இல்லை. தீர்ப்பு, அனுமானம் (inference) ஆகியவை அறிவு நிகழ்ச்சியின் படிமுறைகளாகும்.

உயிர் வகைகளுள், தொடக்கநிலை உயிர் அமீபா (amoeba) எனப் பெயர்பெறும். இவ்வுயிர்க்கு உறுப்புப் பன்மை இல்லை; உறுப்பு ஒருமைப்பாடே உள்ளது. மேலும், தொடர்ந்து உறுப் பமைப்பு ஒருதன்மைத்தாய் விளங்குகின்றது. ஆனால், உயிர்வகை களுள், மேல்நிலையுயிர்களாக இருப்பவை, உறுப்பு வேறுபாடு உடையவை ஆகும். மேலும், உறுப்புகள் வேறுபடுவதோடு, அவற்றின் தொழிற்பாடுகளும் வேறுபடுவன ஆகும்.

'அமீபா'விணிடத்துத் தொழில் வேறுபாடு காணுதற்கு இயலாது. முதுகெலும்பு உள்ள, வளர்ச்சி பெற்ற விலங்கு களிடையே தொழிற் பாகுபாடு காணலாம். ஆதலால், உயிர் வகைகள் உறுப்பு அமைப்பிலும், அதன் தொழிலிலும் வேறு படுவன ஆகும். மற்றொரு வகையினாலும் இதனை அறியலாம். படிமுறையில் உயிர் வகைகளின் உறுப்புகளை ஆராய்ந்தால், அவை மேலும்மேலும் நுண்மையும் வளர்ச்சியும் பெற்று விளங்கு வதை அறியலாம். விரிவும் வளர்ச்சியும் பெற்ற உறுப்பு அமைப் பிற்கு ஏற்ப அதன் தொழிலும் விரிவும் நுண்மையும் பெறும்.

பரிணாம முறையானது உறுப்பு வளர்ச்சி (differentiation of structure), தொழிற் பாகுபாடு ஆகிய இரண்டையும் விளக்குவ தாகும். உறுப்பு ஒருமைப்பாடு உள்ள நிலையிலிருந்து, உறுப்புப் பன்மை பெறுகின்ற நிலைவரை—சிறிய தொடக்கநிலை உயிர்களி லிருந்து மேல்நிலை உயிர்கள்வரை—வளர்ச்சி முறைமையினை விளக்குவதே பரிணாமக் கொள்கையாகும். சிறிய உயிர்களின் உறுப்புகள் சிதைந்தால், அவ்வுயிர்களின் வளர்ச்சி தடைபடுவ தில்லை. ஆனால், மேல்நிலையில் உள்ள உயிர்களிடத்து, உறுப்புகள் சிதைவுறுமேயானால் வளர்ச்சி குன்றும். சுருங்கக் கூறின், வளர்ச்சிபெற்ற உயிர்களிடத்து, ஒவ்வோர் உறுப்பும் முக்கியத் துவம் உடையதாகும். உறுப்புகள், அவ்வற்றிற்குரிய சிறப்பு களினால் ஒரு முழுமையை உருவாக்குகின்றன. இம் முழுமையானது வெவ்வேறு உறுப்புகளின் திரட்டு அன்று. மனிதன் ஓர் உயிர்ப் பொருளென உயிரியல் வல்லார் கூறும்போது, அவனிடத்துப் பல்வேறு உறுப்புகள் இயைபு பெற்று, ஒருமைப்பாட்டுடன் தொழிற்படுவதையே (integration of function) சிறப்பாக வலியுறுத்த விரும்புகின்றனர். இவ்வாறு உறுப்புகளின் ஒருங் கியைந்த அமைப்பினையே பரிணாமக் கொள்கை வற்புறுத்துகிறது. உயிர்களின் படிநிலை வளர்ச்சியை இவ்வமைப்பின் வளர்ச்சியாகவே கருதுதல் வேண்டும். ஆதலால், பரிணாமம் என்பது தொழிற் பாட்டிலும் உறுப்பமைப்பிலும் தொடர்ந்து வேறுபாடு காணும் நிகழ்ச்சி முறையாகும்.

இந்த உயிரியல் உண்மைகொண்டு அறிவு வளர்ச்சியைக் கருது வோம். சிந்தனை முறை, தொடக்கத்தில் எந்த வேறுபாட்டையும் காணாததாகும். குழவியானது தனது உடலில் உள்ள வெவ்வேறு உறுப்புகளை அறியாது; தனது சூழ்நிலையிலுள்ளவர்களையும் பிரித்து அறியாது. ஆனால், வளர்ச்சி அடைய அடைய, தனது உடம்பின் பல்வேறு உறுப்புகளையும், சுற்றுப்புறத்தில் உள்ளவர் களையும் பிரித்தறிகிறது. இவ்வாறே அறிவு வளர்ச்சி—சிந்தனை

வளர்ச்சியானது—பகுப்பு முறையை அடிப்படையாகக் கொண்டதாகும். உறுப்புப் பன்மையும், தொழிற் பன்மையும் உடைய உயிர்ப்பொருளைப் பகுத்தறிவதுபோல, அறிவுத் தொகுதியையும் பகுத்து அதன் வெவ்வேறு கூறுகளைத் தனித்தனி அறிவதே சிந்தனை முறையாகும். மேலும், அறிவுத் தொகுதியில் இடம்பெறும் வெவ்வேறு செய்திகளை எவ்வாறு அவை இயைந்துள்ளன, ஒன்றையொன்று சார்ந்துள்ளன என்று அறிவதற்குப் பகுப்பு முறை மட்டும் போதாது; தொகுப்பு முறையும் வேண்டும். ஆதலால், அறிவுத் தொகுதியை முழுமையுடையதாகவும், உறுப்பமைதி (system) உடையதாகவும், ஒருங்கியைந்த உறுப்புகளின் தொடர்பு உடையதாகவும் கருதலாம். இதையே அறிவாராய்ச்சி இயலார் வற்புறுத்திக் கூறுகின்றனர். அறிவுத் தொகுதியானது எந்த அளவிற்கு முழுமையும், உறுப்பமைதியும், ஒருங்கியைந்த உறுப்புகளின் தொடர்பும் உடையதாக விளங்குகின்றதோ, அந்த அளவிற்கு அது வளர்ச்சிபெற்றது எனக் கொள்ளுதல் வேண்டும். அறிவு வளர்ச்சியின் குறிக்கோளாகக் கொள்ளத்தக்கது யாதெனில், காணப்பெறும் எல்லாப் பொருள்களிடத்தும் உள்ளார்ந்த ஒருமைப்பாட்டையும் தொடர்பையும் காண்பதே ஆகும். எந்த ஒரு நிகழ்ச்சியையும் அல்லது உண்மையையும் தனித்த நிலையில் காணுதல் இயலாது. அவற்றைப் பிறவற்றோடு சார்த்தி உண்மை அறிதலே அறிவின் நோக்கமாகும். ஒரு முழுப் பொருள் பல உறுப்புகளைக் கொண்டு விளங்கும். ஆனால், ஓர் உறுப்பைத் தனியே எடுத்து நோக்கும்போது, அம் முழுப் பொருளைப்பற்றிய அறிவை வெளிப்படுத்துவதாக அவ்வுறுப்பு அமைந்திருக்கும். அவ்வாறு ஓர் உறுப்பைக்கொண்டு முழுமையை—முழுப் பொருளை அறுதியிட்டுக் கூறும் ஆற்றல் அறிவியலின் தனிச் சிறப்பாகும். எடுத்துக்காட்டாக, ஒரு செடியின் இலையை அல்லது ஒரு விலங்கின் பல்லை எடுத்துக்கொள்வோம். அவை முழுப் பொருளின் உறுப்புகள். ஆனால், தாவர நூல் வல்லான் அந்த இலையைக் கொண்டே அது எந்த இனத்துச் செடியைச் சார்ந்தது என்ற முடிவுக்கு வந்துவிடுகிறான். எந்த ஒரு நிகழ்ச்சிக்கும் உரிய காரணத்தை ஆராய்வது என்பது, அந்த நிகழ்ச்சி பிறிதொன்றனோடு கொள்ளும் தொடர்பை ஆராய்வதேயாகும்.

உயிரியலில் உயிரணுவை (cell) முதலில் அறிகிறோம். இந்த உயிரணுவே, உயிரின் இயல்புகள் எல்லாவற்றையும் தன்னுள் கொண்டு விளங்குகிறது. ஆகையால், இவ்வுயிரணு ஒன்று கொண்டே பின்வரும் உயிரியல்புகள் எல்லாவற்றையும் நாம் அறிந்துகொள்ள முடியும். அவ்வாறே தீர்ப்பைக் (judgment) கொண்டே சிந்தனையின் முழு இயல்புகளையும் அறிய இயலும்.

மனம் ஏதேனும் ஒன்றைப்பற்றிச் சிந்தித்து முடிவுகொள்கிறது. மனத்தின் இத்தகைய சிந்தனையையும் முடிவையும் நாம் தீர்ப்பு எனக் கொள்ளலாம். இத் தீர்ப்பு ஒரு கருத்துரையாக (proposition) உருக்கொள்கிறது. ஆதலால், தீர்ப்பு, சிந்தனையையும், அச் சிந்தனையினுல் விளையும் பயனையும் ஒருங்கே உணர்த்துவது எனக் கொள்ளலாம். கருத்துரை என்பது எழுத்திலோ அல்லது பேச்சிலோ உருக்கொள்ளுவதைக் குறிக்கும். கருத்துரை ஒரு தீர்ப்பினை வெளிப்படுத்துகிறது. இக் கருத்துரை மூன்று கூறுகளை உடையது. ஒன்று எழுவாய், இரண்டு பயனிலை, மூன்று இணைப்பு (copula) ஆகும். எப் பொருளை விளக்க முற்படுகிறோமோ அப் பொருள் எழுவாய்; அப் பொருளைப்பற்றிய விளக்கம் பயனிலை; இவ்விரண்டையும் ஒற்றுமைப்படுத்தும் உறுப்பு 'இணைப்பு' எனக் கூறப்பெறும். 'இரும்பு ஓர் உலோகம் ஆகும்' என்ற கருத்துரையில், இரும்பு எழுவாய்; உலோகம் பயனிலை; ஆகும் என்பது இணைப்பு.

தீர்ப்பில் காணப்பெறும் கருத்துகள் முன்னமேயே உள்ளனவாகும். சிந்தனையானது கருத்துகளை வரிசைப்படுத்தி ஒரு தீர்ப்பை வழங்குகிறது. ஆதலால், தீர்ப்பு நிகழ்வதற்கு முன்னர் கருத்துகள் எவ்வாறு உருப்பெற்றன என்று அறிதல் வேண்டும். கருத்துகள் உருவாகும் முறை 'கருத்தமைவு' (concept) எனப் பெயர்பெறும். இரும்பை உலோகம் என அறிவதற்கு முன்னர், உலோகம் என்ற சொல்லிற்கு உரிய பொதுக் கூறுகள் யாவை என்பதை அறிந்திருக்கவேண்டும். இவ்வாறே இரும்பின் பொதுக் கூறுகளையும் அறிந்திருந்தாலன்றி, அதனை உலோகம் எனக் கொள்ளுதல் இயலாது. தீர்ப்புகள் என்பவை கருத்துகள் தரும் பொருளுக்கு மேலாக, ஆனுல், அவைகளின் இணைப்பாக ஒரு கருத்தை வழங்குகிறது எனக் கொள்ளலாம். இக் கருத்தமைவுகள் எவ்வாறு தோன்றுகின்றன? இரும்பு என்ற ஒரு பொருளைச் சுட்டுவதற்கு, அதன் பல இயல்புகளைப் பல சமயங்களில் தனித்தனியே அறிந்திருத்தல் வேண்டும். அவ்வாறு அறியும்போதெல்லாம் தனித்தனித் தீர்ப்புகள் தோன்றியிருக்கவேண்டும். எனவே, கருத்தமைவு என்பது பல தீர்ப்புகளை ஒருங்கு சேர்த்துணர்த்தும் ஒரு குறியீட்டுச் சொல் (symbol) எனலாம். இங்கே சிந்தனையின் நிகழ்ச்சிக்கு மொழி துணைசெய்கிறது. பல தீர்ப்புகளைத் தொகைப்படுத்தி ஒரு சொல்லாக அல்லது ஒரு தொடராகக் குறியிட்டு வழங்குவதற்கு மொழி துணை செய்கிறது. ஆதலினுல், ஒவ்வொரு சொல்லும் அறிவின் தொழிற்பாட்டை உணர்த்துவதாகும். நாம் மொழி பயிலும்போது பல சொற்களின் ஆட்சியை அறிகிறோம். சொற்களே கருத்தமைவுகள் ஆகா. நம் சிந்தனைகளின் குறியீடு

புறவுலகு எவ்வாறு வெவ்வேறு பகுதிகளால் இணைந்துள்ளது என அறிதலே சிந்தனையின் பணியாகும். தீர்ப்பானது சிந்தனையின் செயலாகும். தீர்ப்பு சிந்தனையுடன் கூடிய ஒரு செயல் நிலையாகும். புறவுலகினை அறியும் வகையில் தீர்ப்பு ஒரு முயற்சியாகும். தீர்ப்பு எவ்வாறு புறவுலகினை அறிதற்குத் துணைசெய்கிறது? பாகுபாடுமூலம் தொழிற்படுகிறதா? எவ்வெப் பகுதிகளால் பொருள்கள் ஆக்கமுறுகின்றன என்று பகுத்துக் காணுதலாகிய முறையின்மூலம் தீர்ப்புத் தோன்றுகிறதா? எவ்வெப் பகுதிகள் ஒன்றினோடு ஒன்று இணைந்து முழுமையுறுகின்றன என்று காணும் வகையில் தீர்ப்புத் தோன்றுகிறதா? அல்லது பகுப்பு, இணைப்பு ஆகிய இரு வகைகளாலும் ஒருங்கே தீர்ப்புப் பிறக்கின்றதா?

ஒருவன் ஒரு பொருளைக் குறித்துத் தீர்ப்புக் கொள்கின்றான் என்று வைத்துக்கொள்வோம். அவனது உள்ளத்தில் நிகழ்வது யாது? ஓர் எடுத்துக்காட்டைக் கருதுவோம்: ரோஜாச் செடிக்கு இறகுபோல் அமைந்த இலை அமைப்பு உண்டு என்பது தீர்ப்பு. ரோஜாச் செடியினிடத்து அமைந்த புதியதொரு பண்பினை இத் தீர்ப்புப் புலப்படுத்துகிறது. இதுகாறும் அப் பண்பு காணப்பெறவில்லை. தீர்ப்புத் தோன்றுவதற்கு முன்னர் அறியப்பெறாதிருந்த பண்பு இப்போது அறிவிக்கப்பெறுகிறது. இங்கு நிகழ்வது பாகுபாடேயாகும். ஒரு பொருளின் பகுதிகள் அல்லது சிறப்புகள் முதலில் தொகையாக அறியப்பெற்றன; தற்போது பிரித்து அறியப்பெறுகின்றன. சிந்தனையின் இன்றியமையாத கூறு இப் பாகுபாடு ஆகும். ஒரு பொருளை நன்கு அறிதற்கு அப் பொருளின் பல்வேறு உறுப்புகள் அல்லது பகுதிகள் அறியப்பெறுதல் இன்றியமையாததாகும். பொருள்கள் எவ்வாறு வேறுபடுகின்றன என்று அறிதல் வேண்டும். பொருட்காட்சிக்கு உரிய வேறுபாடுகளைக் காணுதொழிதல் தவறாகும். தீர்ப்பு நிகழ்கின்ற எல்லா நிலைகளிலும் இப் பாகுபாடு விளங்கக் காணலாம்.

மேலும், ரோஜாச் செடி இறகுபோன்ற இலைகளை உடையது என்று நாம் கருதிய தீர்ப்பை ஆராய்வோம். புதிய பண்பு ஒன்றை அறிதல், தீர்ப்பின் ஒரு கூறே ஆகும். இப் புதிய பண்பு ரோஜாவின் ஏனைய பண்புகளோடு இயைந்த ஒன்றாக அறியப்பெறுகின்ற ஒரு நிலையையும் தீர்ப்பினிடத்துக் காணுகிறோம். ஆகவே, பகுப்பு, இணைப்பு ஆகிய இரு நிலைகளும் தீர்ப்பிற்குரியனவே ஆகும். முட்பகுதிகள், மணமிக்க மலர்கள், இறகு போன்ற இலைகள் ஆகிய பாகுபாடுகளும் ஒருங்கே ரோஜாச் செடியினிடத்து உள்ளனவாக அறிதலாகிய நிலையே தீர்ப்பு

விளங்குகின்றன. சிந்தனை முறையானது தன்னைத் தானே திறனாய்வு செய்வதில் வல்லது; தன்னிடத்தில் உண்மையின் உயர்நிலைச் சட்டத்தை உடையது ஆகும்; இவ்வுண்மை சிந்தனையின் வளர்ச்சியில் வெளிப்படுவது ஆகும். தீர்ப்புகள் பொதுமை யுடையனவாக, எல்லாச் சிந்தனை உள்ளங்களுக்கும் ஏற்புடை யனவாக விளங்காவிடில், தனித்த கொள்கைகளே சிறப்புப் பெற்றதாகி, உண்மையின் பொதுமைப் பண்பு தோன்றாது போய்விடும். இந் நிலை 'ஐயக் கொள்கை'க்கு வழிவகுக்கும்.

**தீர்ப்புகளின் இன்றியமையாமை (Necessity) :** ஒருவன் சிந்தனையின்மூலமாக, தான் நினைத்த ஏதோ ஒரு முடிவினைத் தீர்ப்பாகக் கொண்டுவர இயலாது. அவன் தான் சிந்திக்கின்ற கருத்துரைகளில் அடங்கியிருக்கும் முடிவுகளைமட்டுமே ஏற்க வேண்டியவனாகிறான். அன்றாட வாழ்வில் நாம் கொள்ளும் தீர்ப்புக்கு உரிய காரணங்களை முறைப்படுத்தி அறிவதில்லை. இங்கே இன்றியமையாமை உணரப்பெறுகிறது. சிந்தனையின் உயர்நிலைகளில் இன்றியமையாமையின் அடிப்படைகளை உணரத் தலைப்படுகிறோம். எத்தகைய தனி ஒரு தீர்ப்பும், பிற தீர்ப்புகளோடு கொண்டுள்ள உறவை அறியும்போது, இன்றி யமையாமை புலனாகின்றது. வெவ்வேறு தீர்ப்புகள் தங்களுக்குள் கொண்டுள்ள உறவையும், அவை தங்களுக்குள் உள்ளார்ந்த நிலையில் அமைத்துக்கொண்டிருக்கிற சார்பையும் வெளிப் படையாக நாம் காண்பதற்கில்லை. இவற்றை நாம் வெளிப்படுத்தவேண்டும். அவ் வெளிப்பாடு 'இன்றியமையாமை' யினால் நேர்கிறது. அனுமான அளவையாக இது வளர்ச்சி யுறும்போது நாம் விளக்கம் பெறுகிறோம். இன்றியமையாமை நேராக வெளிப்படுவது அன்று. சில உண்மைகள் தம்மளவிலேயே தம் உண்மையைப் புலப்படுத்துவன அல்ல; அவற்றின் உண்மையை உணரப் பிறவற்றைக் கருதுதல் வேண்டும். ஒரு நிகழ்ச்சியை விளக்கும்போது, அந் நிகழ்ச்சிக்குக் காரணமான தத்துவத்தை அறிய முற்படுகிறோம். அத் தத்துவம் பிற தத்துவங்களை அடிப்படையாகக் கொண்டதாகும். எந்த நிலையிலும் பிறவற்றைச் சாராது தன்னிலையிலேயே உண்மையாக விளங்குவனவற்றைக் காண்பது அருமையுடையது போல் தோன்றும். சில உண்மைகள் தற்புல உண்மைகளாதல் வேண்டும். இவைகள் தம்மிடத்தில் விளங்கும் இன்றியமை யாமையை உடனாகப் புலப்படுத்தல் வேண்டும். இத்தகைய உண்மைகளை இன்றியமையாத உண்மைகள் எனவும், புலச்சார் பற்ற உண்மைகள் எனவும், அடிநிலைத் தத்துவங்கள் எனவும் கூறுகின்றனர்.

புறவுலகு எவ்வாறு வெவ்வேறு பகுதிகளால் இணைந்துள்ளது என அறிதலே சிந்தனையின் பணியாகும். தீர்ப்பானது சிந்தனையின் செயலாகும். தீர்ப்பு சிந்தனையுடன் கூடிய ஒரு செயல் நிலையாகும். புறவுலகினை அறியும் வகையில் தீர்ப்பு ஒரு முயற்சியாகும். தீர்ப்பு எவ்வாறு புறவுலகினை அறிதற்குத் துணைசெய்கிறது? பாகுபாடுமூலம் தொழிற்படுகிறதா? எவ்வெப் பகுதிகளால் பொருள்கள் ஆக்கமுறுகின்றன என்று பகுத்துக் காணுதலாகிய முறையின்மூலம் தீர்ப்புத் தோன்றுகிறதா? எவ்வெப் பகுதிகள் ஒன்றிேனாடு ஒன்று இணைந்து முழுமையுறு கின்றன என்று காணும் வகையில் தீர்ப்புத் தோன்றுகிறதா? அல்லது பகுப்பு, இணைப்பு ஆகிய இரு வகைகளாலும் ஒருங்கே தீர்ப்புப் பிறக்கின்றதா?

ஒருவன் ஒரு பொருளைக் குறித்துத் தீர்ப்புக் கொள்கின்றான் என்று வைத்துக்கொள்வோம். அவனது உள்ளத்தில் நிகழ்வது யாது? ஓர் எடுத்துக்காட்டைக் கருதுவோம்: ரோஜாச் செடிக்கு இறகுபோல் அமைந்த இலை அமைப்பு உண்டு என்பது தீர்ப்பு. ரோஜாச் செடியினிடத்து அமைந்த புதியதொரு பண்பினை இத் தீர்ப்புப் புலப்படுத்துகிறது. இதுகாறும் அப் பண்பு காணப்பெற வில்லை. தீர்ப்புத் தோன்றுவதற்கு முன்னர் அறியப்பெறாதிருந்த பண்பு இப்போது அறிவிக்கப்பெறுகிறது. இங்கு நிகழ்வது பாகு பாடேயாகும். ஒரு பொருளின் பகுதிகள் அல்லது சிறப்புகள் முதலில் தொகையாக அறியப்பெற்றன; தற்போது பிரித்து அறியப்பெறுகின்றன. சிந்தனையின் இன்றியமையாத கூறு இப் பாகுபாடு ஆகும். ஒரு பொருளை நன்கு அறிதற்கு அப் பொருளின் பல்வேறு உறுப்புகள் அல்லது பகுதிகள் அறியப்பெறுதல் இன்றி யமையாததாகும். பொருள்கள் எவ்வாறு வேறுபடுகின்றன என்று அறிதல் வேண்டும். பொருட்காட்சிக்கு உரிய வேறுபாடு களைக் காணுதொழிதல் தவறாகும். தீர்ப்பு நிகழ்கின்ற எல்லா நிலைகளிலும் இப் பாகுபாடு விளங்கக் காணலாம்.

மேலும், ரோஜாச் செடி இறகுபோன்ற இலைகளை உடையது என்று நாம் கருதிய தீர்ப்பை ஆராய்வோம். புதிய பண்பு ஒன்றை அறிதல், தீர்ப்பின் ஒரு கூறே ஆகும். இப் புதிய பண்பு ரோஜாவின் ஏனைய பண்புகளோடு இயைந்த ஒன்றாக அறியப் பெறுகின்ற ஒரு நிலையையும் தீர்ப்பினிடத்துக் காணுகிறோம். ஆகவே, பகுப்பு, இணைப்பு ஆகிய இரு நிலைகளும் தீர்ப்பிற் குரியனவே ஆகும். முட்பகுதிகள், மணமிக்க மலர்கள், இறகு போன்ற இலைகள் ஆகிய பாகுபாடுகளும் ஒருங்கே ரோஜாச் செடியினிடத்து உள்ளனவாக அறிதலாகிய நிலையே தீர்ப்பு

ஆகும். பாகுபாட்டைக் காணுகின்ற நிலையிலேயே தீர்ப்பு அமைவதில்லை. இப் பாகுபாடு புதிய பண்பைப் புலப்படுத்துகிறது. ஆனால், இப் பண்பு ஒரு கருத்துடையது என்று அறியப் பெறுகிறது. பிற பண்புகளோடு இணைந்த நிலையிலேயே புதிய பண்பு புலனாகும்.

ஆதலால், ஒவ்வொரு தீர்ப்பும் வெவ்வேறு பகுதிகளின் இணைப்பைப் புலப்படுத்துகின்றன. பகுப்பும் இணைப்பும் ஒன்றியைந்த நிலையில், தீர்ப்பு ஆகிறது. இப்போது எழுகிற கேள்வி, எவ்வாறு தீர்ப்பானது பகுப்பு, இணைப்பு ஆகிய இருவேறு நிலைகளிலும் தொழிற்பட இயலும்? இவை ஒன்றினொடொன்று முரண்பாடுடையன அல்லவா?

சடப்பொருள்களைப் பகுத்தல் அல்லது பிரித்தல் என்பது சேர்த்தல் என்பதன் மாறுபாடு ஆகும். ஆதலால், பகுக்கும்போது சேர்க்க இயலாது. ஆனால், இந்நிகழ்ச்சிகள் நமது மனத்தில் நிகழ்கின்றபோது மாறுபாடு ஏதும் இருப்பதில்லை. ஒரு கடிகாரத்தின் இயந்திர அமைப்பினை ஒருவன் அறிவதாக வைத்துக் கொள்வோம். எவ்வாறு கடிகாரம் இயங்குகிறது என்று அறிய இருவேறு செய்திகள் அறிய வேண்டும். முதலில் கடிகாரத்தின் அனைத்துப் பகுதிகளையும் அறியவேண்டும். வெவ்வேறு அளவினதாக விளங்கும் சக்கரங்கள், சுருள்வில்கள், ஊசிகள் (மணி காட்டும் முள்) ஆகிய யாவற்றையும் அறிதல் வேண்டும். இப் பகுதிகளைத் தனித்தனியே அறிகின்ற நிலையிலேயே கடிகாரததை அறிய இயலாது. எவ்வாறு வெவ்வேறு பகுதிகள் இணைந்து மணி காட்டுவதற்குத் தொழிற்படுகின்றன என்று அறிகின்ற நிலையிலேதான் கடிகாரத்தின் இயக்கம் புலனாகும். ஒவ்வொரு பகுதியும் பிற பகுதிகளோடு பொருந்துமாற்றையும், எல்லாப் பகுதிகளும் இணைந்து தொழிற்படுமாற்றையும் அறியவேண்டும். இவற்றை அறிந்தாலன்றிக் கடிகாரத்தின் இயக்கம் விளங்காது. பகுப்பு, இணைப்பு ஆகிய இரண்டும் அடுத்தடுத்து நிகழ்வனவாகக் கொள்வதற்கில்லை. பகுப்பும், இணைப்பும் பின்னிப் பிணைந்த நிலையிலேயே நிகழ்வனவாகும். ஒரு பொருளின் பல்வேறு பகுதிகளை அறியும்போதே அவை தொடர்புற்று விளங்குதலையும் அறிகிறோம். கடிகாரத்தை அறியும்போது நாம் பகுத்துப் பார்த்தோம். அவற்றை இணைத்தோம். சடப்பொருள்களை அறியும்போது பகுப்போ, இணைப்போ ஏதோ ஒன்றுதான் நிகழும். சிந்தனையின் நிகழ்விலே ஒவ்வொரு தீர்ப்பு நிகழும்போதும் பகுப்பும் இணைப்பும் ஒருங்கே நிகழக் காணலாம். பகுப்பை இணைப்பினின்று நீக்கியோ, இணைப்பைப் பகுப்பினின்று நீக்கியோ

அறிதல் சிந்தனையில் இயலாததாகும். பகுப்பு, இணைப்பு ஆகிய இரு கூறுகளும் ஒவ்வொரு தீர்ப்பிலும் விளங்கினாலும், அவ்விரண்டும் ஒருங்கே வெளிப்பட்டுத் தோன்றுவதில்லை. தீர்ப்பு அவ்வப் பொழுது இவற்றுள் ஏதேனும் ஒன்றைப் புலப்படுத்துவதே முக்கியமாக விளங்குகிறது. தண்ணீரை நீர்வாயு, பிராணவாயு ஆகிய இரண்டாகப் பகுக்கலாம். இந்தத் தீர்ப்பில் பாகுபாட்டை வெளிப்படுத்துவதே நோக்கமாகும். இக் கூறுகள் ஒரு முழுமையின் பகுதிகளென அறிதல் வெளிப்பட்டுத் தோன்றவில்லை. சுருள் வில்களும், சக்கரங்களும் சேர்ந்த நிலையிலே கடிகாரம் அமைகிறது என்று கூறும்போது, அத் தீர்ப்பு இணைப்பை வெளிப்படுத்துகிறது. இணைப்பு முதன்மை பெறுகிறது; பகுப்புப் பின்னணியில் நிற்கிறது. பகுப்பு முதன்மை பெறுகிறபோது, இணைப்புப் பின்னணியில் நிற்கிறது.

பகுப்பைப் புலப்படுத்தும் தீர்ப்புகள், இணைப்பைப் புலப் படுத்தும் தீர்ப்புகளின் வேறானவை என ஒருகாலத்தில் கருதப் பெற்றது. இக் கருத்து மேற்கண்டதற்கு மாறானதாகும். பகுப்பு, இணைப்புத் தீர்ப்புகள் முற்றிலும் வேறானவை என்று கருதுதற் கில்லை. கருத்துரையினைப் பகுக்க இயலும். ஆனால், தீர்ப்பு, பகுக்க ஒண்ணாதது. அறிவின் 'அமைப்பு'க் காணுதல் தீர்ப்பு ஆகும். தீர்ப்பு, பகுத்தும் இணைத்தும் தொழிற்படுகிறது. இதை மேலே கண்டோம். இப்போது அறிவின் அமைப்பிலே தீர்ப்புக் கொள்கின்ற பங்கு யாது? என அறிவோம். தீர்ப்பு, பகுப்பு ஆகிய இரு தொழில்களும் ஒருங்கே நடைபெறுகின்றன. புதிய பகுதிகளும் பண்புகளும் தீர்ப்புகளால் புலப்படுத்தப்பெறுகிற போதே, அப் பகுதிகளும் பண்புகளும் எவ்வாறு இணைந்துள்ளன என்பதையும் அறியமுடிகிறது. இச் சட்டத்தின்படியே நமது சிந்தனை இயங்குகிறது. ஒவ்வொரு தீர்ப்பும் அறிவின் அமைப்பைக் காணுதலில் பங்கு கொள்கிறது. இப் பங்கினை அறிவோம். இங்கு முக்கியமாக அறியவேண்டுவது 'அமைப்பு' என்னும் சொல்லாகும். இச் சொல்லின் பொருள் யாது? அமைப்பு என்பது பல்வேறு பகுதிகளால் ஆய ஒரு முழுமையாகும். இவ்வமைப்பு அல்லது முழுமை தொகுப்பின் வேறாகும்; குவியலின் வேறாகும். தானியக் குவியல், கற்குவியல் ஆகியவற்றினின்று ஒரு பகுதியை நீக்கினால், பிற பகுதிகள் சிதைவுறா; ஆனால், ஓர் அமைப்பில் ஒவ்வொரு பகுதிக்கும் நிலைத்த இடமும், பிற பகுதிகளோடு முழுமையோடு நிலைத்த உறவும் உண்டு. இவ்வகையில் உடம்பு, கட்டடம், இயந்திரம் ஆகிய யாவும் அமைப்பே. கட்டடத்தில் ஒவ்வொரு கல்லிற்கும் இடமுண்டு; பங்குண்டு. கடிகாரத்தில் ஒவ்வொரு சக்கரத்திற்கும் சுருள்வில்லிற்கும் பங்குண்டு; உரிய தொழிலுண்டு.

இவ்வகையில் நோக்கும்போது, வளர்ச்சியுள்ள உயிரினத்தில் வெவ்வேறு உடற் பகுதிகளின் தொழிலும், அவ்வுயிரினத்தின் வளர்ச்சியாகிய முழுமையில் அப் பகுதிகளின் பங்கும் ஒருங்கே அறியலாம். செடியின் வெவ்வேறு பகுதிகட்கு வெவ்வேறு தொழில்கள் உண்டு ; இதேபோல் விலங்கினிடத்தும் ஒவ்வொரு பகுதிக்கும் தனித்தனியே தொழில் வேறுபாடு விளங்குவதை அறியலாம். இவற்றுள் ஒவ்வொரு பகுதியும் முக்கியமாகும். எப் பகுதி சிதைந்தாலும் அச் சிதைவால் ஏனைய பகுதிகள் தாக்குறும். இதனை உயிர்ப்பொருள் அமைப்பெனக் (organism) கூறலாம். இவ்வகையிலேயே சமுதாயமும் ஒருவகையில் உயிர்ப் பொருள் அமைப்பைப் போன்றதே யாகும். சமுதாயத்தில் பலர் உளர். இவர்கள் தனித்தனியே இயங்கும் முதல்நிலைக் கூறுகளெனக் கருதுதற்கில்லை. இவர்கள் ஒருவரோடு ஒருவர் இன்றியமையா உறவுநிலையில் உள்ளவராவர். ஒருவர்க்கு ஒருவர் உதவிபுரிபவராக அல்லது ஊறு விளைப்பவராக இருக்கின்றனர்.

தீர்ப்பானது அறிவாகிய அமைப்பை ஆக்குகிறது என்பதை மேலே கண்டோம். இந் நிகழ்ச்சி ஒரு செய்தியை மற்றொன்றோடு சேர்ப்பது அன்று. பல கற்கள் ஒருங்கே சேரும்போது குவியல் ஆகலாம். எண்ணங்களின் குவியலே தீர்ப்பெனக் கருதுவதற் கில்லை. தீர்ப்பானது தெரிந்த சில கருத்துகளோடு புதிய சில கருத்துகளைச் சேர்க்கின்றது. இச் சேர்க்கையானது திறம்பெற நிகழ்கின்றது. ஆதலால், முழு அமைப்பில் ஒவ்வொரு கருத்திற்கும் உரிய இடம் உண்டு. ஒவ்வொரு கருத்தும் பிற கருத்துகளோடு கொள்ளும் உறவும், ஒன்றையொன்று சார்ந்து இருக்கின்ற நிலையும் மேற்குறித்த சேர்க்கையால் வரையறை உறுகின்றன. வெவ்வேறு கருத்துகள் ஒழுங்கு பெறுகின்றன, உறவு கொள்கின்றன, அமைப்பைப் பெறுகின்றன என்று கொள்ளுதல் வேண்டும். எக் கருத்தும் தனித்து நிற்காது ; பெரிய அமைப்பில் அக் கருத்திற் குரிய இடத்தைப் பெறுகின்ற அளவிலேயே, அக் கருத்து அதன் மதிப்பையும் பொருளையும் பெறுகின்றது. தனியொரு தீர்ப்பானது சிந்தனையின் அமைப்புக்குப் போதாது. பல தீர்ப்புகள் ஒன்று சேர்ந்த நிலையில்தான், நாம் ஓர் அமைப்பினைக் காணமுடியும். எடுத்துக்காட்டு ஒன்றைத் தருவோம். ஓர் ஒலி கேட்கின்றது. அதைப் பன்னிரண்டு மணிக்கு நாள்தோறும் ஒலிக்கும் ஒலியாக அறிகிறோம். இத் தீர்ப்பிலேயே ஆக்க அமைப்பினைக் காணலாம். கேட்டது ஒலி ஆனால், அவ்வொலியை நமது அனுபவத்தோடு சேர்த்துப் பார்த்து, இன்னது என அறிகிறோம். தொடக்க நிலையில் ஒலியைத் தனி ஒலியாக அறிந்திருப்போம். பின்னர், அவ்வொலி ஒருவகைப் பொருளை நமக்கு உணர்த்த வல்லதாகிறது.

இவ்வாறாகவே, ஒவ்வொரு புதிய அனுபவமும் முன்னர் அமைந்துள்ள அனுபவங்களோடு பொருந்துகின்ற நிலையில்தான் பொருள் உடையதாக அமைகிறது. ஒவ்வொரு புதிய அனுபவமும் இவ்வாறு பொருத்தப்பெறுகின்றபோது, கருத்துகள் மாற்றமுற்றுப் புதிய அமைப்பினைப் பெறுகின்றன. இம் மாற்றம் நாம் அறியாத வகையிலேயே பெரும்பாலும் நிகழ்கிறது. ஆனால், சில புதிய கருத்துகள் ஏற்கெனவே உள்ள கருத்துகளை அடியோடு மாற்றியமைக்கவல்ல புரட்சிக் கருத்துகளாக அமைகின்றன. டாலமி (Ptolemy) என்ற கிரேக்க வானநூலறிஞர் பூமியானது நடுவில் அமைய, ஏனைய சூரியன், சந்திரன் முதலியவை அதைச் சுற்றி வருவனவாகக் கருதினார். பின்னர்த் தோன்றிய கோப்பர்நிக்கஸ் (Copernicus) என்ற அறிஞர், இக் கருத்துக்கு மாறாக, சூரியனே நடுவில் இருக்க, பூமி முதலியவை சூரியனைச் சுற்றிவருவதாகக் கூறினார். மேலும், இத்தகைய கருத்து மாற்றத்தால் சமய உலகில் விளைந்த எழுச்சிகள் பலவாகும்.

இதுகாறும் விளக்கிப் போந்தவாற்றால், தீர்ப்பானது அறிவின் ஆக்கத்திற்குத் துணைபுரியும் முறை என்று கண்டோம். சிந்தித்தலால் அல்லது தீர்ப்புகள் செய்தலால், அனுபவத்தின் பல்வேறு பகுதிகளை இயையுமாறு செய்கிறோம். நாம் காணும் இயைபு நம் அறிவாற்றலைப் பொறுத்தது. கல்விப் பயிற்சி இல்லாதவன், குழந்தை, சிந்தனை அற்றவன் ஆகியவர்களுடைய அறிவு தொடர்புறாத செய்திகளாகத் தனித்து விளங்குவனவாகும். அவை தொகுதியாகலாம்; ஆனால், அவை 'அமைப்பு' ஆகாது. ஆனால், மனித அனுபவத்தில் எப் பகுதியும் முழுமையுற்ற அமைப்பைப் பெற்றதில்லை. அறிவியல் துறைகளுள் அறியப் பெற்ற கருத்துகள் அவ்வத்துறையில் அமைப்புற்று விளங்குதலே பெரும்பாலும் இல்லை எனலாம். சில சமயங்களில் பௌதிகத் துறைகளில் கண்ட உண்மைகளானவை மெய்ப்பொருளியல், சமய இயல் ஆகிய துறைகளில் கண்ட உண்மைகளோடு முரணுவன ஆகலாம். ஆனால், அறிவின் குறிக்கோள் ஒன்றே. உண்மை என்றும் பகுக்கவொண்ணாததாகவும், ஒருமையுடையதாகவும் விளங்குகிறது. ஆதலால், அனைத்துச் செய்திகளையும் முடிவாக இயைத்து, ஒரு பேருண்மையாக அறிய இயலும் என்ற நம்பிக்கை விளங்குகிறது.

அறிவினது வளர்ச்சியை வரையறை செய்யும் தத்துவங்கள் யாவை என அறிதலே நமது கடமையாகும். இத் தத்துவங்கள் சிந்தனையின் சட்டங்கள் ஆகும். சட்டங்கள் என்ற சொல்லைத் தவறாகப் புரிந்துகொள்ளவும் கூடும். இயற்கையில் சில ஒழுங்கு

முறைகள் உள்ளன என்று அறிவியலறிஞர் கூறுகின்றனர்; அவற்றையும் நாம் சட்டங்கள் என வழங்குகிறோம். ஒரு நாடு, தனது குடிமக்கள் ஒழுகவேண்டிய முறைகளை வரையறை செய்து சட்டங்களை வகுத்துள்ளது. மேலும், சில சட்டங்கள் நுண்ணியன வாக விளங்குகின்றன. இவை ஒழுக்கத்துறையில் இயங்குவன. ஆதலால், 'சட்டம்' என்ற சொல் அரசியலில்மட்டும் வழங்குவ தன்று. இயற்கையின் சட்டங்கள் விளக்கத்திற்காக அமைவன; இயற்கையில் நிகழ்வனவற்றை விளக்குவன. இயற்கையில் நிகழ்ச்சிகள் எவ்வாறு தோன்றுகின்றன? நிகழ்கின்றன? என்று அறிதலே அறிவியலின் நோக்கமாகும். விஞ்ஞான உண்மைகள் இயற்கை நிகழ்ச்சிகளை விளக்குவன; சிந்தனையின் அமைப்பை விளக்கும் நிகழ்ச்சிகள் வேறு வகையின. இவை சில விதிகளை விதிக்கின்றன. இவ் விதிகளின்படி சிந்தனை நிகழும்போது சிந்தனை செவ்வையாக நிகழும். ஒரு நாட்டின் அரசியல் அமைப்பும் சில சட்டங்களை விதிக்கின்றன; குடிமக்கள் எவ்வாறு ஒழுகவேண்டும் என்று இச் சட்டங்கள் அரசியலமைப்பால் மக்கள்மீது சுமத்தப் பெறுகின்றன. இவை புறத்தே விளங்குவன. மக்கள் அரசியல் சட்டத்தின்படி ஒழுகாவிடில் தண்டனைக்குள்ளாவர். ஆனால், சிந்தனையைக் குறித்த சட்டங்கள் புறத்தே இருந்து ஆட்சிசெய்யும் ஒருவனால் சுமத்தப்பெறுவன அல்ல. இச் சட்டங்களை மீறும்போது எவ்விதத் தண்டனையுமில்லை. ஆனால், சிந்தனையின் நிகழ்ச்சி தடைபடும்; பிழை நேரிடும். ஒழுக்க உலகில் விளங்கும் சட்டங்கள் புறத்தினின்று ஆட்சியுள்ள ஒருவனால் சுமத்தப்பெறுவன அல்ல. ஒருவன் தானே வலிந்து ஏற்கும் சட்டங்களே அறவுலகச் சட்டங்க ளாகும். காவல்துறை அலுவலர் உள்ளபோது ஒருவன் திருடாது இருந்து, பின்னர் அவர்கள் நீங்கிய நிலையில் திருடுதல் அவனது ஒழுக்க நிலையைப் புலப்படுத்துகின்றது. எந் நிலையிலும் திருடா திருத்தலே அறம் என ஏற்று ஒழுகுபவன் தனது அகநிலையில், தனிப் பட்ட நிலையில் ஓர் இலட்சியமுள்ளவனாவான்; சிந்தனையுலகச் சட்டங்களை ஏற்காத நிலையிலும், அவற்றை மீறுகின்ற நிலையிலும் சிந்தனை பாழ்படுகின்றது; தடைபடுகின்றது. இதேபோல் அறவுலகச் சட்டங்களை மீறினாலும் ஒருவனது அறவாழ்வு குன்று கிறது. ஆதலால், அந்தந்த உலகிலே ஆராய்ச்சியாலும் அனுபவத் தாலும் நாம் தேர்ந்துள்ள சட்டங்களைப் பின்பற்றி ஒழுகுதல் வேண்டும். அறிவியலில் (science) விளங்கும் சட்டங்கள் இயற்கை நிகழ்ச்சிகளை விளக்குவன; விவரிப்பன (descriptive). சிந்தனைச் சட்டங்கள் விதிகளை அமைக்கும் இயல்பின (prescriptive). சிந்தனைச் சட்டங்கள் நமது அகத்தினின்று தோன்றுவன. இச் சட்டங்களைப் புறக்கணித்தாலும் மீறினாலும் சிந்தனை நேரிய நெறியில் நிகழாது. சிந்தனையுலகில் மூவகைச் சட்டங்கள் உள்ளன என்று அறிஞர்கள்

கூறுவர். அவை முற்றொருமை (நியதி) (Law of Identity), முரணுமைச் சட்டம் (Law of Non-Contradiction), நடுபொருள் நீக்க நியதி (Law of Excluded Middle). லைபினிட்ஸ் என்னும் ஜெர்மானிய மெய்யறிஞர், பதினேழாவது நூற்றாண்டில், நான்காவது சட்டம் ஒன்றை மேற்குறித்த மூன்றோடு சேர்த்தார்; அதைப் போதிய காரண நியதி (Law of Sufficient Reason) என்பர். இச் சட்டங்களை நிறுவ இயலாது. ஏனெனில், இவையே நிறுவுதல் என்ற நிலைக்கே ஆதாரம் ஆகும். இவற்றைக் கொண்டே நாம் நிறுவ இயலும். இவையில்லாத இடத்து நிறுவுதல் என்பது நிகழாது. இவை தாமே புலனுவன (self evident). இவையின்றிச் சிந்தனை நிகழாது. சிந்தனையின் வகைகள் அனைத்தும் இச் சட்டங்களை முற்கோள்களாகப் பெற்று விளங்குவன.

'முற்றொருமை நியதி' (Law of Identity): நெடுங்காலமாக இந்த நியதியை விளக்கும் வகையில் வழக்கில் இருக்கும் 'வாய்பாடு' (formula) ஒன்றுண்டு. 'அ' என்பது 'அ' ஆகும்.. எது உள்ளதோ அதுவே உள்ளது ஆகும். இவ்வாறு கூறுவது பிறழ உணர்வதற்கு ஏதுவாகும். சிந்தனையுலகிற்கும் (thought) உண்மையுலகிற்கும் உள்ள உறவினை அறிதற்குத் துணைபுரியும் வகையில் சிந்தனைச் சட்டங்களை அறிந்துகொள்ளுதல் வேண்டும். இந்த வாய்பாடு—'அ' என்பது 'அ' ஆகும்; வேறு ஏதும் இல்லை என்றும் பொருள் கொள்ள இடம் தரும். இவ்வகையில் கொள்வது தவறாகும்; பிழையாகும். அறிஞர் 'பொசாங்கே' வேறுபாடு களின் இணைப்பே தீர்ப்பை அமைப்பதாகும் என்று கூறுகிறார். பொருள்களிடையே—சிந்தனைகளிடையே விளங்கும் வேறுபாடு களைத்தான் இச் சட்டம் மறுக்கின்றது. ஆனால், அவைகளுக்குள் அடிப்படை நிலையில் விளங்கும் ஒற்றுமையை இச் சட்டம் வற்புறுத்துகிறது. முற்றொருமை என்பது அதன் அளவில் சிந்தனைக்கும், மெய்யான உலகிற்கும் உரியதன்று. முற்றொருமை யானது புறநிலையில் வடிவில்மட்டும் பொருந்துவதன்று (not a barren identity or of form only). கணேசன் என்பான் கணேச னுவான் என்ற வாக்கியம், கூறியது கூறல் ஆகும்; பொருளற்றது. அளவை நெறியில் அமையும் கருத்துரையில் விளங்கும் எழுவாய், வேற்றுமையிடையே விளங்கும் ஒருமையை உணர்த்துவதாகும். வேறுபாட்டின் மறுப்பென முற்றொருமையைக் கொள்வதற்கில்லை. வேற்றுமையிடையே நிலவும் ஒற்றுமையையே, இந்த நியதி வற்புறுத்துகிறது. சிந்தனை உலகில் உண்மையான ஒருமையை நாம் வெற்றொருமை அல்லது கருத்தியல் ஒருமையினின்று பிரித்து அறிதல் வேண்டும். ஒன்றை மற்றொன்றாக நினைத்து மயங்குதல் தவறென்று ஹெகல் வற்புறுத்துகிறார். உண்மையான ஒருமை

எப்போதும் வேற்றுமையை விலக்காது. ஸாக்ரடீஸ் என்னும் கிரேக்க அறிஞர் நாள்தோறும் உடலிலும் உள்ளத்திலும் மாற்றங்கட்கு உட்பட்டே வந்தார்; குழந்தையாய் இருந்து குலவினர்; பள்ளியில் படிக்கும் பாலராய் வாழ்ந்தார்; இளமைக் குறும்புடன் வணங்கியும் வணக்கியும் திரிந்தார்; அறிவுப் பண்பாடு பெற்ற ஆசிரியரானர்; உடலில் முதியவரானர்; உள்ளத்தில் இளைஞரானர். அறிவுப்பசி ஊற்றெடுக்கும் கண்களோடு அண்டியவர்களின் அறிவைத் தூண்டினர்; குற்றம் சுமத்தப்பெற்று இறுதியில் நஞ்சை விரும்பி ஏற்ருர். எனினும், அடிப்படையில் ஓர் ஒருமை நிலவி வந்தது. மரணத்தைச் சிரித்த முகத்துடன் வரவேற்று, நஞ்சை உவந்து ஏற்ற ஸாக்ரடீஸ்தான் இளமையில் கேள்விகளால் பலரது சிந்தனையைத் தூண்டியவர் ஆவர். புலப்பட்டுத் தோன்றும் ஒருமையானது வேற்றுமையிடையே விளங்கும் ஒருமைதான். பன்மையிடையே நிலவும் ஒருமையைத்தான் தீர்ப்பு வெளிப்படுத்துகிறது. 'அ' என்பது 'ஆ' வாகத் தோன்றலாம்; வெளிப்படலாம். ஆனல், இவ்வாறு தோன்றுவதால், 'அ' தனது இயல்பிலிருந்து சிறிதும் மாறுவதில்லை. தீர்ப்புகள் வேறுபாடுகளைப் புலப்படுத்தினலும், தீர்ப்பின் உயிர்நிலை ஒருமையே ஆகும். அதாவது, இவ்வொருமை வேற்றுமைகளின் ஊடே விளங்குகின்ற காரணத்தினலேயே ஒருமை நன்கு புலனகின்றது. இப் புலப்பாடானது தீர்ப்பால் நிகழ்வதாகும். இதனை 'பொசாங்கே' (Bosanquet) என்ற அறிஞர் வற்புறுத்துகிருர். உறவு கொண்ட பல கூறுகளின் அமைப்பே உள்பொருள் ஆகும். வெவ்வேறு பண்புகள் அல்லது பகுதிகள் எவ்வாறு ஒன்றுசேர்ந்து ஒரு முழுமையாக விளங்குகிறது என்பதைத் தீர்ப்பு விளக்குகிறது.

முரணுமைச் சட்டம் அல்லது விதி (Law of Non-Contradiction): பொதுவாக இந்தச் சட்டம் "'முரண்' பற்றிய சட்டம்" (Law of Contradiction) என்றே ஆங்கிலத்தில் வழங்கும். ஆனல், இவ்வாறு வழங்குவது பிறழ உணர்வதற்கு ஏதுவாகும். எவ்வகையில் தவருகக் கொள்ளுதல் இயலும் என்று கருதுவோம். இச் 'சட்டம்' முரணுதலைத் தவிர்த்தற்பொருட்டே ஆகும். ஒரே பொருள் 'அ' ஆகவும், 'ஆ' ஆகவும் விளங்குதல் இயலாது என்று விளக்குவதே இச் சட்டம். மேலே முற்றொருமைச் சட்டம் வற்புறுத்தியதை எதிர்முறைமுகத்தான் முரணுமைச் சட்டம் விளக்குகிறது. 'அ' என்பது 'ஆ' அன்று என்று சொல்வதில் எதிர்மறையைப் புலப்படுத்துகிறேம். ஆனல், இங்கு வெளிப்படும் 'எதிர்மறை' நிலை தனித்து விளங்குவதன்று 'அ' என்பது 'ஆ' அன்று என்று சொல்வதில் என்ன சிறப்புள்ளது? பொரு

ளற்றது எனலாம். கூறியது கூறலாக அமைகிறது. 'அ' அல்லாதது (not A) ~~அன்று~~ என்பது 'அ' என்பதே ஆகும் எனலாம். 'அரிஸ்டாட்டில்' என்ற கிரேக்க அறிஞர் முரணுமை விதியை விளக்கிய வகையில், அதன் உண்மையையும் ஏற்புடைமையையும் ஒருங்கே புலப்படுத்தியுள்ளார். 'பயனிலை'யாக விளங்குகின்ற ஒன்று ஒரே சமயத்தில் ஒரே பொருளில் (ஒரே எழுவாய்க்கு உரியதாகவும், உரியதல்லாத தாகவும் ஒருங்கே விளங்குதல் இயலாது. 'ஒரே எழுவாய்', 'ஒரே சமயம்', 'ஒரே பொருள்' ஆகியவை இங்கு வற்புறுத்தப்பெறு கின்றன. இவ்வடைகள் முக்கியமானவை. 'இந்தப் பேனு சிவப்பு நிறத்தது', 'அந்தப் பேனு சிவப்பு நிறத்ததன்று'; இங்கு இருவேறு தீர்ப்புகளும் இருவேறு எழுவாய்களை உடையன. 'கந்தன் கல்வி யுடையான்', 'கந்தன் கல்வி யறிவிலான்' என்ற தீர்ப்புகளும் முரணுவன அல்ல. ஏனெனில், முதல் தீர்ப்பானது கந்தனின் குழந்தைப் பருவத்தைப்பற்றியது; இரண்டாவது தீர்ப்பு, கந்தனின் வாலிபப் பருவத்தைப்பற்றியது. கல்வியறிவும், கல்வியறிவின்மையும் கந்தனின் ஒரே பருவத்தைப்பற்றியன அல்ல. மூவர் நடந்து செல்கின்றனர் என்று வைத்துக்கொள் வோம். அ, ஆ, இ என்போர் சேர்ந்து நடக்கின்றனர். 'அ' என்பவன் துரிதமாகவும் மெதுவாகவும் நடக்கிறான். 'அ'வின் நடை 'ஆ' என்பவனின் நடையை நோக்கத் துரிதமுடையதாகும். 'அ'வின் நடை 'இ' என்பவனின் நடையை நோக்க விரைவு குறைந்ததாகும். இருவேறு மனிதர்களுடைய நடையோடு ஒப்பிடுகின்ற நிலையில், 'அ' என்பவனின் நடை விரைவும், விரைவுக் குறைவும் உடையதாதல் பொருந்துவதே ஆகும். முரணுதல் ஏதும் இல்லை. ஒரே வாக்கியம், ஒரே தருணத்தில் உடன் பாட்டிலும் எதிர்மறையிலும் ஒரே பொருளை இயம்ப இயலாது. வெண்மையும், வெண்மையில்லாமையும் ஒருங்கே, ஒரே தருணத்தில் குறித்தல், அவை ஒரே பேப்பரைக் குறித்ததாகக் கொள்ளுதல் இயலாது. அவ்வாறு குறித்தலே முரணுதல் ஆகும். ஒரே தீர்ப்பில் வேறுபாடுகளை (differences) இணைத்துக் கூறுதல் இயலும். முரண்பாடுகளைத் (contradiction) தீர்ப்பு இணைத்தல் இயலாது. தீர்ப்பின் உயிர்நிலையைக் குலைக்கவல்ல முரண் பாடுகளை அல்லது அதன் பொருட்கோட்டிற்குக் காரணமான முரண்பாடுகளை அது தவிர்த்தே ஆகவேண்டும்.

**நடுப்பொருள் நீக்க நியதி** (Law of Excluded Middle): 'அ' என்பது 'ஆ' ஆகும் அல்லது 'ஆ-அல்லாதது' ஆகும். இதுவே இந்த நியதி கொள்ளும் வடிவம். முரணுமை நியதி, முற்றொருமை நியதி ஆகிய இரு நியதிகளும் உணர்த்துவனவற்றையே இந் நியதி

பிறிதொரு வகையாக உணர்த்துகிறது. 'விகற்ப' உரையை நாம் கூறுவதுபோல் இந் நியதி கூறுகிறது. முரணுகின்ற இருவேறு பண்புகளிடையே நடுவணதாகவுள்ளது ஏதும் இல்லை. இவ்விரண்டினுள் ஒன்று உண்மையாதல் வேண்டும். ஒருவன் கந்தன் ஆதல் வேண்டும் அல்லது கந்தன் அல்லன் ஆதல் வேண்டும். ஆரஞ்சுப்பழம் இனிப்பாக இல்லையென்றால் இனிப்பு அற்றதாதல் வேண்டும். சுவைகளை இனிப்பு, இனிப்பு அல்லாதவை எனப் பகுக்கலாம். ஆரஞ்சு இனிப்பற்றதெனில், இனிப்பு அல்லாதவை, இனிப்பு நீங்கிய பிற சுவைகள் அனைத்தையும் உட்படுத்துவதாகும். இனிப்பு, இனிப்பு அல்லாதவை ஆகிய இவ்விரண்டினிடையே நடுவணதாக விளங்குவது ஏதும் இல்லை. ஆதலால், ஒன்று இனிப்பு உடையதாதல் வேண்டும்; இலதேல், அது அல்லாததாதல் வேண்டும். ஆதலால், இந் நியதிப்படி விடை 'உண்மை' அல்லது 'பொய்' ஆக அமைதல் வேண்டும். இக் கருத்தை ஜெவன்ஸ் (Jevons) வற்புறுத்துகிறார். இங்கு மற்றோர் உண்மையினை உணர்தல் வேண்டும். பேசப்பெறும், கருதப்பெறும் பொருள் மேற்குறித்த இரு நிலைகளுள் அடங்குதல் வேண்டும். அடங்குமேல், ஒன்றின் மறுப்பு மற்றொன்றின் ஏற்பு ஆகும். ஆனால், ஆவிகள் வெண்மை நிறத்தன அல்லது வெண்மை அல்லாத நிறத்தன என்று கூறுதல் இயலாது. காரணம், ஆவிகளின் நிறத்தை நாம் அறிதற்குரிய வழி இல்லை. ஆதலால், ஆவிகள் குறித்து நாம் வெண்மையன என்றோ, அல்லாதன என்றோ கூறுதற்கில்லை. ஆனால், அடையாள ஒளிகள் பச்சையும் சிவப்பும் ஆகிய இரண்டே ஆதலால், பச்சையாயின் சிவப்பன்று. இந்த நடுப் பொருள் நீக்க நியதியின்படி, உள்பொருள் நல்ல அமைப்போடு கூடியது; உள்பொருள், வரையறை செய்யக்கூடிய ஒன்றினோடொன்று ஒவ்வும் பகுதிகளாலாயது என்னும் உண்மைகள் புலப்படுத்தப்பெறுகின்றன. இந் நிலையிலேதான் 'மறுப்பு' அல்லது 'எதிர்மறை' என்பது பொருள் உடையதாகின்றது. தனித்த 'உடன்பாடோ' அல்லது தனித்த 'எதிர்மறையோ' சிந்தனையுலகில் சிறப்புடையன அல்ல.

பண்புகளைப்பற்றிய தீர்ப்புகள் (Judgments of Quality): இவை உடன்பாட்டிலோ எதிர்மறையிலோ அமையலாம். உலகை அறிய நாம் கொள்ளும் முயற்சிகள், தொடக்கத்தில் பண்புகளால், பொருள்களின் இயல்புகளால் ஈர்க்கப் பெறுகின்றன. சிறுவன் அல்லது சிறுமி முதலில் பொருளின் புற இயல்புகளால் கவரப்பெறுவதைக் காண்கிறோம். இச் சிறுவர் கொள்ளும் தீர்ப்பு விவரம் அற்றதாய், வரையறை இலாததாய் விளங்குகிறது. தொடக்கநிலை அறிவானது பொருள்களின் பகுதி

களையோ, உறவுகளையோ பகுத்து அறிவதில்லை. புலப்பட்டுத் தோன்றுகின்ற ஒரு பண்பை அல்லது இயல்பைத் தீர்ப்பால் வெளிப்படுத்துகிறோம். குழந்தை எவ்வாறு பொருள்களை அறிகிறதோ அவ்வாறே அக் குழந்தை அவைகளைத் தீர்ப்புகளின் வாயிலாக வெளிப்படுத்துகின்றது. அறிவு முதிர்ந்தவனது தீர்ப்பில் எளிய பண்புகளைமட்டும் காண்பதில்லை. பகுதிகள் அவற்றிடையே நிலவும் உறவுகள் முதலியவற்றையும் காண்கிறோம். சில சமயங்களில் பொருள்களின் பண்புகளைச் சிறப்பாக எடுத்து உரைக்கலாம். 'இப் பொருள் பச்சை நிறத்தது', 'இம் மணம் புதியது' போன்றன பொதுவானவை. பண்புகளே இவற்றில் இடம் பெறுகின்றன. இத்தகைய தீர்ப்புகள் எளியவை. சிந்தனையாற்றல் சிறிதும் தேவையில்லை. இவையெல்லாம் கண்ணுக்குப் புலப்பட்டுத் தோன்றுவனவற்றையே குறிப்பன வாகும். அளவு வேறுபாடுகளையும், பாகுபாட்டையும் உட்படுத்தும் தீர்ப்புகள் சிந்தனை வளர்ச்சியின் முதல் நிலையில் விளங்குவனவாகும். 'இம் மரம் பெரியது' என்ற தீர்ப்பை 'இம் மரம்' வேர்கள், கிளைகள், இலைகள் போன்றவற்றால் ஆயது என்ற தீர்ப்போடு ஒப்புநோக்கினால், பின்னது பாகுபாடுகளை உணர்த்துவதை அறியலாம். குழந்தையின் அறிவு வளர்ச்சியிலும் சரி, கல்விப் பயிற்சி இல்லாத நிலையிலும் சரி, தொடக்கத்தில் பகுதிகள் பிரித்தறியப்பெறுவதில்லை; வகைப்படுத்தப்பெறுவதில்லை. எனினும், தனிப் பண்புகளைப்பற்றியனவாகத் தீர்ப்புகள் அமையினும், அவை தீர்ப்புகளே ஆகும். புலன்களின் வாயிலாக உணர்வு தூண்டப்பெறும்போது தீர்ப்புகள் எழுகின்றன. புலனறிவை வகைப்படுத்தித் தொகுத்து உணர்த்தும்போது, அத் தீர்ப்புத் தெளிவுடையதாகிறது. இவ்வாறு புலக்காட்சியை விளக்குகின்ற வகையில் தீர்ப்பானது படிப்படியே மேலோங்குகிறது. ஒரு பொருளின் கரிய நிறம் தீர்ப்பில் குறிக்கப்பெறுகிறது என்றால், அந் நிறம் பிற நிறங்களிலிருந்து பிரித்துப் பேசப்பெறுகிறது. மேலும், இந் நிறமுடைய பொருள் பிற பொருள்களிலிருந்து பிரித்து அறியப் பெறுகிறது என்று கொள்ளலாம். ஆனால், நமது அறிவு கரிய நிறத்தைமட்டும் சுட்டுதலில் அமைதி கொள்வதில்லை; மேலும், பகுத்தும் தொகுத்தும் அறிய முற்படுகிறது. பொருள்களின் வெவ்வேறு பகுதிகளைப் பிரித்து அறிதலோடு அவற்றைப் பிற பொருள்களோடு ஒப்புநோக்கி அமைதிகொள்ளுகிறது.

'புல் பசுமையாக உள்ளது' என்று சொல்லத் தொடங்கி, 'புல் கரும் பச்சை நிறத்தது' என்று கூறுகிறோம். எண்ணுவதற்கும், அளப்பதற்கும், அளவு குறித்த அறிவு வகைகள் அனைத்திற்கும் ஒப்புநோக்குதலே ஆதாரமாகும். இத்தகைய அடிப்படைகளில் தோன்

றும் தீர்ப்புகள் அளவு குறித்த தீர்ப்புகள் (judgment of quantity) ஆகும். இத் தீர்ப்புகள் அறிவு வளர்ச்சியின் மேல்நிலையில் முதற் படியைக் குறிப்பனவாகும். இவ் வளர்ச்சியில் முதற்படி, எண்ணிக் கையின் (enumeration) அடிப்படையில் தோன்றும் தீர்ப்புகளாகும். பகுதிகள் ஒரே வகையினவாக அமைந்தால், அப் பகுதிகளை எளிதில் வகுத்துணர்ந்து எண்ணிக் கூறிவிடலாம். பகுதிகள் வெவ் வேறு இனத்தைச் சார்ந்தனவெனில், எளிதில் அவற்றை ஒன்று சேர்த்து எண்ணிக் கூற இயலாது. சிறிதும் பிறழாத வகையில் பகுதிகளைப் பிரித்துக் கூறவேண்டுமானால், சாதாரண முறையாகிய எண்ணிக்கை போதாது. நாம் நிறுத்தும், அளந்தும், சரியான முறைகளைப் பின்பற்றியும் தீர்ப்புகளைக் கொள்ளுதல் வேண்டும். இவ்வகையில் தோன்றும் தீர்ப்புகளை அளவுநிலைத் தீர்ப்புகள் (judgments of measure) என்று பொதுவாக அழைக்கலாம். இவை எளிய தோற்றமுடையன; ஆனால், இவை உணர்த்தும் அளவுகட் குப் பொதுவான அடிப்படை வேண்டும். இக் கோபுரம் 200 அடி உயரம் உடையது என்று கூறுவதில் மூலக்கூறு ' அடி ' என்பதாகும். இக் கோபுரம் அந்த மூல அடியின் 200 மடங்காகும். அளவிட்டறி வனவெல்லாம் ஒப்புமையையே அடிப்படையாகக் கொள்வன. ஆதலால், முதலில் வேண்டுவது ஒரு மூல அளவு (basic unit) ஆகும். ~~இந்த மூல அளவு~~ வேறுபடும் பொருள்களை அவ்வவற்றிற்குரிய மூல அளவைக்கொண்டு அளக்கிறோம். தீர்ப்புகள் அப் பொருள் கட்கும், மூல அளவிற்கும் உள்ள உறவைப் பலப்படுத்துவனவாகும். பொருள்களின் உண்மை இயல்புகளை இவ்வகைத் தீர்ப்புகள் உணர்த்துவன அல்ல என்று சிலர் கருதலாம். ஆனால், பொருள் களைப்பற்றிய வரையறையான அறிவைப் பெறுவதற்கு அளவிட்டு அறிதல் மிகவும் இன்றியமையாததாகும். அளவிட்டு அறியும் வகையில் பொருள்களை ஒரு பொதுவான நிலையினோடு ஒப்பு நோக்குகிறோம். பொது அடிப்படை இலதேல், அளவிட்டறிதல் இயலாது. பௌதிக, கணக்கியல், அறிவியல் அனைத்தும் அளவிட்டு அறிதலையே அடிப்படையாகக் கொண்டு விளங்குவதாகும். வெப் பம், அழுத்தம், மின்னாற்றல்போன்ற அளவுகோல்களைக்கொண்டு நாம் எல்லாவற்றையும் அளவிட்டறியலாம். இவ்வகையில் அள விட்டறிந்ததன் விளைவாகத் தோன்றிய அறிவையே 'அறிவியல்' (Science) என்று கூறுகிறோம். ' அறிவியல் ' நாள்தோறும் ஆய்வுக் களங்களில் நிகழ்த்தப்பெறும் ஆராய்ச்சிகளின் வாயிலாக வளர்ந்து கொண்டு வருவதை அறியலாம். ஒவ்வொரு துறையிலும் அறிவின் பரப்பு அகற்சிகொள்வதோடு, நுட்பமிக்கதாகவும், சரியானதாக வும் விளங்கக் காண்கிறோம். அளவுகுறித்த தீர்ப்புகள்மட்டும் அறிவு வளர்ச்சிக்குப் போதா. அவை முன்னர்க் குறித்ததுபோல் பொருள்களின் உறவுநிலையைமட்டும் குறிப்பனவாகும். சடப்

பொருள்களைப் பகுத்தறிந்து, அப் பகுதிகளைக் கூட்டி, அச் சடப் பொருளை அறிதல் இயலும். ஆனல், உயிர்ப்பொருள்களை நாம் இவ்வகையில் அறிதல் இயலாது. உயிர்க்கூறும் உணர்வுக் கூறும் அளவிட்டறியக்கூடியன அல்ல. பொதுவாக அளவு என்பது கூடுதலும் குறைதலும் உடையது. இவ்வகையில் உயிர்ப்பொருள் களின் இயல்புகளைக் கூறுதல் இயலாது. அளவிட்டறிதலின் வகையில் முழுமையின் இயல்பைப் பகுதிகளைச் சேர்த்து அறிதலின் வாயிலாக அறியலாம். ஆனல், சில பொருள்கள் தனித்த இயல்பு களை உடையனவாகும். இவற்றின் பகுதிகளைச் சேர்த்து அறிதலின் வாயிலாக இயல்பை அறிய இயலாது. ஏனெனில், இவற்றினிடத்து நடுநாயகமாக ஒரு தத்துவம் அல்லது ஆற்றல் அல்லது ஒரு பகுதி விளங்கும். அவ்வாற்றலுக்கு ஏனைய பகுதிகள் உட்பட்டு விளங்கும். இவ்வாறு நடுவணதாக, ஆற்றலின் சிறப்பினல் விளங்குவதை அறிந்தாலன்றி இத்தகைய பொருள்களின் தனித்த இயல்புகளை அறியவொண்ணுது.

**காரணகாரியத் தொடர்பைப்பற்றிய தீர்ப்புகள்** (Judgment of Causal Connection) : பண்புகள்பற்றிய தீர்ப்புகளும், அளவு குறித்த தீர்ப்புகளும் சிந்தனை வளர்ச்சியில் கொள்ளும் பங்கைக் கருதினேம். பொருள்களிடத்து நிகழும் மாற்றங்களை அறியும் போது அவை காரணகாரியத் தொடர்புடையன என்பதை அறியலாம். இவற்றைத் தீர்ப்புகளின் வாயிலாக உணர்த்து கிறேம். இவை சிந்தனை வளர்ச்சியின் மேல்நிலையில் விளங்குவன. பண்புகள், அளவியல்புகள் ஆகியவற்றை அறிந்த பின்னர்தான் காரியகாரணத் தொடர்புகள் அறியப்பெறுவனவாகக் கொள்ளுதல் தவருகும். அளவுபற்றிய தீர்ப்புகள் ஒப்புமையை அடிப்படையாகக் கொண்டவை. ஒரு பொருளை மற்ருெரு பொரு ளோடு ஒப்புநோக்குகிறேம். இவ்வாறு ஒப்புமை காணுதல் தெரிந்து (வெளிப்படையாக) மேலும் நிகழ்வதில்லை. மேலும் இந்த ஒப்புமை, புறநிலை உறவுகளை உட்படுத்துவனவாக அமைதலில்லை. இந்தக் 'கம்பி' எனது கையைவிட இரு மடங்கு நீண்டது என்று கூறும்போது, அந்தத் தீர்ப்பு, புற உறவைக்குறித்ததாக விளங்குகிறது. ஒப்பிடப்பெறும் பொருள்கள் தனித்த இயல்புகளை உடையனவாக விளங்குகின்றன. பின்னர், ஒப்பிடப்பெறுபவை காரணகாரியத் தொடர்புடையன என்பதை அறியும்போது, புறவுறவாக விளங்கியது அகவுறவாக இன்றி யமையாத உறவாக விளங்குவதை அறியலாம். இத்தகைய காரணகாரிய உறவு, பொருள்களைப்பற்றிய அறிவில் 'ஓர் உயர் நிலை' என்பதில் ஐயமில்லை.

காரணம் (cause) என்ற சொல்லிற்குப் பல பொருள்கள் உண்டு. வெவ்வேறு பொருள் உளதால் இச் சொல் விரிவான சிந்தனைக்கு இடம் தந்துள்ளது. சிந்தனை வளர்ச்சியில் அமையும் வெவ்வேறு நிலைகளில் காரணகாரியத் தத்துவம் எந்தெந்த மாற்றங்களைப் பெறுகிறது என்று காண்போம். குழந்தையும், கல்வியறிவு பெறாதவனும் இயற்கையுள் நிகழ்வனவற்றிற்கும் தோன்றும் மாற்றங்கட்கும் உயிருள்ள நபர்களே காரணம் ஆவர் என்று கருதுகின்றனர். இத்தகைய உயிருள்ள நபர்கள், மனிதர்களை ஒத்தவர்கள் என்று அவர்கள் கருதினார்கள்; இவர் கட்கும் மனித உணர்ச்சிகள் உண்டு என எண்ணினார்கள். இவ்வாறு மனித நிலையில் வைத்து விளக்குதல் முதல் நிலையில் தோன்றுவதாகும். இயற்கையில் விளங்கும் தீ, காற்று முதலியன பேராற்றலோடு தோன்றி அழிக்கும்போது அவ்வாற்றல்களைக் கண்டு அஞ்சுகிறோம்; அவ்வாற்றல்களால் நலம் பல விளையும் போது மகிழ்கிறோம். இவ்வாறு ஆக்கத்திற்கும் அழிவிற்கும் காரணமாக விளங்குவனவற்றைத் தெய்வங்களென மதித்தனர். ஆற்றல்களை உயிருள்ளனவாகக் கருதுகின்ற இயல்பு தனியொருவ னிடத்தில் விளங்குதல்போல மனித இனத்தின் வரலாற்றிலும் விளங்கக் காண்கிறோம். குழந்தையோ அல்லது கல்வியறிவோ இல்லாதவன் உயிரில் பொருள்களை உயிருடைப் பொருள் களிலிருந்து பிரித்து அறியமாட்டான். பின்னர் அறிவு வளர வளர, இந்த வேறுபாடு புலனாகின்றது. வளர்ச்சியுற்ற நிலையில், இயற்கை நிகழ்ச்சிகட்குப் புதிய விளக்கங்களைக் காணுதல் இயல் பாகும். பௌதிகப் பொருள்களை உயிருடைப் பொருள்களாகக் கருதுவதில்லை; அவற்றினிடத்து நிகழும் மாற்றங்களை விளக்கு வதற்கு அப் பொருள்கட்கு அயலாக வேறு 'ஆவிகளை' அல்லது உயிர்ப்பொருள்களைக் கருதவில்லை. புராணங்களில் தோன்றும் சக்திகள், மந்திரவாதிகள், ஆவிகள்போன்றவற்றைக் கொண்டு விளக்குதலைத் தவிர்த்தனர். தெய்வங்களைக்கொண்டு விளக்கினால் அவற்றின் இடையீட்டை நிறுவிக் காட்டல் இயலாது என்பதை 'தேலிங்' உணர்த்தினார். தெய்வங்களை நீக்க இயற்கை நிகழ்ச்சிகளைப் பிற நிகழ்ச்சிகளின் துணைகொண்டு 'தேலிங்' விளக்கினார். உலகில் நிகழ்வனவற்றிற்கெல்லாம் இயற்கையி னிடத்தே காரணம் காண முயன்றனர். அவர் அனைத்து நிகழ்ச்சி களையும் தண்ணீரிலிருந்து ~~பெற்றார்.~~ இவ்வாறு பெறுதலின் வழியாக ஓர் அமைப்பைக் கண்டார். சிந்தனையின் முயற்சியானது யாது ஆதல் வேண்டும் என்பதைத் 'தேலிங்' விளக்குகிறார். உலகில் நிகழ்வனவற்றை நுழைபுலத்தோடு அறிதலே சிந்தனை யாகும். நிகழ்ச்சிகள் எவ்வாறு ஒன்றினோடொன்று தொடர்பு கொண்டுள்ளன என்று அறிதலே நுழைபுலமாகும். 'காரணம்'

என்னும் சொல், நிகழ்ச்சிகள் எவ்வாறு தோன்றுகின்றன? மாற்றம் கொள்கின்றன? என்பன போன்றவற்றை விளக்கத் துணை செய்கின்றது. 'காரணம்' என்பது காரியத்தை உண்டு பண்ணுகிறது என்று எண்ணுவோர் இன்றும் உண்டு. காரணத்தை 'முன் நிகழ்வது' என்றும், காரியத்தைப் 'பின் நிகழ்வது' என்றும் கருதினர். காரணத்திற்கும் காரியத்திற்கும் இடையே கால இடையீடு உண்டு என எண்ணினர். அறிவியலாராய்ச்சியானது இன்று காரண காரிய உறவை விளக்கும்போது, கால இடையீடு ஏதும் இல்லை என்று நன்கு விளக்குகின்றது. தொடர்ந்து நிகழ்ச்சிகள் நிகழ அவற்றுள் ஒன்றின் தோற்றம் பிறிதொன்றைச் சார்ந்து விளங்குமேல், அவ்விரு நிகழ்ச்சிகளும் காரணகாரியத் தொடர்புடையன என்று கருதவேண்டும். ஒரு நிகழ்ச்சிக்கு முன் நிகழ்வனவெல்லாம் காரணம் ஆகாமல், மாறாது எப்போதும் முன் நிகழ்வது (invariable antecedent) மட்டும் காரணமாகும் என்று விளக்கினர். இங்கும் நாம் இவ்விளக்கத்தை ஏற்பதற்குச் சிறிது தயங்குதல் வேண்டும். இரவிற்குமுன் அமைவது பகல்; பகலிற்குமுன் அமைவது இரவு. இரவிற்குப் பகல் காரணமாகாது; பகலிற்கு இரவு காரணமாகாது. எக் காலத்தும் எத்தகைய மாற்றமும் இன்றி இரவு, பகலிற்கு முன் வந்தாலும் இரவு பகலிற்குக் காரணமாகாது. ஆதலால் வேறு விளக்கம் காண்பாராயின், எதைக் 'காரணம்' என்று கருதுகிறோமோ அது இல்லாதபோது 'காரியம்' நிகழ்தல் ஆகாது. 'காரியம்' எனக் கருதப்பெறுவது வேறு வகையில் நிகழக் கண்டால் இதுகாறும் 'காரணம்' எனக் கருதியதை நீக்கிவிடுதல் வேண்டும். காரணமும், காரியமும் அளவில் ஒத்தன என்றும் விளக்குகின்றனர். காலத்தால் முற்பட்டன யாவும் (temporal priority) காரண நிலையில் முற்பட்டன (logical priority) என்று கூறுதற்கில்லை. எதிர்பாராத வகையில் இரு நிகழ்ச்சிகள் அடுத்தடுத்து ஒத்து நிகழ்வதாலேயே அவற்றிற்கிடையே காரண காரிய உறவு இருத்தல் வேண்டுமென்று கொள்ளுதற்கில்லை. சில நிகழ்ச்சிகளை அறியும்போது அவற்றை அளவிட்டு அறிதல் இயலும்; ஆனால் மன ஆற்றலை அளவிட்டு அறிய முடியாது. தாவரத்தினிடத்து விளங்குகின்ற ஆற்றல் பல்வேறு கூறுகளால் ஆயது. நீர், கதிரவன் ஒளி, பூமியில் விளங்கும் உலோகச் சத்துகள் போன்றவை தாவரத்தின் ஆற்றலுக்குக் காரணமாவன. இதே போல் மூளையின் ஆற்றலுக்குக் காரணமாக விளங்கும் கூறுகள் விளங்குதல் வேண்டும். 'பௌதிகம்' போன்ற அறிவியல்களுள் காரணகாரிய அளவொற்றுமை உண்மையென்று நிறுவுதல் இயலும். ஆனால், அகவுலகில் காரணகாரிய அளவு ஒற்றுமை நிறுவ இயலாததாகும்.

**தனிநிலைத் தீர்ப்புகள் (Judgments of Individuality) :** சில பொருள்களின் அமைப்பு, சிக்கலானதாகக் காணப்பெறுகிறது; சில, பல்வேறு உறுப்புகளால் ஆக்கமுற்று விளங்குகின்றன. இப் பொருள்கட்கு வரையறையான அமைப்பு உண்டு. தொகை அல்லது பகுதிகளின் சேர்க்கை வேறு; அமைப்பு வேறு. அமைப்பினிடத்து முழுமை உண்டு. கற்கள் ஓரிடத்தே திரண்டு விளங்குதலைக் 'குவியல்' என்று கூறுகிறோம். ஆனால், உயிர்ப் பொருளைத் தனிச் சிறப்புடையது என்று கொள்கிறோம். இத்தகைய உயிர்ப்பொருள்களைப்பற்றிய தீர்ப்புகளையே இங்கு நாம் கருதுகிறோம்.

### அனுமானத்தின் இயல்பு: வழி அளவை—தொகுப்பு அளவை

**தீர்ப்பும் அனுமானமும் :** அனுமானத்தைத் தீர்ப்பின் வளர்ச்சி பெற்ற நிலையெனக் கருதல் வேண்டும். எளிய தீர்ப்பிலிருந்து சிந்தனை வளர்ந்து அனுமானித்து அறியும் நிலை ஏற்படுமுன், தொடர்ந்து, மேலும் மேலும் பகுத்தும் தொகுத்தும் அறியத் தலைப்படுகிறது. அனுமானம் (1) தீர்ப்பைவிடச் சிறிது சிக்கலானது. தீர்ப்பின் எளிய தொடக்க நிலையில் பகுப்பு ஏதும் இல்லை. அறிவின் தனிநிலைச் செயலாகத் தீர்ப்பானது தொடக்கம் கொள்கிறது. அனுமானத்தில் சிந்தனையினது வளர்ச்சியின் படி நிலைகளைக் காணலாம். (2) தீர்ப்பானது தனது அடிப்படையைப் புலப்படுத்துவதில்லை. அனுமானம் தான் கொள்ளும் முடிவிற்குக் காரணமான முதலுரைகளை நன்கு வெளிப்படுத்தும். புலக் காட்சியின் அடிப்படையில் தீர்ப்பின் தொடக்கநிலை அமைகிறது. 'இராமன் இங்கு வந்திருத்தல் வேண்டும்', 'நேற்று மழை பெய்தது' போன்றவை எளிய தீர்ப்புகள். இவ்வ, தனித் தனியே விளங்குவன. இவை தாம் கொள்ளும் முடிபுகட்கும் பிற முடிபுகட்கும் உள்ள உறவைப் புலப்படுத்துவதில்லை. அனுமானம் செய்திகளிடையே விளங்கும் உறவை விளக்குவதாகும். புலப்படும் சில செய்திகளைக்கொண்டோ அல்லது புலப்படாத சில செய்திகளைக் கொண்டோ புலப்படும் அல்லது புலப்படாத இவற்றோடு உறவுகொள்ள வேறு செய்திகளைப் பெறுகின்ற முறைமையை வெளிப்படுத்துவதே அனுமானம் ஆகும். அனுமான அளவையின் மூலம் பெறுகின்ற முடிபு எப்போதும் புதிய செய்திகளைத் தருகிறது என்று கருதவேண்டுவதில்லை. இன்றியமையாத உறவுகளை அடிப்படையாகக்கொண்டு அளவை முறையில் சிந்தித்துப் புதிய உண்மைகளை நாம் பெறுவதுண்டு. குறித்ததோர் இரயில் வண்டி

என்றும் இந்த நேரத்தில் வருவது என்பதை அறிவோம். அவ் வண்டி வருகிற காலம் கடந்துவிட்டதைக் கொண்டு அவ் வண்டி சென்றிருக்கவேண்டும் என்று அனுமானிக்கிறோம். நாம் கொள்ளும் முடிபிற்குரிய காரணங்களையும் உடனுகப் புலப் படுத்துவது அனுமானமாகும்.

சிந்தனையின் தொடக்க நிலையில், தீர்ப்புகளின் அடிப் படைகளை நாம் உணர்வதில்லை. ஒவ்வொரு தீர்ப்பையும் அதனதன் நிலையில் ஏற்கிறோம். அவற்றின் உண்மையைக் குறித்து எக் கேள்வியையும் எழுப்புவதில்லை. அறிவின் வளர்ச்சி யானது தீர்ப்பின் அடிப்படைகளை உணர்ந்துகொள்ளுதல் என்ற அளவிலேயே அமைகிறோம். இவ்வாறு உணர்வதால் சில தீர்ப்புகள் பிழையுடையனவாக விளங்குதற்குக் காரணங்களை நம்மால் அறியமுடிகிறது. வேறு சில தீர்ப்புகளின் இன்றியமை யாமையையும் உணரலாம். அறிவு வளர்ச்சியில், செய்திகளிலிருந்து அவற்றிற்குரிய காரணங்களை அறிய முற்படுகிறோம். காரணங்கள் பொருந்துவனவாயின், தீர்ப்புகள் உண்மையானவை எனக் கொள்ளலாம்; பொருந்தாதனவாயின், அவை பிழையானவை என்று கருதுதல்வேண்டும். தீர்ப்பானது விரிவுற்றுத் தான் அடிப் படையாகக் கொள்வனவற்றை வெளிப்படுத்தினுல் அன்றி, சிந்தனை வளர்ச்சியுற்றது எனக் கொள்ளுதற்கில்லை. தீர்ப்பில் அடங்கியுள்ள காரணங்களை நாம் உணர்ந்தாலன்றி, அத் தீர்ப்பை நிறுவவோ மறுக்கவோ இயலாது. எதையும் நிறுவுவதற்குக் காரணங்களை முறைப்படுத்திக் கூறுதல் வேண்டும். தீர்ப்பைப் புறச்செய்திகளோடு கொண்டுள்ள உறவால் உணரப்பெறும் போதுதான் அதன் இன்றியமையாமை என்ன என்பதை அளவை நெறியில் நிறுவ இயலும்.

முடிபிலிருந்து — மேற்கோட் பிரமாணம் (premise - major) துணைப் பொருட் பிரமாணம் (premise - minor) ஆகிய முதலுரை கட்கு நமது சிந்தனை சென்ருலும், முதலுரைகளிலிருந்து முடிபு கட்குச் சிந்தனை சென்ருலும் 'அனுமானம்' என்று பெயர் பெறும். இவ்வாறு சிந்தனை அமைகிறபோது, பிழையான அறிவை உண்மை யான அறிவிலிருந்து பிரித்துணரும் நிலை விளங்குவதைக் காணலாம். பிழையை உண்மையிலிருந்து பிரித்து அறிவதற்குச் செய்திகள்மட்டும் போதா. செய்திகளைக் கடந்து ஆதாரமான காரணங்களை அறியவேண்டும். ஆதலால், தீர்ப்பில் காரணங் களையும் சேர்க்கவேண்டிய நிலை ஏற்படுகிறது. இவ்வகையில் பொருந்தும் (ஏற்புடைய) உறவுகட்குக் காரணமான தத்துவங்களைப் பொருந்தா உறவுகட்குக் காரணமான தத்துவங்

களிலிருந்து பிரித்து அறியும் நிலை படிப்படியே ஏற்படுகிறது. நாம் ஆராயும் துறையில் விரிந்த அளவில் ஆராய்ந்து, மேலும் மேலும் பகுத்து, செய்திகளைச் சேர்த்துத் தீர்ப்புகளை உருவாக்குதல் வேண்டும். முக்கியமாக, நாம் ஆராயும்போது, உடன்பாட்டு நிலையில் விளங்குவனவற்றை அறிதலோடு எதிர்மறை நிலையில் விளங்குவனவற்றையும் அறியவேண்டும். இது அனுமானத்திற்கு இன்றியமையாததாகும்.

**அனுமானத்தின் இயல்** (Nature of Inference): அனுமானம் தீர்ப்பினின்று எந்தெந்த வகையில் வேறுபடுகின்றது என்பதை வரையறை செய்தல் இயலாது.

**அனுமானத்திற்கு இன்றியமையாதனவாக அமைவன:** (1) சில குறிப்புகள் அல்லது முதலுரைகள் என்பவை நாம் அறிந்தனவாக அமைதல் வேண்டும். (2) புதிய செய்திகள் அல்லது செய்திகள் ஆகியவற்றினிடையே விளங்கும் இன்றியமையாத உறவினை அறிதல் வேண்டும். (3) புதியதாக அனுமானித்து அறிவது ஏற்கெனவே உணர்வில் இல்லாதிருக்கவேண்டும் என்பதில்லை. உள்ளதற்கு உரிய காரணங்களை புலப்படுத்துதலே 'அனுமானம்' ஆகும். முதலுரைகளிலிருந்து முடிபினைப் பெற்றாலும் முடிபிலிருந்து முதலுரைகளைப் பெற்றாலும், ஓர் உண்மைக்குரிய காரணங்களைப் பிறிதோர் உண்மையிடத்துக் காணும்போது அனுமானிக்கிறோம் என்பது பொருளாகும். அனுமான அளவையில் தொடக்கநிலையில் இருந்ததைவிட அந்த உண்மை மேலும் விளக்கப் பெறுவதாக அமைதல் வேண்டும். இதுவே அனுமானத்தின் சிறப்பு. எவ்வாறு தெரிந்ததொன்றிலிருந்து தெரியாத ஒன்றினை அறிதல் இயலும்? அறிந்த ஒன்றினைக்கொண்டு அறியாத ஒன்றினை அனுமானிப்பது எவ்வாறு இயலும்? கிரேக்கர் தெரிந்த விஷயங்களில் விளங்கும் சில முரணான நிலைகளைப் புலப்படுத்துவர். மனத்திற்கு அயலாக அறியப்பெறாததாக விளங்குகின்ற பொருள் எவ்வாறு அறியப்பெறுகிறது? இந்நிலையில் பிளேட்டோ அளித்தறிவு 'நினைவு கூர்தல்' (rememberance) ஆகும். அறிவு, மேலும் மேலும் கற்றலால் அறியாதனவற்றை விரிவுபடுத்திக் கொள்ளுதல் இல்லை. ஆனால், நினைவுகூர்தலால் புதியனவற்றை அறிதல் கூடும். ஆன்மா பிறப்பதற்கு முன்னரே பெற்றிருந்ததை இப் பிறப்பில் நினைவிற்குக் கொணர்தலாகும். இப் பிறப்பு அமையும்போது முற்பிறப்பில் பதிந்தன மறக்கப்பெற்றுவிட்டன. மனம் மறந்து போனவற்றையே நினைவிற்குக் கொண்டுவருகிறது. ஆதலால், அயலாக விளங்குவனவற்றை அறிதலில் மனம் முயலவில்லை.

மேலும், இதுகாறும் அறியப்பெறாதன தற்போது அறியப்பெறுவ தாகவும் கருதுவதற்கில்லை.

ஓர் இயந்திரம் புறத்திலிருந்து ஒருவன் இயக்க இயங்குவது போல, மனம் புறநிலைகளிலிருந்து தோன்றும் தூண்டுதல்களால் இயக்கம் கொள்வதெனப் பொதுவாகக் கருதப்பெறுகிறது. அறிவு அகத்தில் ஆக்கம் கொள்கின்றது; புறத்திலிருந்து புகுத்தப் பெறுவதன்று. நாம் அனுமானிக்கும்போது ‘அ’ என்ற செய்தியை அடிப்படையாகக் கொண்டு ‘ஆ’ என்ற செய்தியைப் புதியதாகப் பெறுவதில்லை. சிந்தனை முறைகளில் அடிப்படையில் ஓர் ஒருமை நிலவக் காணலாம். அனுமான அளவையின் வாயிலாக நாம் பெறும் முடிவு முதலுரைகளிலிருந்து வேறுபடுவதே ஆகும். ஆனால், முற்றிலும் வேறானதன்று. அது பொது உண்மையில் சிறப்பு உண்மை அல்லது தனியொன்றைப்பற்றிய உண்மை என்ப வற்றுள் அடங்கும். நாம் பொது இயல்பினை அறிந்தால் அன்றி அனுமானிக்க இயலாது. அனுமானம் இருவகைப்படும். நேராக ஒரு கருத்துரையிலிருந்து மற்றோர் உண்மையைப் பெறுதல் (immediate inference) ஒரு வகையாகும். மற்றொரு வகை, வழி அனுமானமாகும். ஒரு பொதுவான மத்திமப் பதத்தைக் (middle term) கொண்டு, அதன் வழியே, அதன்மூலம் வேறு இரண்டு பதங்களுக்கும் இடையே ஒரு தொடர்பை ஏற்படுத்துகிறோம். அது முக்கூற்று அளவை (syllogism) முறையில் மத்திமப் பதத்தை வெளிப்படுத்திக் கூறுவதாகும். ஆனால், சாதாரணமாகச் சிந்திக்கும் போது, இந்த மத்திமப் பதத்தை நாம் நாடிச் செல்லவேண்டி வரும்.

எந்தத் துறையில் நமது அறிவு முழுமையுடையதாகவும், சரியாக அமைப்புற்றதாகவும் விளங்குகிறதோ, அங்கேதான் அனுமான அளவைக்குரிய ஆதாரம் விளங்கும். நமது அறிவு முறைமையுறும்போது, பல உண்மைகள் தெளிவாகின்றன; அறிவு நிறைவுற்று விளங்கும்போது எளிதில் சில உண்மைகளைத் தெளிதல் இயலும். நிலநூல் வல்லான் ஒருவன் செங்குத்தான பாறையைக் கண்டு (குறைந்தது) ஆயிரமாண்டுகட்கு முன்னர் அப் பகுதியில் நிகழ்ந்த நில அதிர்ச்சியை அல்லது மாற்றத்தைக் கூறுதல் இயலும். இவ்வகையில் முறைமையான அறிவு, அனுமானத்திற்கு ஆதார மாகும். ஒரு பல் அல்லது ஓர் இலை ஆகியவற்றை, அத் துறையில் அமைப்புற்ற அறிவைக் கொண்டவன் பெறுவானேயானால், அவன் அவற்றின் முழு வரலாற்றையும் விளக்கவல்லவன் ஆகிறான். புதைபொருள் ஆராய்ச்சிகளைக் கொண்டு கால வரையறை, வரலாற்றுண்மைகள் விளக்கம் பெறும்போது, பயன்படுத்தப்

பெறும் முழுமையான — அமைப்பைக் கொண்ட அறிவு அனுமானத்திற்கு எவ்வளவு தூரம் அடிப்படையாக இயங்குகிறது என்பதைக் காணலாம்.

## F. அறிவு அளவை இயல்

### [பொஸாங்கே (Bosanquet) என்ற அறிஞரின் கருத்துகள்]

பொஸாங்கே (Bosanquet) என்னும் பேராசிரியர் 'ஆக்ஸ்ஃபோர்டு' பல்கலைக்கழகத்தில் பணிபுரிந்தவர். அவர் 'அளவை இயலின் அடிப்படை அல்லது முக்கிய உண்மைகள்' என்ற நூலில் விளக்கியுள்ள சில கருத்துகளைச் சுருக்கமாகக் காண்போம்.

உள்ளத்தியல், உள்ளத்தினை உணர்வின் பெருக்கு எனவும், தொடர்ந்து விளங்குகின்ற ஒன்று எனவும், அவ்வாறு விளங்குவதில் பல்வேறு எண்ணங்கள், எண்ண உருக்கள் (images) ஆகியவற்றைக் காணலாம் எனவும், அவை ஒன்றையொன்று ஊக்கிச் செயற்படுத்துவன எனவும், இவை யாவும் இயைந்து ஓர் அமைப்பாகின்றன எனவும், இவற்றின் திரண்ட உணர்வு 'ஆன்மா'வின் (self) காட்சிக்குக் காரணமாகிறது எனவும் 'பொஸாங்கே' கூறுகிறார். இவ்வாறு உணர்வின் தொடர்ச்சியாக விளங்குவது, தனியோர் உடலிலிருந்து தொழிற்படுகிறது என்று கூறவேண்டும். தனியொருவனிடத்தில் விளங்கும் மனத்திற்கும், அவன் அறியும் உலகிற்கும் என்ன தொடர்பு என்று அறிவதே அளவை இயலுள் விளங்கும் சிக்கல் ஆகும். உள்ளத்து நிகழ்வனவற்றை விளக்குவது 'உள்ளத்தியல்' ஆகும்; வெளியுலகினோடு கொள்ளும் உறவை அறியுமிடத்து அளவை இயல் ஆகும். எண்ணங்கள், உணர்ச்சிகள் ஆகியவற்றை ஆராய்வது உள்ளத்தியல் ஆகும்; அளவை இயல், உள்பொருளின் ஆக்கத்தை (mental construction of reality) ஆராய்கிறது. எனது உள்ளத்தில் விளங்குவனவாகிய எண்ணங்களும் உணர்ச்சிகளும் எவ்வாறு பல்வேறு பொருள்களையும் நபர்களையும் உடையனவாகின்றன? இவை நமது மனத்தில்மட்டும் விளங்குவன அல்ல; புறத்தேயும் விளங்குவன.

கருத்து யாது என்பதைக் கருதுவோம். உலகு எனது எண்ணம் (The world is my idea) ஆகும். இவ்வுண்மையானது வாழ்கின்ற, அறிகின்ற அனைத்து உயிர்க்கும் பொருந்துவதெனினும், சிறப்பாக மனிதனுக்குப் பொருந்துவதாகும். மனிதனே தான் அறிவனவற்றைச் சிந்திக்கவல்லவனாவான். கருத்தியல்பானவற்றை (abstract) மனிதனே கருதுதற்குரியவன். இவ்வகையில் தேர்ச்சி

யுறுபவன் மெய்யறிவு பெற்றவன் ஆவான். நாம் நேராகக் கதிரவனை அறிவதில்லை. நம்முடைய கண்ணுனது கதிரவனைக் காணும் காட்சியையே நாம் அறிகிறோம். நம்மைச் சூழ்ந்துள்ள உலகு கருத்தின் அளவாகவே விளங்குகிறது; அதாவது, நமது உணர்வினோடு உறவுகொண்ட ஒன்றாக, கருத்தாக விளங்குகிறது. அறிவதற்குரியனவாக விளங்குவன யாவும், இவ்வுலகு முழுமையும், அறிவானை நோக்க அறிபொருளாக (object) விளங்குகிறது. காண்பானுக்கு (perceiver) அறிபொருள், காட்சிப் பொருளாக (perception) விளங்குகிறது. இவ்வுண்மை என்றும் விளங்குவது; கால—இட வரையறைகளால் தாக்குறாதது. உலகிற்கு உரியதாக விளங்குகின்ற யாவும் அறிவான் அறிதற்கு ஏற்ப அமைகின்றன. அறியுமளவிலேயே உலகப் பொருள்கள் உளவாகின்றன. ஆதலால், உலகு நமது உள்ளத்தின் வாயிலாக உளதாகின்றது. அது ஒரு கட்டடம் போல்வது. அதன் ஆக்கப் பொருள்கள் என்பவை கருத்துகள், காட்சிகள் ஆகியவையாகும்.

உலகு யாது என்பதனை அறிவோம். நமது மனக்கண்முன் பல எண்ண, உணர்ச்சிச் சாயல்கள் தொடர்ந்து அமைகின்றன; இவை கனவினை அமைப்பன. உலகு யாது? நம் பேச்சு வழக்கில் பல உலகுகளைப்பற்றிப் பேசுகிறோம். சமய உலகு, அரசியல் உலகு போன்ற தொடர்களை நாம் ஆள்கிறோம். குறித்த பொருள்களின் அமைப்பு அல்லது சிலருடைய கூட்டு அல்லது சில கருத்துகளின் அமைப்பு ஆகியவற்றை உலகு என்று வழங்குகிறோம்.

புறவுலகத்தின் பகுதிகள் ஒன்றினோடொன்று தொடர்பு கொண்டு விளங்குகின்றன. இவ்வாறு கொள்ளும்போது, அவை, நமது உணர்வில் ஏற்படும் மாற்றங்களைச் சார்ந்தவை என்று கொள்வதற்கில்லை. நமது காட்சியைச் சார்ந்து புறவுலகத்தின் இருப்பு (existence) அமைவதில்லை. நமது காட்சியானது தொடர்ந்து அமையும்போது, உலகு புலனுகின்றது; இல்லாத போது உலகு புலனுவதில்லை. ஒருவன் தான் இருந்த இடத்தில் இருந்தே தனது அறையை நினைக்கின்றான். எவ்வாறு அந் நினைவு அமையும்? அவன் அங்கே இருந்து காணும்போது எவ்வாறு அமையுமோ, அவ்வாறே அவ்வறை நினைக்கப்பெறுகிறது. இது அன்றாட வாழ்வில் நாம் அறியும் உண்மையாகும். இதனைக் கொள்கையாகக் (theory) கருதும்போது, புறவுலகு நமது உணர்விற்கு அயலான இருப்பு உடையதென்று கருதப்பெறுகிறது. கண்டும், கேட்டும், தொட்டும் நம்மால் அறியப்பெறுகின்ற இப் புறவுலகு, நமது மனத்திற்கு அயலானதாகும். காட்சி, கேள்வி, தொடுவுணர்வு ஆகிய புலனுணர்வுகளும், இவற்றின் அடியாகப்

பிறக்கும் கருத்துகளும் நமது மனத்தில் விளங்குவனவாகும். இக் கருத்துகள் அவ்வவற்றிற்குரிய புறவுலகப் பொருள்களை நோக்கும் போது, அவைகளின் சாயல்களேயாகும். மனத்தில் விளங்கும் புலக்காட்சிகளும், கருத்துகளும் புறவுலகில் காணப்பெறும் பொருள்களின் படிகள் — சாயல்கள் — பிரதிகள் ஆகும். இவை களின் மூலங்களை நோக்கும்போது, இவையெல்லாம் மங்கலாகவும், தெளிவும் நிறைவும் குறைந்தனவாகவும் விளங்குவன. மனத்தில் விளங்குபவை புறவுலகப் பொருள்களின் பிரதிபிம்பங்களே (copies) ஆகும். இங்கே பொதுவாக மக்கள் கருதுவது (common-sense) என்னவென்றால், 'பொருள்கள் ஒன்றோடொன்று தொடர்பு கொள்ளுகின்றன. நமது காட்சி அமைவதாலோ அல்லது அமையாது போதலாலோ, புறவுலகப் பொருள்கள் எத்தகைய மாற்றங்களுக்கும் உள்ளாவன அல்ல'. புறவுலகு நம்மால் காணப்பெறுதபோதும், காணப்பெற்றபோது எவ்வாறு விளங்கிற்றோ அவ்வாறே விளங்குகின்றது என்பதாம். இதுவே நம் மனத்துக்கு அயலாகப் புறப்பொருள்களுக்கு இருய்பு உண்டு என்ற வாதத்தின் முதற் கருத்துரையாகும்.

இவ்வாறு, பொதுமக்கள் கருத்தை அடிப்படையாகக் கொண்டு நோக்கும்போது, கருத்துகளும் புறவுலகப் பொருள்களும் பொருந்துவதையே, ஒத்துவிளங்குவதையே 'உண்மை' எனக் கொள்ளவேண்டியிருக்கிறது. கருத்துகள் நமது மூளையின் அகத்தே விளங்குவன; பொருள்கள் புறத்தே விளங்குவன. இப் பொருள்களைப்பற்றிய அறிவு நமது மனத்தில் பதியவேண்டு மானால், அப் பொருள்கள் தம்முடைய இருப்பைப் புலன்களின் வாயிலாக மனத்தில் பதிப்பித்தல் வேண்டும். இங்கே இருவகை உலகுகள் ஒரே நிலையில் விளங்கக் காண்கிறோம். ஒருலகு நம் மனத்துக்குப் புறத்தே இருக்கிறது; மற்றோருலகு புறவுலகை ஒத்த வகையில் விளங்கினாலும் நிறைவு குறைந்ததாய், திண்மை குறைந்ததாய். எண்ணங்களைத் தோற்றுவிக்கின்ற ஆற்றல்கள் குறைந்ததாய் அகத்தே இருக்கிறது.

நமது உணர்வில் விளங்கும் உலகானது அகநிலை உடையதாக வும் (subjective), உணர்விற்கு அயலாக விளங்கும் உலகானது புறநிலை உடையதாகவும் (objective) விளங்குகிறது. முன்னது பின்னதனுடைய நிறைவு குறைந்த படி, பிரதி, சாயல் (copy) ஆகும்.

இங்கே முக்கியமாகச் சில வினாக்கள் தோன்றும். புறவுலகை உணர்வு, நிறைவு குறைந்த வகையில் பிரதி செய்யுமேல், எவ்வாறு

இம் மனநிலைப் பிரதியானது புறநிலை மூலத்தை ஒத்தது என்று அறிய முடியும்? முன்னே கருதியவாறு, நாம் நமது மனத்தினுள்ளேயே அடைபட்டிருக்கிறோம். புலன்களின் வாயிலாக உள் நுழைந்தவைகளே நம் மனத்தில் விளங்குகின்றன. இந் நிலையில் புலன்கட்கு அயலாகவோ, மனத்துக்கு அயலாகவோ நாம் சென்று மூலங்களை அறிதல் எவ்வாறு இயலும்? இவ் வினாவிற்கு இரு விடைகள் உண்டு. ஒன்று புறநிலையில் பொருள்கள் உள்ளன என்பதை ஏற்று, அவை நம் புலன்களின் வாயிலாகப் புகுகின்ற போது அவற்றின் சில கூறுகள் மாற்றங்கொள்கின்றன என்று கருதுதல் வேண்டும். இது 'லாக்' (Locke) என்பவரின் கருத்தாகும். நிறம், ஒலி, மணம்போன்ற இயல்புகள் நம் மனத்தில் புறப்பொருள்களாகப் பதிகின்றன. மற்றொரு விடை யாதெனில், நமது காட்சியானது புறப்பொருள்களை உள்ளவாறே புலப்படுத்த வல்லது என்பது ஆகும். இக் கருத்து 'ரீட்' (Reid) என்ற ஆசிரியர் கொண்டது.

புறவுலகு மனத்திற்கு அயலானது. அயலானது என்றால், தனித்த இருப்பு உடையது; தனித்த இயக்கம் உடையது. மனத்தால் அறியப்பெறும்போது அப் புறவுலகு எத்தகைய இருப்பும் இயக்கமும் உடையதாக அறியப்பெறுகிறதோ, அதே இருப்பையும் இயக்கத்தையும் நாம் மனத்தால் அறியப்பெறாத போதும் கொண்டு விளங்கும் தன்மையுடையது. காட்சிக்கு அயலாகப் புறவுலகு விளங்குகிறது எனில், அது நமக்கு அப்பாற்பட்டதேயாகும். காட்சியில் அமையும் உலகு எப்போதும் நமக்கு அயலாக விளங்க இயலாது. ஒருவனது உணர்வினால் அறியப் பெறுகிறது எனில், அது அவன் அகவுணர்வில் அமைகிறது என்றே பொருள்படும். இங்கே இரு கருத்துகளை நாம் தெளிவாக அமைத்துக்கொள்ளுதல் வேண்டும். ஒன்று உணர்விற்கு அயலானது ஆனதால், உணர்வில் இடம்பெற இயலாதது; மற்றொன்று அயலான தனியொருவனின் உணர்வில் இடம்பெறக் கூடியது; ஆனால், புறவுலகில் விளங்குகின்ற ஒன்றனோடு, ஒத்ததாகக் கருதப்படக்கூடியது. உணர்வு உலகினை ஒரு நகலாக, பிரதியாகப் பெறுதற்கு இயலாது எனின், அதுவே இன்றியமையாத ஒரு முறையினால் ஆக்கிக்கொள்ளுவதாகும். ஆதலால், புறநிலையில் விளங்குவதே நாம் இன்றியமையாத நிலையில் கருதுவது ஆகும். இங்கே அறிவானது தனக்கு அயலாக உள்ள ஒன்றைக் குறிப்பது ஆயினும், காலத்தினாலோ பிறவற்றினாலோ கட்டுறாது, இன்றியமையாமையினாலேயே (necessity) வரையறை உறுகின்றது.

'புறநிலையில் விளங்குவது' என்பதன் பொருள் யாது? இவ் வினாவின் விடையை மூவகைக் கருத்தினுள் அடக்கலாம்.

(1) அன்றாட வாழ்வில் வழங்கும் பொதுக் கருத்துப்படி, புற நிலையில் விளங்குவது என்பது உணர்விற்கு அயலானது என்ற பொருள் தரும். (2) பொதுக் கருத்துக் கொள்கைப்படி (common-sense theory) பொருள்களின் இருப்பு என்பது எவ்வகையிலும் உணர்வு இருப்பதனாலோ அல்லது உணர்வு இல்லாததனாலோ எத்தகைய மாற்றமும் அடைவதில்லை. உணர்வினிடத்து விளங்கு கின்ற உலகானது புறவுலகை எந்த அளவிற்கு ஒத்ததாக விளங்குகின்றதோ, அந்த அளவிற்குப் புறத்தன்மையை அடைந்தது எனலாம். (3) மெய்ப்பொருளியல் கருத்துப்படி, புறநிலையில் விளங்குவது என்பது நாம் நம்முடைய உணர்வானது தனக்குள் இயைபு தோன்றும் வகையில் எதனைச் சிந்திக்கின்ற கடப்பாடு உடையதோ அதுவே புறநிலையில் விளங்குவது ஆகும்.

ஒவ்வொருவருக்கும் உலகமானது 'உணர்வின் தொடர்ச்சி' ஆகும். இவ்வகையில் நோக்கும்போது, பொருள்கள் ஒன்றை யொன்று தொடர்புபடுத்தும் வகையில் அமைப்புகொண்ட காட்சிப் பொருள்களால் ஆனது ஆகும். ஆனால், எண்ணங்கள், கருத்துகள் ஆகியவை தனித்தனியே பல்வேறு மூளைகளில் நிகழ்வதாகக் கொள்ளுதல் ஆகாது. முதற் கருத்துப்படி, உலகு நமது கருத்தாக அமைகின்றது; பிற்கூறிய கருத்துப்படி, உணர் வானது உடலோடு ஒன்றிய நிலையே ஆகும். ஒரு கருத்துப்படி, எனது உள்ளம் என் மூளையில் இருக்கிறது என்றும், மற்றொரு கருத்துப்படி மூளை என் உள்ளத்தில் இருக்கிறது என்றும் கொள்ள வேண்டும். இங்கு எழுகின்ற பிரச்சினை என்னவெனில், தனித் தனியே அவரவர் மனத்தில் விளங்கும் உலகுகளில் அமைப்பைக் கொள்ளும் விரிந்த காட்சிகள் (panoramas) முரணாமல் நிற்றல் எவ்வாறு? இதற்கு விடை யாதெனில், இவ்வுலகுகள் இயைகின்றன என்பதாகும்.

அவரவர் கருத்துலகுகள் வெவ்வேறாக விளங்குகின்றன என்பதை வற்புறுத்தி அவற்றின் இயைபை வற்புறுத்தாது விடுவோமானால், அகநிலைக் கருத்துக் கொள்கையை (subjective idealism) ஆதரித்தவர்களாவோம்.

தீர்ப்பு என்பது உலகைப்பற்றிய உணர்வாகும். அறிவு என்பதன் வாயிலாக, உலகு பல்வேறு உறுப்புகளினிடையே உறவுகொண்ட ஒரு முழுமையாக விளங்குகின்றது. உணர்வின் தொடர்ச்சியே அறிவு என்பது ஆகாது. உள்பொருளை நமது உள்ளம் ஆக்குகின்ற வகையிலேயே அறிவு உருக்கொள்கின்றது. சிந்தனைக்கு உரிய வரையறைகள் உண்டு. இவ்வரையறைகளைத்

தழுவியே நமது அறிவு ஆக்கமுறுதல் வேண்டும். அறிவும் உண்மையும் உள்பொருளின் வடிவுகள் என்ற வகையில் எல்லைக்கு உட்பட்டனவே. அறிவுதான் தீர்ப்பாக உருக்கொள்கிறது. உடன்பாட்டு முறையில் உருக்கொள்ளும் ஓர் கருத்துரையாகும். தீர்ப்பு அல்லது உடன்பாட்டுக் கருத்துரை மூவகைப் பண்புகளை உடையது. (1) தீர்ப்புகள் இன்றியமையாதன; (2) தீர்ப்புகள் பொதுமையுடையன; (3) தீர்ப்புகள் ஆக்கம் காண்பன. 'தீர்ப்புகள் இன்றியமையாதன' என்றால், அச் சிந்தனைகளைத் தவிர்க்க இயலாது என்பது பொருள். உணர்வின் இயக்கத்திலேயே ஓர் இன்றியமையாமை விளங்குகிறது. சில சமயங்களில் 'இம்முடிவை என்னால் தவிர்க்க இயலாது' என்று கூறுகிறோம். இது இன்றியமையாமையை விளக்குவதாகும்.

'பொதுமை' என்ற சொல் பல பொருள்களில் வழங்குவதாகும். அனைத்து மக்களின் அறிவாற்றல் ஒரே தன்மையுடையதாய் விளங்கும் எனில், பொதுமையானது இயல்பில் எழுவதாகும். சில முடிபுகள், யாரும் அம் முடிபுக்குரிய முதலுரைகளை அறியுமிடத்து, அவைகளை ஏற்றே தீரவேண்டும். சிந்தனையானது ஓர் அமைப்பைக் கொண்டது. தீர்ப்புகளின் பொதுமை இவ்வமைப்பைமட்டும் வேண்டி நிற்பன அல்ல. சிந்தனையானது முரண்பாடுகளைத் தவிர்க்கவேண்டும்; நமது தீர்ப்புகளோடு பொருந்துவதல்லாது, மற்றையோர் தீர்ப்புகளோடும் பொருந்துதல் வேண்டும். முரண்பாடுகள் ஏற்பட்டால், சிந்தனையோ அல்லது தீர்ப்போ பிழைபட்டதாகும்.

அறிவே தீர்ப்பாக விளங்குகின்ற நிலையில், இன்றியமையாமை, பொதுமை ஆகிய இயல்புகளை/உடையதாகின்றது. இவ்விரண்டும் எல்லாத் தீர்ப்புகளுக்கும் உரியன எனலாம். நமது காட்சியில் அமைவனவும், புறவுலகில் அமைவனவும் ஒருங்கு இயைந்த நிலையில் ஓர் அமைப்பாக ஆதல் வேண்டும். புலன்தரு வரவுகள் (sense data) வேறு; அவற்றின் விளக்கம் வேறு. எனினும், இவை ஒன்றை ஒன்று சார்ந்தன. தீர்ப்பு இன்றிப் புலன்தரு வரவுகள் அமையமாட்டா.

### அறிவும் (Knowledge) அளவை இயலும் (Logic)

உலகை நாம் ஒரு தொடர்ந்த தீர்ப்பாக அறிகிறோம். அளவை இயலின் பணி யாதெனில், இத் தீர்ப்பின் அமைப்பைப் பகுத்தறிதலே ஆகும். தீர்ப்புகளின் எப் பண்புகளை நாம் அளவை இயலுள் அறிகிறோம்? அளவை இயலானது வடிவ அமைப்பைக் கருதும் அறிவியல் (formal science) ஆகும். இது அறிவியலுள்

ஆராயப் பெறுவனவற்றைக் கருதாது, அறியும் உண்மைகளை எடுத்துச்சொல்லும் வகையையே கருதுவதாகும். ஒரு பொருளின் வடிவம் என்பது அதன் தோற்றமேயாகும். ஒரு பொருளை அறியும்போது அல்லது நினைவுகூரும்போது, மனமானது, அப் பொருளின் வடிவத்தையே, சாயலையே நினைவிற்குக் கொண்டு வருகின்றது. வடிவம் என்பது அறியத்தக்க அமைப்பைக் குறிக்கிறது. பொருளினுடைய உண்மை நிலையை அமைப்பது வடிவு ஆகும். கைத்தொழிலில் வல்லவன் பொருளிற்கு ஒரு வடிவத்தை அமைக்கின்றான். அப் பொருளின் படைப்பிற்கு அவன் காரணமாகான். மரம் ஒரு பொருள். அம் மரத்தைக்கொண்டு தச்சன், நாற்காலியைச் செய்கிறான். அறிவியல்களின் பாகு பாட்டைக் கவனிக்கும்போது, வடிவைப் பொருளிலிருந்து பிரித்தலானது ஒன்றையொன்று தழுவியிருக்கின்ற நிலையைப் பாகுபடுத்திப் பார்ப்பதாகும். வடிவின்றி எப்பொருளும் விளங்குதல் இயலாது. 'கத்தியைக்' கருதினால், எஃகு ஒரு பொருளாக விளங்குவதையும், 'கத்தி'யின் அமைப்பே அதன் வடிவம் என்பதையும் அறியலாம். ஆனால், எஃகிற்கும் வடிவம் உண்டு. கத்திக்கும் வடிவமுண்டு. எஃகு எவ் வடிவத்தையும் ஏற்கலாம். இதைப்போல் சலவைக் கல்லிற்கும் வடிவமுண்டு. சில சிறப்பு இயல்புகள் சலவைக் கல்லிற்கு உண்டு. சலவைக் கல்லால் உருப்பெற்ற சிலையொன்றில் சலவைக்கல் பொருளாகவும் சிலையின் வடிவம் சிற்பி தந்ததாகவும் அமைவதை அறியலாம். பொருள்களினுடைய பொது இயல்புகளை நாம் நாடியறிதலே அறிவியலின் நோக்கமாகும். இவ்வகையில் அறிவியற் பிரிவுகள் யாவும் 'வடிவ அறிவியலே' என்று கூறலாம். ஆனால், அளவை இயலின் பொருள் (subject matter) யாது? 'அறிவே ஆகும்'. அறிவின் வடிவமாகும் பொருள்கள் அல்லது கருத்துகளே அறிவுலகின் உறுப்புகளாக விளங்குகின்ற நிலையில், எப் பண்புகளை உடையனவாக விளங்குகின்றனவோ, அவையே அளவை இயலின் பொருளாகும். அறிவியலில் புலக்காட்சியில் அறியப்பெறுவன யாவுமே அறிவின் பொருளாக (matter of knowledge) அமையும். 'ஜெவன்ஸ்' (Jevons) என்பார், 'அளவை இயல்' அறிவியல்களுள் அறிவியலாக, தலையாயதாக (science of sciences) விளங்குவது மிகவும் பொருத்தம் என்று வற்புறுத்தினார். அறிவியலின் பல்வேறு துறைகளெல்லாம் அளவை இயலுக்குப் பெரிதும் கடப்பாடுடையதைப் புலப்படுத்தும் வகையில் தம் பெயர்களை அமைத்துக் கொண்டுள்ளதாக விளக்குகிறார். அறிவியல் பிரிவுகள் பல ஆங்கிலத்தில் பெயர் பெற்றுள்ளதை நோக்கும்போது, அப் பெயர்களின் ஈற்றுப் பகுதிகள் 'லாஜி' என்று அமைவதைக் காணலாம். பயாலஜி (Biology), சைக்காலஜி (Psychology)

போன்றவைகளை இங்கே கருதலாம். உயிர்க்கூறுகளை அளவை நெறியில் நின்று ஆராய்வதே உயிரியல் (logic applied to phenomena of life) என்று ஓர் எடுத்துக்காட்டு கொண்டு விளக்கினர். இவ்வகையில் கருதினால், அறிவியற் பிரிவுகள் ஒவ்வொன்றும் தனிநிலை, சிறப்பு அளவை இயலாக (special logic) விளங்குவதாதல் வேண்டும். 'லோகாஸ்' என்ற சொல்லானது முதலில் 'சொல்லை'க் (word) குறித்தது; பின்னர் அடையாளத்தைக் (sign) குறித்தது; அதன்பின் அகத்தில் நிகழும் எண்ணங்களைக் குறித்தது; பிறகு புறப்புலப்பாட்டைக் குறிக்கும் சொற்களைக் குறித்தது. மேலும், சிந்தனையைப் புலப்படுத்துவன சொற்களேயாகும். இங்கு நாம் கொள்ளத்தக்க பொருள் யாது? ஓர் உதாரணத்தைக் கருதுவோம். விலங்கியலை ஆங்கிலத்தில் 'ஸுவாலஜி' (Zoology) என்கிறோம். இதன் பொருள் யாது? இதற்கு விடை உயிரினத்தைப்பற்றிய தொடர்ச்சியான சிந்தனை உயிரியல் என்பதாம். இதேபோல அளவை இயல் அறிவியல்களுள் அறிவியல் (science of sciences) என்றால், அனைத்து அறிவியற் பிரிவுகட்கும் பொதுப் பண்புகளாகவும், உறவு கொண்டவைகளாகவும் எவ்வெவை விளங்குகின்றனவோ அவற்றைக் கருதுவது என்று பொருள்படும்.

வெவ்வேறு பொருள்களை அறிகின்ற வகையில் 'எண்' (number) எவ்வகையில் துணைபுரிகிறது என்று கருதுவோம். மேசையின்மீது நான்கு நூல்கள் குவியலாக உள்ளன. இக் குவியலே இங்கு உள்ள காட்சிப் பொருளாகும். இக் குவியலை, முழுமையாகக் கருத விரும்புகிறோம்; ஆதலால், குவியலில் உள்ள நூல்களைக் கணக்கிடுகிறோம். இக் குவியலுள் ஒரு நூல் மிகலாம் அல்லது ஒன்று குறையலாம். ஆனால், இவ்வாறு மிகுதலோ குறைதலோ நூல்களை எவ்வகையிலும் மாற்றுவதில்லை. நான்கு நூல்கட்குப் பதிலாகச் சதுரத்தை நினைப்போம். நான்கு பக்கங்களை எண்ணலாம். ஆனால், 'சதுர'த்தைப்பற்றிய கருத்தமைவு நான்கு பக்கங்களைத் தொகுத்து அறிதலால் ஏற்படுவதன்று. நான்கு நேர்கோடுகள் ஒத்து விளங்கினால், அவை சதுர அமைப்பை விளக்க இயலுமா? நாற்கோடுகளும் ஓர் அமைப்பில் விளங்கும்போதே சதுரம் ஆகும். 'இக்குவியல் நான்கு நூல்களை உடையது' என்பது எண்ணிக்கையின் அடிப்படையில் எழுகின்ற தீர்ப்பு ஆகும். ஆனால், 'இச் சதுரம் நான்கு பக்கங்களை உடையது' என்னும் தீர்ப்பு முறைமையான இன்றியமையாமையின் அடிப்படையில் எழுகின்றது ஆகும். சதுரம் என்றாலே ஒரு குறிப்பிட்ட அமைப்பைக்கொண்ட நான்கு என்று கருதுதல் வேண்டும்.

பகுதிகட்கும் முழுமைக்கும் (parts and whole) உள்ள உறவு யாது? இவ்வுறவானது கொள்ளும் வடிவம், முற்றொருமைக்கும்

வேறுபாட்டிற்கும் உற்ற உறவை (relation between identity and differences) விளக்குவதாகும். ஒவ்வொரு தீர்ப்பும் ஒரு முழுமை யினிடத்து விளங்குகின்ற சில பகுதிகளின் ஒருமைப்பாட்டை விளக்குகிறது; அல்லது முற்றொருமையில் நாம் காணக்கூடிய சில வேறுபாடுகளைப் புலப்படுத்துகிறது.

முழுமை, பகுதி ஆகிய சொற்களைக் குறித்தொரு பொருளிலும் வழங்கலாம்; பொதுவாகவும் வழங்கலாம். குறித்த பொருள் என்பது முழுமை, அளவில் முழுமையாக விளங்குதலாகும். ஒத்த பகுதிகள் சேர்ந்த ஒன்று முழுமையாகும். இது முழுமையைப் பகுதிகளின் தொகையாகக் கருதுவதாகும். இங்கும் அனைத்துப் பகுதிகளிலும் ஊடுருவி நிற்கும் ஒரு பண்பைக் காணுதல் இயலும். நீளக் கூறுகள் நீள-முழுமையின் ஆக்கத்திற்குக் காரணமாவன; எடைக்கூறுகள் எடை முழுமைக்குக் காரணமாவன. இத்தகைய முழுமைகள் ஒரு 'தொகை' (sum) ஆகும்; அல்லது மொத்தம் (total) ஆகும். இவ் வகையினை எளிதில் அறிதல் இயலும். முற்றொருமையினிடத்து விளங்கும் வேறுபாடுகளிடையே நிலவும் உறவே தொகை அல்லது மொத்தம் ஆகும்.

தனிநிலையில் நேர்கோட்டிற்கு உள்ள பண்புகள் வேறு; சதுரத்தில் ஒரு கூறாக விளங்கும் நேர்கோட்டின் பண்புகள் வேறு. மேலும், சதுரம் வடிவ கணித (geometrical whole) முழுமை யாகும். ஒவ்வொரு பகுதிக்கும் உரிய இடம் உண்டு. இவ்விடம் காரணத்தோடு தவிர்க்கவொண்ணாத கட்டுப்பாட்டோடு அமைக்கப்படுகிறது. சதுரத்தை வரையும்போது வரையறையான விதிகளை நினைவில்கொண்டே வரைதல்வேண்டும்.

இதுகாறும் அறிவின் இயல்பைப் பொதுவாக அறிந்தோம். அறிந்ததைச் சுருக்கமாக நினைவிற்குக் கொணர்தல் நன்று. 'அறிவு' (knowledge) எப்போதும் தீர்ப்பு ஆகும். தீர்ப்பானது உண்மை உலகினை ஆக்குவதாகும். இவ்வாக்கம் என்பது, நமது காட்சியில் அமைவனவற்றை விளக்குதல் ஆகும்; அல்லது விரிவு செய்தல் ஆகும்; அல்லது இதைப்பற்றிய சிந்தனையில் நாம் தவிர்க்க இயலாத நிலையில் சிந்திப்பனவற்றைப் புலப்படுத்துவதாகும். இவ்வாறு அமைப்பது அல்லது ஆக்கம் காண்பது முழுமையினைப் பகுதிகளோடு புலப்படுத்துவதாகும்; அதாவது, வேறுபாடு களிடையே விளங்கும் முற்றொருமையினைச் சுட்டுவதாகும். அறிவிற்குரிய ஆய்வுப் பொருள்களாக இங்கு விளங்குவன யாவை யெனில், பொருள்களின் பகுதிகள் முழுமையோடு கொள்ளும்

உறவின் வேறுபாடுகளால் தோன்றுவனவேயாகும். இவ்வகையிலேயே தீர்ப்புகளும் அனுமான வகைகளும் வேறுபடுவனவாகும்.

நமது அறிவை (knowledge) ஓர் உலகாகக் கருதலாம். இவ்வுலகு உயிர்ப்பொருள் போல்வதாகும். உயிர் வளர்ச்சியுறுவது போல் அறிவும் வளர்கிறது. கற்கள் பலவாக அடுக்கப்பெறும்போது, அது பெறும் வளர்ச்சியானது சேர்க்கை வளர்ச்சி (aggregate) ஆகும். ஆனால், உயிர்ப்பொருள் வளர்ச்சியானது பலவகைச் சத்துகளையும் தன்னுள் கிரகித்துத் தன்மயமாக்கி, அதைத் தன் பாகம் முழுவதற்கும் செலுத்தி, அதன்மூலம் பெறும் வளர்சி. இது ஒருவகைத் தன்மய வளர்ச்சி (assimilate). அறிவின் வளர்ச்சி அறிவாற்றலால் அமைகிறது. இவ்வறிவுலகில் எண்ணிறந்த சிறு அமைப்புகள் உள்ளன. மேலும், அறிவுலகு ஓர் உறுப்பமைதியோடு தொழிற்படுகிறது.

**தீர்ப்பின் வகைகள்**

ஆராயப்பெறுகின்ற துறை அல்லது அறிபொருளைச் சார்ந்ததாகத் தீர்ப்பின் (அது கொள்ளும்) வடிவம் அமைகிறது. பௌதிக, இரசாயன உண்மைகளை நாம் உணரும் வடிவம் வேறு. துறைதோறும் இந்த வடிவம் வேறுபடும். உண்மைகள் உருக்கொள்ளும்போது அவற்றின் இயல்புகட்கு ஏற்ப உருக்கொள்கின்றன. இவ்வாறு வேறுபடும் வடிவ அமைப்புகளைப் படிநிலையில் நாம் கருதினால், ஒவ்வொரு வடிவமும் அறிவின் மேல் நிலையைப் (ideal) படிப்படியே வெளிப்படுத்த முற்படுவதை அறியலாம். சில தீர்ப்புகள் பண்புகளை உணர்த்துகின்ற அளவிலேயே அமைகின்றன. இத்தகைய தீர்ப்புகளில் தனிப் பண்பு, இன்ப அல்லது துன்ப உணர்வு வரையறையுறாத, பகுப்புக் கொள்ளாத நிலையில் இடம்பெறுவதைப் பார்க்கிறோம். மேலும், தீர்ப்புகள் நமது புலக்காட்சியில் விளங்குவனவற்றைப் பகுத்தும், சேர்த்தும், புதியதாக அமைத்தும் கூறுவனவாக விளங்குதலைக் காண்கிறோம். இத்தகைய தீர்ப்புகள் அன்றாட வாழ்வில், நமது புறவுலகக் காட்சியில் எழுவனவாகும்.

தீர்ப்புகள் நமக்குக் கருத்துரைகளின் (propositions) பொருட்குறிப்பை உணர்த்துவனவாகும். தீர்ப்பின் சிறப்பு இயல்பு யாது? மனத்தின் பிற செயல்நிலைகளோடு இத் தீர்ப்பை ஒப்புநோக்கும்போது, தீர்ப்பு உண்மையை உணர்த்துவதாக அமைவதை அறியலாம். உண்மை, பிழை, வேறுபாடு இவை இங்கு உணர்த்தப் பெறுகின்றன. உண்மையை (truth) உணர்த்துதல் என்றால் என்ன?

எவ்வாறு இவ்வுண்மை தீர்ப்பின் வாயிலாக வெளிப்படுத்தப் பெறுகிறது? எந்தெந்தக் கருத்துகளை உணர்த்தும் நிலையில் உண்மை நமக்கு வெளிப்படுத்தப் பெறுகிறது? உண்மையை உணர்த்துவது என்பது, உண்மையானது பிழையிலிருந்து வேறு படுவதை வற்புறுத்துவதாகும். பொய்மை (falsehood) வேறு; பிழை வேறு. அறிவில் நேரும் பிழையையே இங்கே கருதுகிறோம். பிளேட்டோ என்பார், 'பொய்ம்மை' சொற்களில் விளங்கும் பிழையெனக் (falsehood in words) கொண்டார். ஆனால், மனத்தில் நேர்கின்ற பிழையை அறியாமைக்கு உரியதாக்கினர். உண்மையினைப் பிழையிலிருந்து பிரித்து அறியவேண்டுமானால், புறநிலையில் உள்ளத்து நிகழ்ச்சிகட்கு அயலாக ஒன்றைச் சுட்டுதல் வேண்டும். 'பிழை' யென்று குறிக்கப்பெறுவன யாவும் தமக்கு உள்ள இருப்பை விடுத்து, உரியதல்லாத இருப்பு உடையனவாக விளங்குவனவாகும். இவ்வாறு உரியதல்லாத நிலையொன்றை உணர்த்தமுடியாத நிலையிலேதான் பிழை நேருகிறது. உண்மை உரியதல்லாத நிலையை உணர்த்த முற்படாது. பொய்யான நாணயம் ஒருவகை உலோகமே ஆகும். அந்த நாணயம் ஏன் பொய்யாகிறது? நாணய மதிப்புலகில் மறுத்தற்கு உரிய இயல்புகளை இந்த நாணயம் உடையதாகிறது. உள்பொருள் உலகிற்கும் (a system of reality) உள்ளத்து நிகழ்ச்சிகட்கும் இடையே உள்ள வேறுபாட்டை நாம் ஏற்காத நிலையில் தீர்ப்பு அமையாது. எண்ணங்கள் அல்லது கருத்துகளின் தொடர்ச்சி வேறு; உள்பொருள் உலகு வேறு என்ற பாகுபாட்டை முதலில் ஏற்கவேண்டும்; பிறகு, நமது கருத்திற்கு ஏற்றதொரு புறவுலகக் கூறு உளதாதலை அறிதல் வேண்டும். இங்கு நாம் கொள்ளும் பொருளிற்கும் உள்பொருளிற்கும் இடையே உள்ள முற்றொருமையை ஏற்க வேண்டும். இதனை ஏற்றால் அன்றித் தீர்ப்பு இடம்பெறாது. ஓர் எடுத்துக்காட்டைக் கருதுவோம். 'இந்த மேசை தேக்கு மரத்தால் செய்யப்பட்டது' என்று கூறும்போது, தேக்கு மரத்திற்குரிய தனி இயல்புகளை நாம் நினைவில் கொள் கிறோம். 'தேக்கின் இயல்புகள்' இம் மேசையினிடத்துக் காணப் பெறுகின்றன. ஆதலால், தேக்கைக் குறித்து நாம் கொள்ளும் பொருளும், மேசையினிடத்து விளங்கும் இயல்புகளும் பொருந்து கின்ற காரணத்தால், நான் 'இம் மேசை தேக்கினால் செய்யப் பட்டது' என்று கூறுகிறேன். ஆதலால், அளவை இயலுள் என்றும் எழுவாயாக விளங்குவது உள்பொருளாகும். இதனை நாம் நேராகக் குறிப்பதில்லை. பண்புகளையும் வரையறைகளையும் நாம் சேர்த்துக் கூறுகிறோம். அளவை இயலுள் பயனிலையாக' விளங்குவது கருத்தின் பொருளாகும். உள்பொருளினிடத்து விளங்கும் இயல்புகளையே நாம் தீர்ப்புகளின் வாயிலாக வெளிப்படுத்து

கிறோம். உள்பொருளில் விளங்குகின்ற இயல்பை விரித்தோ, வற்புறுத்தியோ தீர்ப்பினை அமைக்கிறோம். தீர்ப்பின் முக்கியக் கூறுகளாவன :

(1) எழுவாய், உள்பொருளின் ஒரு கூறு.

(2) கருத்தின் பொருள்.

(3) இவற்றிடையே நிலவும் முற்றொருமை.

மேலும், கருத்திற்கு இரு முக்கியப் பொருள்கள் உண்டு. ஒன்று, உள்ளத்தில் அமைவது (psychical representation), மற்றொன்று, அதை ஒத்த புறநிலை யொன்றைச் சுட்டுவது (an identical reference). உள்ளத்து நிகழ்வதாகக் கருத்தைக் கொள்ளும்போது, தனியொரு மனநிலையைச் சுட்டுவதாகவே அது அமைகிறது. கருத்தின் மற்றொரு பொருளை அறிய அக் கருத்திற்குரிய பொருள் (meaning) யாது என அறிதல் வேண்டும். டில்லியில் உள்ள 'தாஜ்மஹால்' என்பதன் பொருள் யாது? தாஜ்மஹாலைக் கண்டவர்கள் அனைவரும் ஒரே விதமான கருத்தைக் கொண்டு விளங்குகிறார்கள் என்று கூறுவதற்கில்லை. எனினும், 'தாஜ் மஹாலை'க் குறிக்கும்போது, மக்கட்குப் பொதுவான ஒரு பொருளை அது குறிப்பதை மறுக்க இயலாது. ஆதலால், உண்மையை உணரப் பொருளுணர்வு (meaning) இன்றியமையாதது ஆகும். சிறப்புடைய கருத்தொன்றை – உள்பொருளின் ஒரு கூறோடு ஒத்து விளங்குவதை வெளிப்படுத்துவதே தீர்ப்பாகும்.

# 2. உள்பொருட் கொள்கைகள்

## (THEORIES OF REALITY)

### தோற்றுவாய்

பொதுவாகப் புறவுலகு உண்டென்பதில் நம்மில் பலர் ஐயம் கொள்வது இல்லை. ஏனெனில், நாள்தோறும் இவ்வுலகோடு நாம் உறவு கொள்கிறோம். நமது அறிவில் அமையும் காட்சி, கேள்வி முதலியன புறவுலகிலிருந்து தோன்றுவன என்று கொள்கிறோம். புறவுலகில் விளங்குவன அனைத்தும் ஓர் அடிப்படை நியதியில் இயங்கக் காண்பதால், இப் புறவுலகில் காணும் தோற்ற நிகழ்ச்சிகட்குக் காரணமான அடிப்படைப் பொருள் (underlying reality) ஒன்று இருத்தல் வேண்டும். இவ்வடிப்படைப் பொருளை உள்பொருள் என்றும், அந்த உள்பொருளின் தோற்ற நிலைகளே (appearance) நமது அனுபவத்தில் அமைவன என்றும் அறிஞர்கள் கூறுவர். உள்பொருள் ஒன்று இருக்கவேண்டும் என்று ஏற்ற பின்னர், அந்த உள்பொருளின் தன்மை யாது என்ற வினா எழும். அந்த உள்பொருள் சடமா அல்லது சித்தா என்ற வினாவுடன் ஒன்றா பலவா என்ற வினாவும் எழும்.

உள்பொருள் சடமே என்று கூறும் இயற்கை உண்மைக் கொள்கை (naturalism) பின்னர்ப் பொருள்முதற் கொள்கையாக (materialism) உருப்பெற்றது. இதற்கு மாறாக, உள்பொருள் சடமல்லாதது; சித்து என்று கூறும் ஆன்மமுதற் கொள்கையும் (spiritualism) வலியுறுத்தப்பெற்றது.

புறவுலக—காட்சியுலக உண்மையினை வற்புறுத்தி, அவ்வுலகு மனத்திற்கு அயலாகத் தனித்தவோர் இருப்பினை (existence) உடையது என்றும், அது மனத்தின் உதவியின்றித் தனித்திருக்க வல்லது என்றும் கூறும் கருத்து காட்சிப் பொருளுண்மை வாதம் (realism) எனப்படும். இதற்கு மாறாக, நாம் நேராக அறிவது

புறவுலகப் பொருளே அன்று; நம் உள்ளத்தையே என்றும், மனத்துக்கும் மனத்தில் எழும் எண்ணங்களுக்கும் அயலாகப் புறவுலகு உண்டு எனக் கொள்வதற்கு ஆதாரம் கிடையாது என்றும் கூறும் கொள்கை கருத்துமுதல் வாதம் (idealism) ஆகும்.

உள்பொருளைச் சடம் (matter) என்று ஏற்கும் கொள்கையாளர்களிடையே இரு வகையினர் உண்டு. ஒரு சாரார் 'உள்பொருள் சடம்; அது ஒன்றே' எனக் கூறுகின்றனர். இவர்கள் 'சடவுலக ஒருமைக் கொள்கையினர்' (materialistic monists) ஆவர். மற்றொரு சாரார், 'உள்பொருள் சடம்; அது பலவாந் தன்மையுடையது' எனக் கூறுகின்றனர். இவர்கள் 'சடவுலகப் பன்மைக் கொள்கையினர்' (materialistic pluralists) எனப்படுவர்.

இவ்வாறே உள்பொருள் ஒன்றே என்றும், அது ஆன்ம இயல்பிற்று என்றும் கூறுவோர் 'ஆன்ம ஒருமைக் கொள்கையினர்' (spiritualistic monists) எனப்பட்டனர். உள்பொருள் ஆன்ம இயல்பிற்று என்றும், அது பலவாகும் தன்மைத்து என்றும் கூறுவோர் 'ஆன்மப் பன்மைக் கொள்கையினர்' (spiritualistic pluralists) ஆவர். பன்மைக் கொள்கை மேலும் இரு வகையாகப் பிரிவுபடும். சடமாயினும் ஆன்மாவாயினும் அவை பண்பால் பலவகைப்படுமாயின் பண்புபற்றிய பன்மைக் கொள்கை (qualitative pluralism) எனவும், அளவுபற்றிய பன்மைக் கொள்கை (quantitative pluralism) எனவும் பெயர்பெறும்.

வேறு சிலர், 'சடம், ஆன்மா ஆகிய இருவேறு பொருள்கள் உண்டு' எனக் கொள்வர்; அவர் இருமைக் கொள்கையினர் (dualists) எனப்படுவர்.

மேற்குறித்த எல்லாக் கொள்கைகளையும் பின்பற்றுவோர் மேலைநாடுகள், கீழை நாடுகள் ஆகிய எல்லா இடங்களிலும் உள்ளனர்.

## (a) இயற்கைவாதம் (Naturalism)

இயற்கையையே (nature) உள்பொருள் என்று கருதும் கொள்கை இயற்கைவாதம் ஆகும். இயற்கையைக் கடந்ததையும் (supernatural), மறுமை உலகைச் சார்ந்ததையும் (other worldly) இயற்கை வாதம் மறுக்கிறது. மனித வாழ்வு, கற்பனைப் பொருள்கள் யாவும் இயற்கையின்பாற்படும். யாவும் இயற்கையினின்று தோன்றுகின்றன; யாவும் இயற்கையில் ஒடுங்குகின்றன.

நமக்கு விளங்காத சில புதிர்கள் உள. இப் புதிர்களும் இயற்கையையே சுட்டுவன. இயற்கைக்கு அயலாக ஏதும் இல்லை. இவ்வாறு யாவற்றையும் உட்படுத்தும் (all-inclusive) இயற்கை யாது? இடத்திலும் காலத்திலும் நிகழ்வன, விளங்குவன அனைத்தும் சேர்ந்த ஒன்றே இயற்கை என வரையறை செய்துள்ளனர்; இயற்கையின் நிகழ்ச்சிகள் அனைத்தும் காரண காரியச் சட்டத்திற்கு உட்படுவனவே.

இயற்கைவாதம் பலவகைப்படும். காலம், இடம் ஆகிய வரையறைகட்கு உட்பட்டு விளங்கும் பொருள்களைப்பற்றிய கருத்தமைவுகட்கு ஏற்ப இயற்கைவாதம் வேறுபடும். சட அணுக்கள் இயக்கம்கொண்டு விளங்குவதை ஆராய்ந்தால், அது சடப்பொருள் வாதம் (materialism) ஆகும். சடப்பொருளை ஆற்றலாகக் கருதினால், ஆற்றல்வாதம் (energism) எனப் பெயர்பெறும். உலக அமைப்பின் மூலகாரணம் யாது என ஆராய்வதை விடுத்து, உலகில் உள்ள அனைத்தும் காரண காரியச் சட்டங்களாக ஓர் அமைப்பிற்கு உட்பட்டு விளங்குகின்றன என்று கருதி, அத்தகைய காரணகாரியச் சட்டங்களை நேர்முகமாகக் கண்டு அறியக்கூடும் என்று வற்புறுத்துவது நேர்முகவாதம் (positivism) ஆகும்.

இயற்கைவாதம் மறுமையுலகை மறுக்கிறது. 'கடவுள் உண்மை' மறுக்கப்பெறுவதே மறுமையுலகத்தை மறுப்பதன் குறிப்பாகும். இயற்கையையே அல்லது மனித சமுதாயத்தையே வழிபடும் பொருளாக ஏற்கப்பெறுவதனால், அவ் வழிபாடு கடவுள் வழிபாடு போன்றதாகும். மரணத்தின்பின் வாழ்வு என ஏதும் இல்லை. ஒருவனது வாழ்க்கையில் நிலைத்த புகழுடைய செயல்களே இறவாத தன்மையுடையன. நிலைபெறுமாறு ஒருவன் ஆற்றும் செயல்களைப் பிற்காலச் சந்ததியினர் நினைந்து போற்றுவதே புகழாகும். மனிதன் தன்னிடத்து விளங்குவன வற்றை ஆராயின், அவை யாவும் இயற்கையினிடத்திலிருந்து பெற்றன என்பதை அறிவான். ஆன்மா யாது? இயற்கைக்கு வேறானதா? இவ்வாறு வேறானதாகக் கருதின், ஆன்மா என ஒன்றை நாம் அறிதற்கில்லை.

இயற்கையில் நிகழ்வன அனைத்தும் ஓர் ஒழுங்கிற்கு உட்பட்டு நிகழ்கின்றன. இயற்கை நிகழ்ச்சிகளைத் தடை செய்யவல்ல பிற ஆற்றல்கள் இல்லை. புதிரான செயல்களை (miracles) நாம் இங்குக் கருதுவதற்கில்லை. பிரார்த்தனை ஒரு பொருளற்ற செயலாகும். அழகுணர்விற்கோ, கட்டுப்பாட்டிற்கோ, குணங்கள் காண்பதற்கோ பிரார்த்தனையைப் பயன்படுத்துவதாகக் கொள்ளின்

அல்லாது, பிரார்த்தனை பொருளுடைய செயலன்று என்பது இயற்கைவாதக் கருத்து.

காரணகாரிய நிகழ்ச்சிகளை மாற்றி, நம் விருப்பப்படி அந் நிகழ்ச்சிகள் நிகழும் வண்ணம் அமைத்தல் இயலும் என்ற கருத்தைச் 'செயலுரிமை' (freedom of the will) குறிக்குமாயின், அது ~~கருத்து~~ இயற்கை வாதத்திற்கு மாறுபடுவதாகும். இயற்கை வாதம், எல்லாம் வரையறையுற்று நிகழ்வன என்ற கருத்தை வலியுறுத்துகிறது. விண்மீன்களையும் அணுக்களையும் இயக்கும் ஆற்றல் எது என்று விளக்கிச் சில சட்டங்களைத் தந்துள்ளனர். இவை போன்ற சட்டங்கள் மனிதவுலகிலும் காணப்பெறுகின்றன. அச் சட்டங்கள் கொண்டு மனிதனின் நடை உடை பாவனைகளை விளக்கமாகக் காணலாம்.

செயலுரிமை (freedom) என்றால் என்ன? குறித்த சிலவற்றுள் நாம் தேர்ந்து, சில பொருள்களை அல்லது சில செயல்களை ஏற்று, மற்றவற்றைப் புறக்கணிக்கிறோம். செயலுரிமை என்பது தேர்வு ஆகும். தேர்ச்சியைப் பொறுத்து நமது செயல் விளங்கும்.

இயற்கையினிடத்து விளங்கும் ஆற்றல்களைக் கொண்டே இயற்கையில் நிகழ்வனவற்றை விளக்குதல் இயலும் என்று 'இயற்கைவாதம்' நம்புகிறது. இயற்கைக்கு அப்பாற்பட்ட பேராற்றல் (supernatural force) இயற்கை நிகழ்ச்சிகளை விளக்க வேண்டுவதாகும். Supernaturalism என்ற கொள்கையை இயற்கைவாதம் ஒத்துக்கொள்வதில்லை.

இயற்கை உண்மை வாதத்தை இருவகையாகப் பிரித் துணரலாம். ஒன்று விரிந்த நோக்கில் அமைவது; மற்றொன்று எல்லைக்குட்பட்டது. எல்லைக்குட்பட்ட நிலையில் ஆராய்வதைப் பொருளுண்மை வாதம் (materialism) என வழங்கலாம். பின்னது திறனாய்வு முறையில் எழுந்த இயற்கை வாதம் (critical natural ism) ஆகும். பல சிந்தனையாளர்கள் தம்மைப் பொருளுண்மைக் கொள்கையினர் (materialists) என்று கூறிக்கொள்கின்றனர். ஆனால், இவர்கள் திறனாய்வு முறையில் இயற்கை உண்மைகளை ஆராய்ந்தவர் ஆவர்.

## (b) சடவாதம் (Materialism)

உலகில் காணப்பெறும் பொருள்களைப்பற்றி இருவகைக் கொள்கைகள் உண்டு. ஒன்று, காணப்பெறும் பொருள்கள் யாவும் சடமே (matter); மற்றொன்று, காணப்பெறும் பொருள்கள் யாவும் ஆவியே (spirit).

உலகப் பொருள்கள் யாவும் சட இயல்பு உடையன; சடக் கூறுகளால் ஆனவை; இச் சடக்கூறுகளே அடிப்படையானவை, நிலைபேறுடையவை, என்றும் உள்ளவை என்ற கருத்துகளைச் சடவாதம் வழங்குகின்றது. சடக்கொள்கை நீண்ட காலமாக வழங்கிவருகின்றது.

யாவும் சடம் எனின், சடம் என்பது யாது? சடக்கூறு என்பது யாது? என்ற வினாக்கள் எழுகின்றன. உள்ளவை அனைத்தும் எண்ணிலடங்காதவை; பகுக்க முடியாத அணுக்களால், கூறுகளால் ஆனவை என்ற கருத்தைக் கிரேக்க சிந்தனையாளர்கள் வழங்கியுள்ளனர்.

பிரபஞ்சத்தில் உளதாவது சடத்தின் ஒருவகைக் கூறேயாகும். உள்பொருள் சடத்தன்மைத்தே. நமது அனுபவத்தில் அமையும் சடப்பொருள்களே உள்பொருள்களாகும். முடிவாக ஆராயுமிடத்து, சடப்பொருள்கள் அணுக்கள் ஆகும்; அவை இயக்கம் கொள்கின்றன. இவ்வணுக்கள் என்றுமுள்ளவை; அழியாதவை. இவ்வணுக்கள் எதிர்பாராத வகையில், இயந்திரக் கூட்டைப் போலச் சேர்ந்து பல பொருள்களாகின்றன. சடத்தின் வடிவங்களாகவும் தொழிற்பாடுகளாகவும் வாழ்க்கையும் மனமும் அமைகின்றன. இவை ஒன்றோடொன்று முற்றிலும் முரணுவன அல்ல. வாழ்க்கை, மனம், சமுதாயம், கலை, சமயம் ஆகிய யாவும், இவ்வுலக முழுமையும் ஆகிய எல்லாம் சடமும் இயக்கமும் ஆகிய இரண்டும் மாறிமாறி வெவ்வேறு வகைகளில் உருக்கொள்ளுதலின் விளைவுகளாகும். உயிர்ப்பு, உடலினிடத்தே தோன்றுகின்றது. உடலினிடத்துப் பல்வகை இரசாயன மாற்றங்கள் நிகழ்கின்றன. உடல் நிலைகளில் தோன்றுகின்ற மாறுபாடுகளின், விளைவாக, உள்ளத்தின் நிலைகள் அமைகின்றன. உள்ளமும் உடலும் பின்னிப் பிணைந்து இணைந்தே ஒன்றை ஒன்று மாற்றியும், மாறியும் வருகின்றன. ஆதலால், சடம், வாழ்க்கை, மனம் ஆகிய மூவேறு நிலைகளெனக் கருதாது, தொடர்ச்சியாக அமைகின்ற ஒரு நிலையின் மூன்று படிநிலைகள் எனக் கொள்ளவேண்டும்.

எளிய அணுக்கள் மாறி மாறி, உயிர்ப்புடையனவாக வெளிப்பட்டுப் பின்னர் உள்ளமாகப் பரிணமிக்கின்றன. இத்தகைய விளக்கத்தில் இடர்ப்பாடு ஏதும் இல்லை. விளக்கம் எளியதாகவும், அறிவிற்கு ஏற்றதாகவும் அமைகின்றது. இல்லதிலிருந்து எதுவும் தோன்றாது. முடிபு, பயன் ஆகியவற்றைப் பற்றிய கருத்துகள் இங்கே வேண்டுவதில்லை.

சடத்தின் இயக்கம் இயந்திரப் பொறிகளின் இயக்கம் போல்வது. இயந்திரத்தின் இயக்கத்தை, அதன் பகுதிகளைப் (parts) பற்றிய அறிவு கொண்டும், அவற்றின் தொழிற்பாடு கொண்டும் அறிதலைப்போல, சடத்தின் இயக்கத்தையும் அறிதல் இயலும் என்கின்றனர். இப் பிரபஞ்சமும் பெரியதோர் இயந்திரமேயாகும். பிரபஞ்சத்தின் பல்வேறு பகுதிகள் ஒன்றினே டொன்று கொள்ளும் உறவால் தாமே தொழிற்படுகின்ற நிலையில் பிரபஞ்சம் அமைகிறது. இயந்திர அமைப்பு, பிரபஞ்சத்தைப் பற்றி அறிவதற்கு இன்றியமையாததாகும். விஞ்ஞானம் தொடக்கத்தில் சடம் அல்லது இயந்திர ஆற்றலாகவே இருந்தது என நிறுவுகிறது. ஒருவகைச் சட ஆற்றல் மற்ருென்ருக மாறுதல் இயலும். வெப்பம் ஒளியாக மாறுவதுபோல, சட ஆற்றல்கள் உள்ளத்தின் ஆற்றல்களாகப் பரிணும முறையிலே மாறுகின்றன. உள்ளத்தின் ஆற்றல்கள், இயற்கையில் விளங்கும் சட ஆற்றல் களின் வேறு அல்ல. ஆனல், தொழில் திறத்தால் சிக்கல் மிகுந்தவையாக உள்ளத்தின் ஆற்றல்கள் விளங்குகின்றன. பரிணும முறையில், புதுமையாக எதுவும் உருக்கொள்வதில்லை. ஆனல், நாம் புதுமையான பலவும் தோன்றுவனவாக எண்ணு கிருேம். உலகில் காணும் ஒவ்வொரு நிகழ்ச்சியும், மற்ருென்றின் விளைவேயாகும். உயிராற்றல்கள் எனக் கூறப்பெறுபவை, பௌதிக உடலில் நிகழும் இரசாயன மாற்றங்களைச் சார்ந்தன வாகும். உள்ளத்தின் ஆற்றல், பௌதிக ஆற்றல்போல் தனித்து அறியவொண்ணுதது. எனினும், அவ்வாற்றல்கள் உடலின்கண், வெளிப்படுகின்ற வகையில் சில கருவிகள்கொண்டு அளந்தறியத் தக்கனவாகும்.

மூளையின் நிலைகட்கு அயலாக உணர்வன ஒன்றில்லை. மன மென்பது மூளையினின்று வெளிப்படுகின்ற (emanation) ஒன்றேயாகும். முற்றிலும் மூளையினுல் வரையறை செய்யப்படுவ தாகும். உள்ளத்தியலில், நடத்தைக் கொள்கையினர் என்போர் (behaviourists) மனத்தையும், மனம்போன்றவற்றையும் அறவே நீக்குகின்றனர். செயலுரிமையினை (freedom of will) நீக்கிச் சடக் கொள்கையானது, யாவும் வரையறை உறும் வகையில் காரண காரிய ஆட்சியினை வலியுறுத்துகிறது. இருவேறு செயல்நிலைகளில் ஒன்றனை நாம் தேர்வதற்குரிய காரணம் நமது அகநிலையிலோ புறநிலையிலோ அமைந்தே தீரும். செயலுரிமை என்பது பிறழ உணர்வதாகும்.

இந்தியத் தத்துவ உலகில் சடக்கொள்கை, உலகாயதம், சாருவாகம் என்ற பெயர்களில் விளங்குகிறது. ஆன்மீகக் கருத்து

இந்தியத் தத்துவத்தின் தலையாயதாயினும், பண்டைய இந்திய நாட்டில் இக் கருத்தினை மறுத்துச் சடப்பொருள்களே உண்மையில் விளங்குவன என்ற கருத்தை உடையவர்களும் இருந்தார்கள். இருக்கு வேதத்தில் பிராமணபதி அல்லது பிருகஸ்பதி, லௌக்கியர் முதன்முதலில் 'சடமே' முதற்பொருளாகும், மூலப்பொருளும் ஆகும் என்ற கருத்தைச் சுட்டியவராவார். ஐயக்கொள்கையும் (scepticism) அறியொணுக் கொள்கையும் (agnosticism) சடக் கொள்கையோடு இந்திய நாட்டில் விரவியே விளங்கின. இராமாயணத்தில் ஜாவாலி என்ற துறவி சடக்கொள்கையை வலியுறுத்துகிருன். இராமபிரானுக்கு ஜாவாலி உரைப்பது சடக் கொள்கையை ஒத்தது ஆகும். ஹரி வம்சத்தைச் சேர்ந்த வேணு (வீணு) என்ற அரசன் வேதத்தை எதிர்த்தவனுகத் தெரிகிறது. பௌத்த சமண நூல்களுள் அஜீதகேச கம்பளின் (Ajitakesa kambalin) என்பாரது போதனைகள் காணப்பெறுகின்றன். இவை சாருவாகர் கொள்கையை ஒத்தன. பரயாசி (Parayasi) (அஜீதரைப் பின்பற்றித் தோன்றியவர் என்பது பதஞ்சலியின் கருத்து), பாகுரி (Bhaguri) என்பவர்கள் சாருவாகக் கருத்தை விளக்கியோராவார்கள். புரந்தரர் சாருவாகக் கருத்தினை மிகத் தெளிவாக விளக்கியவராவர்.

உலகு நால்வகைப் பூதங்களாலே ஆனது. மண், நெருப்பு, நீர், காற்று ஆகியவற்றையே அறியலாம். 'ஈதர்' (ether) என்பது அறிய இயலாதது. கண் முதலிய பொறிகளால் அறிவனவே உண்மை யுடையன. காட்சி அல்லது பிரத்தியட்சமே அறிதற் குரிய வாயிலாகும்: பிரமாணமாகும். அனுமான அளவை, ஆகம அளவை போன்றவற்றைச் சாருவாகர் ஏற்கவில்லை. இரு நிகழ்ச்சி களின் தொடர்ச்சியை, மாறுது நிகழ்வதை அறியலாமேயன்றி அவற்றிடையே காரணகாரியத் தொடர்பை அறிய இயலாது. ஆதலால், இவ்வடிப்படையில் தோன்றும் கருதல் அளவையை, அனுமானப் பிரமாணத்தை ஏற்கச் சாருவாகர் மறுக்கின்றுர்.

உடலைக் காணுதற்கு இயலும்; உடலில் விளங்குவதாக நாம் கருதும் ஆன்மாவைக் காண இயலாது. காட்சிக்குப் புலனுகாத ஆன்மாவின் உண்மையை எவ்வாறு ஏற்பது? ஆதலால், காட்சி யொன்றையே அடிப்படையான 'வாயில்' (pramana) என்று கொள்ளும் சாருவாகர், ஆன்மா என ஒன்று தேகத்திற்கு அயலாக இருக்கிறது என்று கொள்ள மறுக்கின்றனர். உடலில் தோன்றும் வெவ்வேறு வகை இயக்கங்கட்குக் காரணமாக விளங்குகின்ற உடற்சார்பு அற்ற ஒன்று உள்ளது என நமது விளக்கத்தின் பொருட்டு 'ஆன்மா' என ஒன்றை ஏற்றுலும், ஆன்மா சடக்

கூறுகளால் ஆனது என்றே கூறவேண்டும். சடக் கூறுகளாகிய காற்று, நெருப்பு, மண், நீர் முதலியன வெவ்வேறு அளவில் ஒருங்குகூடிய வழி புதிய சில நிகழ்ச்சிகள் நிகழ்வுறும். வெற்றிலை, சுண்ணும்பு, பாக்கு ஆகிய முப் பொருள்களும் ஓரளவில் ஒருங்கு சேர்ந்தவழி 'சிவப்பு' நிறம் தோன்றுகிறது. இந் நிறம் வெற்றிலையிலோ, சுண்ணும்பிலோ, பாக்கிலோ இல்லை. மயக்கம் தரும் போதைப் பொருள்கள் தனித்த நிலையில் போதையைத் தருவன அல்ல. இப் பொருள் ஒருங்கியைந்து, சில நாள் கழிந்து இரசாயன மாற்றங்கள் கொள்ளும்போது மயக்கும் குணத்தைப் பெறுகிறது. இதேபோல், மண் முதலியன உடலிலே ஓரளவில் இடம் பெறும்போது, 'ஆன்மா' என ஒன்று தோன்றி உடல் அழியுமிடத்து, அவ்வுடலில் இடம்பெற்ற பிற மூலக்கூறுகள் தத்தம் தாய்க் கூறுகளோடு சேர்ந்துவிடும்.

மறுமை உலக வாழ்வு என ஒன்று உண்டு என்பதை நிறுவுதல் இயலாது. சடத்தினின்றே வாழ்வு தோன்றுகிறது.

இயற்கையைக் கடந்த எத்தகைய ஆற்றலையும் ஏலாத, மறுதலிக்கின்ற போக்கைச் சடப்பொருள் கொள்கையினிடத்துக் காண்கிறோம். இயற்கையில் நிகழும் எத்தகைய நிகழ்ச்சியும் ஆன்மீக உள்ளத்து ஆற்றல்களால் நிகழ்த்தப்பெறுவது ஆகாது. சடச்சார்பற்ற ஆன்மா என்பது ஒன்று இல்லை. ஆன்மா உடலைச் சார்ந்ததேயாகும். உடல் நீங்குமிடத்து ஆன்மா நீங்கும்.

மேலும், உள்பொருள் புலன்களுக்குப் புலனாதல் வேண்டும். சமய அனுபவம், ஒழுக்கவுலகக் குறிக்கோள்கள் ஆகியவை நம்மை உண்மை யுலகிலிருந்து வெகு தொலைவில் அழைத்துச் சென்று விடுகின்றன. மனிதனுக்குச் செயலுரிமை இல்லையானால், கட்டுப்பாட்டுணர்வு அமைதல் எவ்வாறு? ஒழுக்கப் பண்புகளும் சமயப் பண்புகளும் கற்பனையே. தொடக்க காலத்துச் சடப் பொருட் கொள்கை ஒருவகையில் ஒருமைக் கொள்கையாகும். இது இயற்கையுண்மை வாதம் என்று புத்துருவம் பெற்று அண்மைக் காலத்தில் விளங்கியது. ஆற்றல், இயக்கம், இயற்கைச் சட்டம் ஆகியவற்றை இயற்கை உண்மை வாதம் வற்புறுத்து கின்றன. சடப்பொருள்களின் திருந்திய பதிப்பே இயற்கை யுண்மை வாதமாகும். கிரேக்க மெய்ப்பொருளியலறிஞராகிய டெமாக்ரேட்ஸ் (Democrites), ரோமக் கவிஞராகிய லுக்ரீஷஸ் (Lucretius) ஆகியோர் சடக்கொள்கையினராவர்.

சடக்கொள்கை இன்றைக்குப் பெரிதும் போற்றப் பெறுவதன்று. இது வரலாற்றுச் சிறப்புடையதேயாகும்.

உயிரியல் உண்மைகள் சடக்கொள்கையின் பல்வேறு கொள்கைகளை மறுத்துவிட்டன. புரோட்டாபிளாசத்தின் இரசாயனக் கூறுகளை ஆராய்ந்து அறிந்துவிட்டோம். எனினும், ஆய்வுக்கூடத்தில் உருவாகும் உயிரணுக்கள் (cells) வியக்கத்தக்க நிலையில் உயிரற்ற சடமாக விளங்குகின்றன. மனிதவுடல் ஒழுங்குபெற்ற ஓர் அமைப்பாகும்; பல்லுறுப்புகளின் கட்டுக்கோப்பன்று. இவ்வுடலின் அமைப்பையும் ஆற்றலையும் விளக்க, உடற்சார்பற்ற ஒன்று வேண்டும். உயிர்ப்பும் உள்ளமும் சடத்திலும் இயந்திர அமைப்பினுள்ளும் அடங்கமாட்டா; மூல அணுக்கள் தாமே உயிர்ப்பொருளாக ஒருங்குகூடும் இயல்புடையன அல்ல. இயற்கையையே ஓர் உயிர்ப்பொருளாகக் கருதும் கருத்து மிகச் சிறந்ததாகும். உள்பொருள் ஒன்றெனக் கொண்டு, அவற்றின் வெவ்வேறு கூறுகள் சடம், உயிர்ப்பு, மனம் ஆகியவையே என இயற்கையுண்மை வாதத்தின் புதிய வளர்ச்சி (higher naturalism) விளக்குகின்றது.

பௌதிக உலகிலிருந்தே பல்வகைத் தாக்குதல்களைச் சடக்கொள்கை பெறுவது குறிக்கத்தக்கது. சடக்கொள்கையின் கெழுதகு நண்பனாகப் பௌதிகம் விளங்கிய காலமும் உண்டு. ஆனால், இன்று பௌதிகமே சடக்கொள்கையை மெல்ல அழிக்கும் நிலைக்கு வந்துவிட்டது.

'எலக்ட்ரான்' (electron) கொள்கையானது சடத்தின் இருப்பை மறுக்கின்றது. எலக்ட்ரான்கள் இயந்திர அமைப்பில் இயங்குவன அல்ல. இவற்றின் இயக்கம் நம்பமுடியாத விரைவினையுடையது. மேலும், இவற்றின் இயக்கம் வரையறைக்கு உரியதும் அன்று. இக் காலப் பௌதிகம், ஆற்றல்கள் ஒன்றோடொன்று இயைவன என்றும், ஒத்து இயங்குவன என்றும் கூறுவதானது சடக்கொள்கையை அடியோடு மறுப்பதாகும். சிறந்த பௌதிகப் பேரறிஞர்களாகிய எட்டிங்டன் (Eddington) போன்றோர் இவ்வுலகு ஆன்மீக விளக்கத்துக்கு உட்படுவதேயாகும் என்று கூறுகின்றனர். சடம் கணித வாய்பாடாக மாறிவிட்டது. மனமே சடத்தின் உண்மையை விளக்குவதால், மனமே முதன்மையதாகும். உண்மை (truth) சடத்தின் உடைமையாகாது.

## (c) கருத்துமுதல் வாதமும், காட்சிப்பொருள் உண்மைவாதமும் (Idealism and Realism)

எண்ணங்கள் அல்லது கருத்துகள் உண்மையானவை. இவற்றையே நாம் நேரில் அறிகிறோம். இவையே நாம் அறிவன.

இவற்றைக் குறித்துப் பேசுதற்கு நமக்கு உரிமை உண்டு, என்று கூறுவோர் கருத்துமுதற் கொள்கையினர் (idealists) ஆவர். நம்மால் காணப்பெறும் பொருள்கள் உண்மை உடையவை. அவை நமது மனத்தைச் சார்ந்தவை அல்ல. தனித்த நிலையில் இருப்புடையன என்று கூறுவோர் காட்சிப் பொருட் கொள்கையினர் (realists) ஆவர். அறிவானுக்கும் அறியப்பெறும் பொருளிற்கும் இடையே உள்ள உறவைப்பற்றி நாம் சிந்திக்கும் போது, மேற்குறித்த இருவேறு கருத்துகளாகிய கருத்துமுதல் வாதமும், காட்சிப் பொருள் உண்மைவாதமும் தோன்றுகின்றன. இவ்விரு கொள்கைகட்கு இடையே பல வேறுபடும் கொள்கைகள் உள. அறியப்பெறும் பொருளிற்கும், அதனை அறியும் அறிவிற்கும் இடையே நிலவும் உறவு யாது? அறிவுநிலையைப் பகுத்துப் பார்த்தால், அறியப்பெறும் பொருள், அறிவான், அறிவு என்ற மூன்று அம்சங்கள் வெளிப்படும். இப்பொழுது அறியப்பெறும் பொருளைப்பற்றிக் கருதுவோம். அறிவு நேர்கிறது என்றால், அறியப் பெறும் பொருளின்றி அறிவு நேர்தல் இயலாது. அறியப்பெறும் பொருள் மேசை, கற்சிலை போன்றனவா? அல்லது எண்ணம், கருத்துப் போன்றனவா? மனநிலையா? அகக்காட்சியா? அவ்வறியப் பெறும் பொருள் காணும் மனத்தைச் சார்ந்து விளங்குகிறதா? அல்லது காண்பானுக்கு அயலான இருப்பு உடையதா? குணங்களோடு கூடியதாயினும், குணங்களற்றதாயினும் அறியப் பெறும் பொருள் மனநிலையெனின், அல்லது கருத்து எனின், அது அறிவானைச் சார்ந்ததே அன்றி, அம் மனத்திற்கு அயலான தனியே இருப்புடையதன்று. ஆதலால், அவ்வறிவைப்பெறும் பொருள் மனத்தகத்தே விளங்குவது (subjective) அல்லது அகவியல்பு உடையது என்று ஒரு சாரார் கூறுவர். அறியப்பெறும் பொருள் அறியும் மனத்திற்கு அயலான தனித்த இருப்பு (independent existence) உடையது என்றும், அறிவானைச் சார்ந்து விளங்குவதன்று என்றும் கூறி, அறியப்பெறும் பொருள்கள் புறநிலையுடையன (objective) என்று வேறு ஒரு சாரார் கூறுவர். ஆதலால், இங்கு எழுகிற பிரச்சினை யாதெனில், அறியப்பெறும் பொருள் என்று கூறப்பெறுவதன் விளக்கம் யாது? கருத்துமுதற் கொள்கையினர் (idealists) அறியப்பெறும் பொருள், அறியும் அறிவிற்கு விஷயமாக அமைந்தது என்பர். காட்சிப் பொருள்களை உண்மையுடையன என்று கூறுவோர் (realists), காட்சிப் பொருளானது அறியும் அறிவைச் சாராது விளங்குவது என்பர். புறப்பொருள்கள் தம்மளவிலேயே இருப்பு உடையன; உண்மையுடையன; அப் பொருள்கள் மனத்தினால் அறியப்பெறுகின்றன. இந்த உறவு முறை எதிர்பாராது நிகழ்வது ஆகும்.

ஆதலால், காட்சிப் பொருள்களே உண்மையுடையன என்று கூறுவோர் உலகில் பல பொருள்கள், மக்கள் உளர் என்றும், அப் பொருள்கட்கும் மக்கட்கும் பண்புகளும் குணங்களும் உள என்றும் கூறுவர். காணுகின்ற புறவுலகு எவ்வகையிலும் மனத்தைச் சார்ந்ததன்று. இக் கருத்துப் பொதுவாகப் பலராலும் ஏற்கப்படுகின்ற ஒன்றாகும். ஆனால், கருத்துகளே உண்மை உடையவை என்று கூறுவோர், மனத்திற்கு அயலாக ஓர் உலகு இருத்தல் இயலாது என்றும், ஒரு பொருளோ அல்லது பண்போ உள்ளதாகக் கொள்ளவேண்டுமானால் மனத்தினால் அறியப்பெற வேண்டும் என்றும், ஆதலால், புறவுலகு மனத்தினுள் கருத்தாகத் தான் இருக்க இயலும் என்றும் கூறுவர்.

அறிவின் நிலை குறித்தும், புறவுலகின் உண்மை குறித்தும் இன்று பல்வேறு கருத்துகள் நிலவுகின்றன. இவ்வாறு நிலவுவதால், அடிப்படைக் கொள்கைகளாகிய கருத்துமுதல் வாதமும், காட்சிப் பொருள் உண்மை வாதமும் பல வடிவங்கள் ஏற்றுள்ளன. காட்சியில் நேராகப் புறவுலகப் பொருள்களைக் காண இயலும். இவை காட்சிப்பொருள்கள் என ஒரு சாரார் கூறுவர். இதற்கு மாறாக, வேறு சிலர் நாம் புறவுலகை மனத்தின் கண் விளங்கும் கருத்துகள் வாயிலாகவே அறிகின்றோம் என்றும், இக் கருத்துகளே நமது காட்சிக்கு உரியனவாக அமையும் பொருள்கள் என்றும் கூறுவர். புறவுலகு கருத்துகளாக விளங்குகின்றன எனின், எனது மனத்திலோ அல்லது மற்றொருவர் மனத்திலோ விளங்குவது எனக் கூறுதல் வேண்டும். வேறு சிலர், பரம்பொருளின் கருத்து (absolute idea) என்று கூறுகின்றனர்.

புறவுலகு உண்மையுடையது. நமது இந்திரியங்கள் இப் புறவுலகை நமக்குப் புலப்படுத்துகின்றன. இக் கருத்தைப் பலர் அழுத்தமாக நம்புகின்றனர். இவ்வாறு புறவுலகின் உண்மையை ஏற்கின்ற அடிப்படையிலேதான் விஞ்ஞானமும், சமுதாய வாழ்வும் எழுகின்றன. புறவுலகில் விளங்கும் பொருள்கட்குக் குணங்கள் உண்டு என்று மக்கள் நினைக்கின்றனர். இப் பொருள்கள் புறத்தே சுட்டுதற்குரியனவாக 'ஆங்குள்ளனவாக' (out there) இருக்கின்றன. இவை நமது புலன்களால் உள்ளவாறே அறியப்பெறுகின்றன இதனைப் பாமர சிந்தனையற்ற காட்சிப் பொருள் உண்மைவாதம் (naive, unreflecting realism) என்று கூறுதல் வேண்டும். நாம் வாழ்கின்ற உலகு பல தனிப் பொருள்கள், தனித்த இருப்புடைய பொருள்களால் ஆனது. நம்மால் அறியப்பெறும் பொருள்களும், அவற்றின் பண்புகளும், அவை தம்முடைய இருப்பும் மனத்தைச் சார்ந்தவை அல்ல; தனி மனத்தையோ அல்லது எல்லையற்ற

மனங்களையோ சார்ந்தவை அல்ல. பொருள்கள் அறிவிற்கு அயலான இருப்புடையன எனினும், அறியப்பெறும்போது அறிவிற்கு நேராகப் புலனாகின்றன என்றும், அவை தோன்றுவன போலவே உள்ளன என்றும் கொள்ளவேண்டும். பொருள்கள் உள்ளவாறு அறியப்பெறுகின்றன என்பதாம்.

கருத்துமுதற் கொள்கைப்படி பிரபஞ்சம் மனத்தின் படைப்பேயாகும். பிரபஞ்சப் பொருள்கள் தனித்த இருப்புடையன அல்ல. தனித்து விளங்குவன அல்ல. அவை மனத்தைச் சார்ந்தே விளங்குகின்றன. பிரபஞ்சப் பொருள்களாக மனத்தின் எண்ணங்களே அமைகின்றன. கருத்துமுதற் கொள்கையின் மூலக்கருத்து, பரம்பொருளே உலகமாகத் தோன்றுகின்றது. இப் பிரபஞ்சத்திலடங்கிய பொருள்கள் கருத்தமைவுகளாக விளங்குகின்றன. புலன்கட்கு விஷயமாக அமைவது உலகம் என்ற கருத்தைக் காட்சிப்பொருட் கொள்கையினர் வற்புறுத்துகின்றனர். ஆனால், கருத்து முதற் கொள்கையினரோ, கருத்தே பிரபஞ்சத்தின் உண்மை நிலையென வாதிக்கின்றனர். அடிப்படைப் பொருளை அறிவாற்றல் கொண்டே அறிய இயலும் என்பது கருத்துமுதற் கொள்கையினரின் முக்கிய அம்சமாகும். மனித மனத்திற்கு ஏற்றம் தந்து, உலகப் பொருள்கள் யாவற்றையும் அறிய உதவும் அளவுகோல் மனித மனமே என்பது கருத்துமுதற் கொள்கையின் நிலைக்களமாகும்.

காட்சிப் பொருட் கொள்கை என்பதும் தத்துவ உலகில் ஒரு கருத்து முறையாகும். இக் கொள்கையினை வற்புறுத்துவோர், நமக்கு அயலாக ‘ உலகு ’ உண்டு என்றும், அவ்வுலகை நாம் நன்கு அறிய முடியும் என்றும், புலன்கள் கொண்டு அவை நம் அறிவிற்கு ஏற்பக் கொள்ளக்கூடியன என்றும் கூறுகின்றனர். நமது அறிவு என்பது ஒளி போல்வதாகும். இந்திரியங்களின் வாயிலாக இவ்வொளி வெளிப்படுகிறது. இவ்வாறு வெளிப்படுவதால் புறவுலகு புலனாகின்றது.

மேற்குறித்தவற்றைச் சிந்திக்கும்பொழுது பலவகையான ஐயங்கள் எழுகின்றன. கனவுகள், திரிபுக் காட்சிகள் (illusions), இல்பொருட் காட்சிகள் (hallucinations) போன்றவை எவ்வாறு நிகழ்கின்றன? இவ்வனுபவங்கள் நமக்கு உணர்த்தும் உண்மை யாது? நமது கருத்துகள் அனைத்திற்கும் புறநிலையில் பொருந்தும் பொருள்கள் உளவா? சில சமயங்களில் கனவில் காண்பவற்றிற்கு ஒத்த புறப்பொருள்கள் இல்லை. அல்லது மற்றைப் புறப்பொருள்கள் புறத்தே இன்னவை எனச் சுட்டி அறிதற்குரியனவாய்

விளங்குவன அல்ல. ஆதலால், நம்மால் அறியப்பெறுவனவற்றுள் ஒருசில தனித்த இருப்புடையன அல்ல என்றும், இவ்வாறு புற நிலையில் இருப்பு இல்லாதன சட இயல்போ பௌதிக இயல்போ உடையன அல்ல என்றும் அறிகிறோம். இவற்றின் இயல்பு யாது? மனத்திலேமட்டும் விளங்குவனவா அல்லது மனநிலைகள்தாமா? ஒவ்வொரு பொருளையும் அவ்வவற்றிற்குரிய தனிச் சிறப்போடு அறிய முற்படுவது காட்சிப் பொருட் கொள்கையாகும். புறப் பொருள்களை உள்ளவாறு அறியமுடியும் என்பது இவர்களின் முடி பாகும். ஆன்மாக்கட்குப் பிரபஞ்சத்தில் முக்கியத்துவத்தை அளிக்க முற்படும் முயற்சிகளையெல்லாம் காட்சிப் பொருட் கொள்கை எதிர்க்கும்.

## (d) ஒருமை-இருமை-பன்மைக் கொள்கைகள்
## (Monism, Dualism and Pluralism)

புலன்கடந்த பொருளியல் அல்லது அடிப்படைத் தத்துவ ஆராய்ச்சி (metaphysics) உள்பொருளை ஆராய்கின்றது. உள்பொருள் எத்தகையது? அதன் இயல்பு யாது? இத்தகைய கேள்விகட்கு விடை காண்பதே நோக்கமாகும். இப் பகுதியில் உள்பொருள் ஆராயப்பெறுகிறது. உள்ளது தோற்றம் கொள்கிறது. இத் தோற்றநிலையும் ஆராய்ச்சிக்குரியதாகிறது. உள்பொருள் ஒன்று அல்லது இருவகையினதா, பலவாகுமா என்னும் கேள்விகள் எழுகின்றன. மேலைநாட்டுத் தத்துவக் கருத்து வளர்ச்சியில், 'டேக்கார்ட்' என்பவர் தற்காலத்துப் புலன் கடந்த பொருளியல் ஆராய்ச்சியின் நோக்கினை வரையறை செய்தவர் என்று கருதலாம். இவ்வுலகு இருவகை அடிப்படைப் பொருள்களால் ஆனது. 'பொருள்' என்பது யாது'? பொருள் ஆங்கிலத்தில் தத்துவ உலகச் சொல்லாக 'substance' என வழங்கும். எப் பொருள் தன்னிலையிலேயே பிறிதொரு பொருளைச் சாராது விளங்க வல்லதோ, அப் பொருள் 'பொருளெனக்' குறிக்கத் தக்கதாகும். ஒவ்வொரு பொருளிற்கும் மூலமான இயல்பு ஒன்று உண்டு. டேக்கார்ட் கருத்துப்படி இருவகை அடிப்படைப் பொருள்கள் உண்டு. ஒன்று மனம், மற்றொன்று உடல். மனத்தின் மூலச் சிறப்பியல்பு சிந்தனையாகும். சிந்திக்கும் திறனே மனத்தின் இன்றியமையாத இயல்பு ஆகும். உடலின் இயல்பு, பரப்பு (extension) ஆகும். பருமையான பொருள் இடத்தை நிரப்பும். பருப்பொருளிற்கு நீளம், அகலம்போன்ற பரிமாணங்கள் உண்டு. பருமையான இயல்புகள் இல்லாத—சடமல்லாத பொருள்கள் மனம்போன்றவை. மனம் பல்வேறு தொழில்களைப் புரியவல்லது

ஆகும். 'அறிவாற்றல்', 'கற்பனை', 'நினைவுத்திறன்' போன்றவை மனத்தின் பல்வேறு ஆற்றல்களாகும்.

உருவம் என்பது, சில பருமையான இயல்புகளை உடைய நிலையிலேயே விளங்குவது. 'சடம்' (matter) என்பது 'மனம்' (mind) அல்லது 'ஆவி' என்பதைச் சாராமலேயே விளங்கவல்லது ஆகும். ஆவிகளும் (spirits) உடல்கள், பருப்பொருள்கள் போன்றவற்றைச் சாராமலே விளங்கவல்லன ஆகும். மனிதனின் மனம் அல்லது ஆவி (உயிர்) உடலின் வேறாகும்; உடலினின்று நன்கு பிரித்துணரக் கூடியதே. 'உடல்' சடமாகும்; பருப்பொருளின் தன்மைகளை உடையதாகும்; பகுக்கக்கூடிய தாகும். மனம், எந் நிலையிலும் எவ் வகையிலும் பகுப்புக் கொள்ளாததாகும். உடல் அல்லது சட இயல்புகள் உடைய எப் பொருளும் மனமாக விளங்க இயலாது. மனம் அல்லது ஆவி, சடப்பொருள்களின் இயல்புகளினின்று முற்றிலும் வேறான தாகும்; மனமும் உடலும் அல்லது ஆவியும் சடப்பொருளும் ஒன்றையொன்று முற்றிலும் வேறுபட்டு இகலி நிற்பனவாம்.

மேலே விவரிக்கப்பெற்ற கருத்து உலகில், இருவேறு அடிப்படைப் பொருள்களாக மனமும் சடமும் விளங்குகின்ற உண்மை வலியுறுத்தப்பெறுகிறது. அடிநிலைப் பொருள்கள் இரண்டென இக்கொள்கை வற்புறுத்துவதால், இதனை இருமைக் கொள்கை (dualism) என்று வழங்கினர். அன்றாட வாழ்வில் நமது அனுபவத்தில் இன்றியமையாததாக நம்மால் உணரப்பெறும் பாகுபாடு, மனம், உடல்பற்றியதாகும். அன்பின் நீளம் யாது என்று வினவுவார் உளரோ? நம்பிக்கையின் எடை எவ்வளவு என்று கேட்பார் இலர்; எத்துணையளவு எண்ணம் நீண்டுள்ளது என்று கருதுவார்இலர். விண்மீன்கள் ஒன்றையொன்று தழுவுவன அல்ல. அணுக்கள் தம் எதிர்காலத்தைக் குறித்து எண்ணுவன அல்ல. கற்பாறைகள் கற்பனைகளில் திளைப்பன அல்ல. அன்பு, நம்பிக்கை, சிந்தனை போன்றவை மனத்தின் பல்வேறு நிலைகளாகும்; தொழிற்பாடுகளாகும். விண்மீன்கள், கோள்கள் போன்றவை இயங்குகின்றன; ஒளிர்கின்றன. என்றாலும், மனத்தின் செயல்களாகிய சிந்தனை, உணர்ச்சி போன்றவை, நிகழ்தற்குரிய அமைப்பு அற்றவை. சட இயல்புகளே கோள்களிடத்து விளங்கக் காண்கிறோம். ஆதலால், சடமும் சடப்பொருள்களும் ஒருவகையின; மனமும் மனத்தின் தொழிற் பாடுகளும் வேறுவகையின. ஆனால், சடமும் சடமல்லாததும் ஒன்றிற்கொன்று நெருங்கிய தொடர்பு உடையவை; ஒன்றிய நிலையிலேயே தொழிற்படுபவை. நம்மை நாம் நோக்குவோம்.

நமது உடல் சடமாகும். இவ்வுடலிற்குப் பருமைக் கூறுகள் உள. நீளம், அகலம், எடை போன்ற அளவிடக்கூடிய இயல்புகள் உடலில் விளங்குவன. ஆனால், இவ்வுடலை இயக்குவது சடமல்லாத ஆற்றல் ஆகும். கனவு நிலைகளில் நாம் காண்பன, நுகர்வன ஆகியவை சடப்பொருள்களின் இயல்புகள் இல்லாதவையாகும். மனமும், உடலும் ஒன்றையொன்று இயக்க வல்லனவே. மனத்தின்கண் நிகழ்வன, உடலில் சில மாறுதல்களை விளைக்கின்றன; உடலில் நிகழ்வன, மனத்தைத் தாக்கவல்லன வாகும். மனமும் உடலும் தொடர்பு கொள்கின்றன என்று டேக்கார்ட் கூறுகிறார்.

**சடம், ஆன்மா என்னும் இருமை (Dualism of Matter And Soul)**

பொதுவாக, மனம் அல்லது ஆன்மா உடலினின்று பிரித்துப் பேசப்பெறுகிறது. மனம் என்பது சடமல்லாதது; பருமையற்றது (immaterial). புலப்பொருள் அல்லாத மனம் இடத்தை அடைக்காதது. உடல் பருமையானது, புலனாவது ஆதலினால், இடத்தை அடைப்பது. இவ்வாறு மனம், உடலிற்கு வேறாகக் கருதப்பெற்றது. இவ் வேறுபாடு தொன்றுதொட்டுக் கருதப் பெற்று வருவதோடு, மெய்ப்பொருளியலில் அடிப்படைப் பிரச்சினை களுள் ஒன்றாகவும் அமைந்தது. யூத மதத்துத் தீர்க்கதரிசிகளும் பிளேட்டோவிற்கு முன்னிருந்தோரும் மேற்கண்ட இருமையைக் குறிக்கின்றனர். பிளேட்டோவும் ஆன்மாவை உடலிலிருந்து வேறுபிரித்துப் பேசுகிறார். ஆன்மா, சடமல்லாத ஒன்றென்றும் இறவாதது என்றும், உடல், சடமென்றும் இறப்பதென்றும் பிளேட்டோ கருதினார். பின்னர் பிளோட்டினஸ் (Plotinus) என்பாரும், அகஸ்தீன் (Augustine) என்பாரும் பிளேட்டோ கண்ட இருமையைப் போற்றினார்கள். இடைக்கால மெய்ப்பொருளியல் முழுமையிலும் உடல், ஆன்மா, சடம், மனம் ஆகிய இருமைகள் ஆட்சிபெற்றன. பதின்மூன்றாவது நூற்றாண்டிலே, துறவி தாமஸ் என்பார் கிரேக்க நாட்டு அறிஞராகிய அரிஸ்டாட்டில் கருத்துகளை ஏற்றார். ஆனால், மனம், உடல் இருமை (dualism of mind and body) 17 ஆவது நூற்றாண்டிலே வெளிப்படை யாகவும் விளக்கமாகவும் டேக்கார்ட் என்பவரால் வரையறை செய்யப்பெற்றது. விளக்கத்திற்காக இரு அடிப்படைக் கருத்தமைவுகளை ஏற்கும் கொள்கை இருமைக் கொள்கையாகும். தனித்த நிலையை இருமைக் கொள்கை என்று குறிப்பிடுவதில் பொருள் இல்லை. இருமைகள் பல திறத்தன. எந்த இருமை குறிக்கப்பெறுகிறது என்பதை விளக்கவேண்டும். சடம், மனம் ஆகிய இருமை அடிப்படையானது. சடம், மனத்துள் அடங்காது;

மனம், சடத்துள் அடங்காது. இந்த இருமையை 'மனம்-உடல்' இருமை (mind-body dualism) யென்றும் குறிப்பதுண்டு. மற்ெறாரு வகை இருமையாவது, நம்பிக்கை-விஞ்ஞானம் (faith and science) ஆகும். இதனை நம்பிக்கை-அறிவாற்றல் எனவும் குறிப்பதுண்டு.

**டேக்கார்ட் கண்ட இருமை**

டேக்கார்ட் கருத்துப்படி, பிரபஞ்சத்துள் இருவகை அடிப்படைப் பொருள்கள் உள. அவை உடல், மனம் ஆகியவை. உடல் அல்லது சடத்திற்கு இன்றியமையாத பண்பு பரப்பு (extension); அளத்தற்குரிய அம்சங்கள் உடைமை ஆகும். மனத்தின் இன்றியமையாத பண்பு எண்ணம் அல்லது சிந்தித்தல் ஆகும். சடப்பொருளின் வடிவம் யாதாயினும், பரப்பே முக்கிய அம்சமாகும். மனத்தின் தொழில்களாகிய கற்பனை, கருத்தமைவு, பிரித்தறிதல் ஆகியவற்றுள், சிந்தனையே அடிப்படையானதாகும். மனமும் உடலுமே அடிப்படைப் பொருள்களாகும். பிரபஞ்சப் பொருள்கள் அனைத்தும், இவ்விரு பொருள்களுள் அடங்கி விடுகின்றன. உடற்குரிய பண்புகளுள் எவையும் மனத்திற்குரியன அல்ல; இதேபோல் மனத்திற்குரிய பண்புகள் எவையும் உடற்குரியன அல்ல. மனம் வேறு; உடல் வேறு; இவற்றின் உலகுகளும் வேறு. ஆனால், இவ்விரண்டினுள் எதுவும் தன்னிறைவோடு கூடியதன்று. 'டேக்கார்ட்' கருத்துப்படி, தெய்வப் பொருளே (divine substance) தன்னிறைவுள்ளது. ஏனைய இரு பொருள்களும், தெய்வத்தைச் சார்ந்தே விளங்குவன.

மனம் வேறு, உடல் வேறு என்று வேறுபாட்டை நன்றாகப் பிரித்துப் பேசிய பின்னர், மனம் எவ்வாறு உடலிலிருந்துகொண்டு தொழிற்படுகிறது என்ற கேள்வி எழுகிறது. இக் கேள்வி ஒரு பெரிய புதிராகவே விளங்குகிறது. சடப்பொருட் கொள்கையினர், மனத்தை ஏற்க மறுத்தனர். மனத்தின் தனிப் பண்புகளை வற்புறுத்துவோர் சடத்தொடர்பு எவ்வாறு அமையும் என்ற கேள்வியைக் கேட்கின்றனர். ஆதலால், மனம் எவ்வாறு உடலைத் தொழிற்படுத்துகின்றது அல்லது உடல் மனத்தினால் எவ்வாறு தொழிற்படுத்தப்பெறுகின்றது என்பது பிரச்சினையாகவே விளங்குகிறது. டேக்கார்ட் இப் பிரச்சினையை நன்றாக எடுத்துக்கூறினார். அதற்குரிய விடையாக அவர் கண்டது விளக்கமாக இல்லை. இதுவே 'டேக்கார்ட்' கருத்தில் அமைந்த குறை.

அறிவான், அறியப்பெறும் பொருள் என்னும் இருமையை 'லாக்' கருதினார். அறிவுவழிக் கொள்கையினருள் தலையாயவராகிய

'டேக்கார்ட்', மனம் தன்னை நன்ருக அறிகின்றது என்றும், இவ்வறிவு மற்றவற்றை நோக்கத் தெளிவும் உண்மையும் உடையது என்றும் வற்புறுத்தினுர். மேலும், மனம் தனது அகவுணர்வின் துணைகொண்டு, தன்னுண்மையினின்று பிற உண்மைகளைப் படிப்படியே அளவை முறையில் அறியலாம் என்று கூறினுர். இவ்வகையிலேயே உடலின் இருப்பை, அல்லது உண்மையை மனம் உணர்கிறது. இந் நிலையை அறிந்த 'லாக்' மனத்தின் ஆற்றல்களையும், அவ்வாற்றல்களின் துணைகொண்டு மனம் அறியும் உண்மையையும் ஆராய்ந்து உண்மை காணும் பணியை மேற்கொண்டார். 'லாக்' இவ்வாராய்ச்சியினுல் கண்ட உண்மைகள் பின்னுளிலே பெரும் பிரச்சினைகளாக விளங்கின.

## பிரதிநிதித்துவக் காட்சி (Representative Realism)

சடப்பொருள்களை நாம் காட்சி, கேள்வி, சுவை, ஊறு முதலிய புலன்களின் வழியே ஒருவாறுதான் அறிகிருேம்; ஒருநிலையிலே தான் அறிகிருேம். ஒரு வீட்டை நாம் பார்க்கும்போது, சில சமயங்களில் அதன் அமைப்பைக் காண்கிருேம்; மற்ற சமயங்களில் வீட்டின் பின்புறம், அறைகள் ஆகியவற்றைக் காண்கிருேம். தொலைவிலுள்ள பள்ளியில் ஒலிக்கும் மணி, தெளிவாகக் கேட்கப்பெறுவதில்லை. அண்மையிலுள்ள ஆலய மணி தெளிவாகக் காதில் ஒலிக்கிறது. இவ்வாறே நமது புலக்காட்சிகள் சடப் பொருள்களின் நிலையை நாம் அவை எவ்வாறு நமது புலன்கட்குத் தோன்றுகின்றனவோ அந் நிலையிலேதான் அறிகின்றன. சுருக்கமாகக் கூறினுல், நமது உள்ளத்தில் சடப்பொருள்கள் புலன்களின் மூலம் அமைக்கும் பதிவுகளின்மூலமே அறிகிருேம். நமது மனத்தில் விளங்குவன எண்ணங்கள் அல்லது கருத்துகளே (ideas) ஆகும். ஆதலால், காட்சி (perception) அமைவதற்கு மூன்று அம்சங்கள் வேண்டும். மனம், அறியப்பெறும் பொருள் அல்லது புறப்பொருள், அப் பொருள் மனத்திற்குத் தோன்றுகின்ற வகை அல்லது கருத்து. 'லாக்' கருத்து, நமது மனத்தினுள் மனமும், அதனுல் அறியப்பெறும் பொருளும் ஒருங்கே விளங்கும்போதுதான் காட்சி அமைகிறது என்பது. 'கருத்து' ஏதாவது ஒரு மனத்தினுள் விளங்க வேண்டும். கற்பனையிலும் நினைவிலும் கண்ணிற்குப் புலனுகாத பொருள்களின் கருத்துகள் விளங்குகின்றன. 'லாக்' இவ்வாறு கருத்துகளின்மூலமே நாம் சடப்பொருள்களை அறிகிருேம் என்று விளக்கிய கொள்கையே 'பிரதிநிதித்துவக் கொள்கை' என்று பெயர் பெறுகின்றது. கருத்து (idea) புறப்பொருளை மனத்திற்கு விளக்குகிறது. அறிகின்ற மனத்திற்கும் சடப்பொருள் உலகிற்கும் நடுவே கருத்து விளங்குகிறது. நாம்

நேராக நமது கருத்துகளையே அறிகிறோம். சடப்பொருள்களைக் கருத்துகளின்மூலம் அறிகிறோம். சடப் பொருள்களைக் கருத்துகளாக நாம் அறியும் வகையில் பல வேறுபாடுகள் விளங்கக் காண்கிறோம். இவ் வேறுபாடுகளை இருவகையினவாகலாக் கருதி, அவற்றை முதல்நிலைப் பண்புகள் எனவும், வழிநிலைப் பண்புகள் எனவும் பகுக்கிறார்: பரப்பு, வடிவம், திண்மை, இயங்கும் தன்மை ஆகியவை முதல்நிலைப் பண்புகள் (primary qualities) ஆகும். இவ்வகையில் வழிநிலைப் பண்புகள் (secondary qualties) விளங்கவில்லை. சடப்பொருள்கள் நம்மிடத்து விளைக்கவல்ல ஆற்றல்களே வழிநிலைப் பண்புகள் ஆகும். நிறம், சுவை, ஒளி, போன்றவை நாம் சடப்பொருள்களைப்பற்றிப் புலன்களின் வாயிலாக அறிவன. முதல்நிலைப் பண்புகள் அவ்வற்றிற்குரிய புறப்பொருள்களை ஒத்தன; வழிநிலைப் பண்புகளாகியவை புறப்பொருளை ஒத்தன அல்ல. சதுரம்பற்றிய கருத்து, சதுரப் பொருள் ஒன்றை ஒத்தது. இயக்கம் பற்றிய கருத்து, இயக்கும் பொருளை ஒத்தது. வடிவம், திண்மை போல்வன புறத்தன; புறப்பொருள்கட்கு உரியன. நாம் புறப்பொருள்களை காணுதவிடத்தும் அவற்றிற்கு முதல்நிலைப் பண்புகள் உரியன. வடிவம், திண்மை, இயக்கம் ஆகிய முதல்நிலைப் பண்புகள் புறநிலையில் விளங்குவதோடு, நமது அகத்தும், கருத்துகளாக விளங்குகின்றன. வழிநிலைப் பண்புகள், புறப்பொருள்களால் நம்மிடத்து விளங்கத்தக்கன. வடிவம், திண்மை, இயக்கம் ஆகியவை அளவுப் பண்புகளாகும்; இவற்றை அளந்து அறியலாம். நிறம், சுவைபோன்ற வழிநிலைப் பண்புகள் புலப்பண்புகளாகும் (sensible qualities). புறப்பொருள்கள் விளங்கினுலன்றி புலப்பண்புகளை அறிதல் இயலாது. ஒரு பொருள் சதுரமாக விளங்குகிறது; அதற்குரிய இடத்தை நிரப்புகிறது. சதுரமாக விளங்குதல், நாம் காணுவிடத்தும் நிகழக்கூடியதே. ஆனால், 'லாக்' கருத்துப்படி, ஒரு பொருள் சிவப்பு நிறத்தோடு விளங்குதல் ஆனது நாம் அதைக் காண்கின்ற நிலையிலேதான் என்பதாகும். சதுரத்தன்மை புறத்து விளங்குவது; 'சிவப்பு'ப் பண்பு காட்சிப் புலனோடு தொடர்புற்று விளங்குவது.

உலகம் வழங்குகின்ற பன்மைக் காட்சியினுல் கவரப்பெறுவோர் பன்மைக் கொள்கையை (pluralism) உருவாக்கியவராவர். இவர்கள் வேற்றுமையிடையே ஒற்றுமை காணுது பன்மையிடையே ஒருமை காணுது, தோன்றுவனவற்றையே பெரிதாகக் கருதுபவர்கள் ஆவர். தனியொருவனை உலக அமைப்பில் பெரிதாக மதிக்கும் இயல்பு பன்மைக் கொள்கைக்கு உண்டு. தன்னுண்மை உள்ள, தனித்த பல்வகைப் பொருள்களின் இயந்திரக் கூட்டமைப்பே

இப் பிரபஞ்சம் என்று விளக்குவார்கள். மற்றொரு வகைப் பன்மைக் கொள்கை, உலகிலே எண்ணிறந்த ஆன்மக் கூறுகள் அல்லது மொனடுகள் (monads) உள என்பது. லைபினிட்ஸ் கருத்து யாவரும் அறிந்ததே. மொனடுகள் யாவற்றையும் உட்படுத்தும் பரம்பொருள் (all-inclusive reality) ஒன்றனின் தோற்றநிலைகள் அல்ல; இவை யாவும் ஆன்ம அணுக்களே என்று லைபினிட்ஸ் வலியுறுத்துகிறார். இவை ஆன்மீக ஆற்றல்களின் கேந்திரஸ்தானம்; புறத்தினின்று தாக்குறாதவை. விஞ்ஞான ஆராய்ச்சி, அணுக்களையும், எலக்ட்ரான்களையும், உயிரணுக்களையும் ஊடுருவிக் கண்டு, பன்மைக் கூறுகளை வற்புறுத்துகின்றது. ஒருமைக் கொள்கையால் எழுந்த மயக்கத்தில் ஆழ்ந்திருந்த உலகினைத் தட்டி எழுப்பி, பன்மையினை வற்புறுத்தியவர், ஜேம்ஸ் என்னும் அமெரிக்க நாட்டு அறிஞராவார். ஒவ்வொன்றனின் தனியுருவத்தை, தனித் தன்மையை, சுதந்திரத்தை, செயலுரிமையை, புதுமையை ஜேம்ஸ் வற்புறுத்தினார். எத்தகைய மாற்றங்கட்கும் இடங்கொடாத மரக்கட்டைப் பிரபஞ்சமாகக் (block universe) கண்ட காட்சி நீங்கி, பன்மையிடையே ஒருமை காணும் காட்சி எழுவதாயிற்று.

மனம் ஒருமையை நாடுவது இயல்பு. உலகினை ஒழுங்குக்கு உட்படுத்தி, உலகில் விளங்கும் ஒவ்வொரு பகுதிக்கும் உரிய பங்கு யாது என அறியும் வேட்கை எழுந்தது. அறிவாக்கம் ஒருமை நாட்டம் உடையது; அமைப்புக் காணும் விழைவினது. பன்மைக் கொள்கையினர் புறவுறவுகளையே வற்புறுத்துவர். யாவும் பிரித்தறிய இயலாத நிலையிலும் இன்றியமையாத நிலையிலும் ஒன்றினோடொன்று உறவு கொண்டு, இயைபுற்ற உலகாக விளங்குவதைக் காண்பதும் காட்டுவதும் ஒருமைக் கொள்கை யாகும்.

செங்கற்கள் இங்குமங்குமாகச் சிதறிக் கிடத்தலில் பயனில்லை. செங்கற்கள் இடம்பெறுகின்றன; இடவுறவு அகவுறவாகும்; அகவுறவின் தனித்தோற்றங்களே புறவுறவுகளாகும். அணுக்கள் முடிபாக நோக்குமிடத்து, உள்பொருள்களே. ஆனால், இவை முடிபானவையா? தன்னிறைவு உள்ளவையா? இவை இடம் பெறும் அமைப்பிலிருந்து நீக்கப்பெறுமேல் பொருளுடையன ஆகா.

கருத்தியல் ஒருமைக் கொள்கை (abstract monism) என்றும் பருமையான ஓருமைக் கொள்கை (concrete monism) என்றும் அறிஞர் காண்பர். அனுபவத்தின் பல்வேறு கூறுகளை ஒழுங்கு படுத்திக் காண்பதை (organisation), ஒருமைக் கொள்கை

வற்புறுத்துகிறது. பொருள்களிடையே இயைந்த பொருத்தத்தை அறிதலிலே ஒருமைக் கொள்கை தனது கருத்தைப் பதிக்கிறது. நிறைவுள்ள பொருள் ஒன்றே எல்லேக்குட்பட்ட பொருள்கள்; தனித்த இருப்புடையன அல்ல. ஆனால், உலகு வழங்கும் பன்மைக் காட்சி பொய்யன்று. ஸ்பினேஸா என்கிற யூத அறிஞர், கருத்தியல் ஒருமையினைக் கண்டவராவர். மூல உபநிடத உண்மைகளைப் பின்பற்றிப் பிரமமே உள்பொருள் என்றும், அது இரண்டற்றது என்றும் சங்கரர் வற்புறுத்தினர். கலப்பற்ற தூய ஒருமையினிடத்துப் பன்மை காண்டல் அரிது. உள்பொருள் ஒன்றே ஆதலால், இவ்வுள்பொருளுக்கு அயலாக விளங்குவது பொய்யாகும். ஸ்பினேஸாவின் பொருள் சடமுமன்று; உள்ளமுமன்று; இரண்டிற்கும் நடுநிலைத்தானது. உள்ளமும் சடமும் அப் பொருளின் இருவேறு பண்புகளாம்.

பொதுமைப் பண்பு, தனிப்பொருள்களிலிருந்து நீக்கி, ஒருமையின் உயிர்ப்பானது பன்மையினிடத்தே விளங்குகிறது என்று காண்பது, பருமையான பொதுப் பன்மை நாடுவதாகும். இதைப் பருமையான ஒருமைக் கொள்கை என்பர். கருத்தியல் ஒருமைக் கொள்கை உலக உண்மையின் மறுப்புக்குக் (acosmism) கொண்டு செலுத்தும் ஆதலால், பருமையான ஒருமைக் கொள்கையே ஏற்றது. உலகின் அடித்தளத்தில் விளங்கும் ஒருமை உண்மையுடையது என்றும், அவ்வுண்மை வேறுபாடுகளின் நடுவே புலப்படுவது என்றும் கருதுகின்றனர். பரம்பொருள், இயக்கம் (dynamism) கொண்ட ஒன்ருகும்; தன்னகத்திலிருந்து எல்லேக் குட்பட்ட பொருள்களேயும் மனங்களேயும் தனது வாழ்வின் புலப்பாடுகளாகப் பரிணும முறையிலே வெளிப்படுத்துகின்றது. இக் கருத்தை ஹெகல் (Hegel), கேர்டு (Caird), ராய்ஸ் (Royce) ஆகிய மேலைநாட்டவர் விளக்கினர்கள். இந்தியத் தத்துவ வரலாற்றிலே இராமானுஜர் மேற்குறித்த கருத்தை விளக்கியவராவர். இவ்வடிப்படைப் பொருள் இறைவனுதல், இறைவனும் உலகமும் உள்பொருள்களே. இறைவன் இவ்வுலகில் உள்ளார்ந்த நிலையில் விளங்குகின்றன். அவன் இவ்வுலகைக் கடந்தும் விளங்குகிறன்.

## (e) பயன்வழிக் கொள்கை (Pragmatism)

அறிவுநிலையில் அமைகின்ற கருத்தமைவின் (concept) பொருளை அறிதல் எவ்வாறு? இக் கருத்தமைவை உண்மை எனக்கொண்டால், செயல் நிலையில் பெறத்தக்க இன்றியமையாத முடிவுகள் யாவை என அறிதல் முடியும். செயல்நிலையில் விளையத்தக்கனவற்றைக் கருதுமிடத்து, அது பொருள்பற்றிய அறிவு ஆகும்.

பயன்வழிக் கொள்கை உலகைப்பற்றிய கொள்கையன்று. எண்ணங்களைத் தெளிவுபடுத்திக்கொள்ளுதலே அதன் நோக்கமாகும்; உண்மை நாட்டம்பற்றிய கொள்கையன்று; கருத்தமைவுகளின் பொருளை வரையறை செய்யும் வழியாகும்.

'பியர்ஸ்' (Peirce) என்பார் தருகின்ற உதாரணங்களைக் கருதுவோம்.

ஒரு பொருளைக்குறித்து அது கடினமானது என்று கூறுகிறோம். கடினம் என்பதன் பொருள் யாது? பிற பொருள்களால் தாக்குறாத தன்மையுடையது என்று கடினத்தன்மையை விளக்கலாம். இத் தன்மையை அதன் பயன்களை நினைவில் வைத்தே கருதுதல் வேண்டும். 'எடை' என்பதை அடுத்துக் கருதுவோம். ஒரு பொருள் கனமுடையது என்று சொல்வதன் பொருள் என்ன? இப் பொருளிற்கு எதிர்க்கும் ஆற்றல் இல்லையானால், இது கீழே விழுந்துவிடும். ஓர் எண்ணம் அல்லது கருத்து என்பதன் பொருள் யாது? கருதப்பெற்ற அல்லது முன்னரே நிகழக்கூடியன இவை என அறிதல் அதன் பொருள் ஆகும். கருத்தமைவின் (concept) பொருளை வரையறை செய்தலையே குறிக்கோளாகக் கொள்ளத் தக்க அறிவு நிலையில் விளங்கும் செயல் என்ன என்பதே கவனித்தற்குரியது. கருதிய செயல்களை மேற்கொள்ள வேண்டுவதில்லை. செயல் நிலையையே வாழ்க்கையின் முதலும், முடிவும், அனைத்தும் என்று கருதுகின்ற நிலை வருமானால், பயன்வழிக் கொள்கையின் மரணம் சம்பவிக்கும் (கொள்கை பாழ்படும்). செயல் புரிவதற்கே நாம் வாழ்கிறோம் என்றும், இச் செயலில் அடங்கியுள்ள சிந்தனையைப் புறக்கணித்துச் செயலையே போற்றுவது என்றும் விளக்கங் கூறுவது பொருந்தாது. கருத்தமைவுகள் (concepts), கருத்துரைகள் (propositions) ஆகியவற்றின் பொருளை விளக்குகின்ற முயற்சியே பயன்வழிக் கொள்கையின் அடிப்படைத் தத்துவமாகும்.

கருத்தமைவு, அல்லது கருத்து என்பதன் பொருள் யாது? பயன்வழிக் கொள்கைப்படி அக் கருத்தின் அல்லது கருத்தமைவின் விளைவுகள் யாவையென முன்கூட்டியே அறிதல், கருத்தமைவை உண்மையெனக் கொண்டு இன்றியமையாத நிலையில் விளையத் தக்கவை யாவை என அறிதல் ஆகிய இவ்விளைவுகளின் தொகுதியே கருத்தமைவின் முழுப் பொருள் ஆகும்.

பயன்வழிக் கொள்கை உலகைப்பற்றிய கொள்கையன்று. அது ஒருவகைச் சிந்தனை முறையாகும். இம் முறை, கருத்துகளைத்

தெளிவுபடுத்துவதாகும். (Pragmatism is not a weltanschawung but is a method of reflection having for its purpose to render ideas clear).

ஒரு பொருளைச் சுட்டி இது கடினமானது என்கிறோம். கடினம் என்று கூறுவதன் பொருள் யாது? மற்றைப் பொருள்களில் தாக்குறாதது என்று பொருள்படும். கடினம் என்ற தன்மையைப் போல, பிற தன்மைகளும் அவற்றால் விளையும் பயன்களைச் சார்ந்தவை. ஒரு கருத்தமைவின் பொருள் யாது என வரையறை செய்தல், முன்கூட்டியே அக் கருத்துகளில் விளையத்தக்க பயன்கள் யாவையென அறிதல் ஆகியவைகளே பயன்வழிக் கொள்கையாகும். பயன்வழிக் கொள்கை என்பது வாழ்வின் முடிந்த முடிபாகச் செயலை மேற்கொள்ளல் என்பது ஆகாது. 'அடையாளம்' (sign) என்பது அதற்கு அயலாக உள்ள ஒரு பொருளைச் சுட்டுவதாகும். 'முக்கோணம்' என்னும் சொல் ஓர் அடையாளமாகும்; வடிவ கணித வகையொன்றைக் குறிப்ப தாகும். அடையாளம் பயன்படும் சூழ்நிலையைப் 'பியர்ஸ்' விளக்குகிறார். (1) அடையாளம் (முக்கோணம், சொல்லப் பெறுவது, வரையப்பெறுவது); (2) அடையாளம் சுட்டும் பொருள் (முக்கோணம் இங்குக் குறிக்கப்பெறும் பொருள்); (3) அடையாளத்தை விளக்குவது (interpretant). இது மற்றோர் அடையாளச் சொல்லாகும். மூல அடையாளத்தை விளக்குவது (முக்கோணம் மூன்று பக்கங்களை உடைய வடிவம்), அடையாளங் களைப் பயன்படுத்துவது மனத்தின் உரிமையாகும். அடையாளங் களை விளக்குகின்ற மனத்தை நான்காவது கூறு எனக் கொள்ளுதல் வேண்டும்.

பியர்ஸ் காட்சிப் பொருள் கொள்கை உடையவர். 'புறவுலகில் உள்ள பொருள்களை உள்ளவாறு அப்படியே அறிதல் இயலும். அவ்வாறு அறிதலில் எத் தடையும் இல்லை' என்ற கருத்தை உடையவர். கருத்துரை (proposition) என்பதை அடையாளம் எனக் கொண்டு, அவ்வடையாளம் சுட்டும் பொருளுக்கும் அவ்வடையாளத்திற்கும் உள்ள உறவை அறிகின்ற வகையில் உண்மையை அறியலாம். உண்மை என்பது குறிக்கோளாகவே விளங்குவது. அக் குறிக்கோளை மேலும்மேலும் அண்டுகின்ற முயற்சி வெல்லும். ஆனால், அக் குறிக்கோள் முழுவதும் நிறைவேறுவ தில்லை. முற்றிலும் உறுதியாக விளங்கத்தக்க உண்மை, அடையக் கூடியதன்று என்று பியர்ஸ் கருதுகிறார். இக் கருத்தை 'பிழைபடக் கூடிய நிலைபற்றிய கொள்கை' (fallibilism) எனலாம். முழு உறுதி, முற்றிலும் சரியான அளவை, யாண்டும் பொருந்தும் உண்மை

(absolute certainty, absolute exactitude, alsolute universality) ஆகிய இவை நமது அறிவாற்றலின் எல்லையை வகுக்கும் கொள்கைகளேயன்றி, இவை அறியொணுக் கொள்கையென்றே, ஐயக்கொள்கையென்றே கருதுதல் தவருகும்.

யாவற்றையும் அறிதல் இயலும் என்று கூறுவதன் பொருள் யாது ? கேள்வியின் பொருள் விளக்கமாக இருந்தால், அதற்கு விடை தருதல் இயலும். அனைத்தையும் அறிய இயலாது என்ருலும், நம்முடைய ஆராய்ச்சிக்குத் தக்க நிலையில் நாம் அறிய இயலும். அறிவு வளர்ச்சியடைவதற்கு ஏற்ப மேலும்மேலும் நாம் உறுதியான அறிவைப் பெற இயலும். எந்த ஒன்றையும் முழு உறுதியுடன் நாம் அறிய இயலும்.

ஒரு பொருளைப்பற்றி நமக்குள்ள எண்ணங்களைத் தெளிவு படுத்தும் நோக்கமே இங்கு முக்கியமானதாகும். செயல்நிலையில் விளையத்தக்க பயன்கள் யாவை? எத்தகைய புலப்பதிவுகளை (sensations) எதிர்பார்க்கலாம்? எத்தகைய செயல்களை நாம் மேற்கொள்ளவேண்டிவரும்? என்பனவே கருதவேண்டுவன. விளைவுகளைப்பற்றிய கருத்தமைவே, பொருளைப்பற்றிய கருத்தமை வாகும். பயன்வழிக் கொள்கை, எண்ணங்களைத் தெளிவுபடுத்து கின்ற முறையாகும்; கருத்துரைகள், கருத்தமைவுகள் ஆகியவற்றின் பொருளைத் தேர்தலாகும். பயன்வழி முறையைக் (pragmatic method) கொண்டு வேறு வகையில் தீர்க்க இயலாத தத்துவப் பிரச்சினைகளைத் தீர்க்க இயலும் என்று ஜேம்ஸ் (James) கருதினுர் (A method of settling disputes that otherwise might be interminable). சடப்பொருள்களே உண்மையானவை என்று ஒரு சாரார் (materialists) வாதிடுகின்றனர். சடமல்லாத பொருள்களே (ஆவிநிலையிலுள்ளனவே) உண்மையானவை என்று மறுபுறம் ஒரு சாரார் வாதிடுகின்றனர். இவ்விரு வாதங்களின் உண்மையை எவ்வாறு நிர்ணயித்தல் இயலும்? இவ்விரு வாதங்களால் செயல்நிலையில் விளையும் பயன்கள் யாவை? பொருள் பற்றிய கொள்கையாகமட்டும் (theory of meaning) விளங்காது உண்மைபற்றிய கொள்கையாகவும் (theory of truth) பயன்வழிக் கொள்கையை ஜேம்ஸ் கருதினுர். இவ்வகையில் விரிவுடைந்தது, சிந்தனையில் பின்பற்றத்தக்கது, உண்மையானது எதுவோ, அது வாழ்க்கையில் பின்பற்றத்தக்கதும் நேரியதும் ஆகும். இதுபோல் அனுபவத்தின் ஒரு பகுதியிலிருந்து மற்றெரு பகுதியை அறிதற்கு நம்மை எளிதில் அழைத்துச் செல்வதும், பல பிரிவுகளை இணைப்பதும், நன்கு பயன்படுவதும் ஆகிய இவைகளையே 'உண்மை' எனக் கொள்ள வேண்டும். கருத்துரைகளின்

உண்மையை அல்லது பொய்ம்மையை வரையறை செய்யும் முறையை, பயன்வழிக் கொள்கை என்கிறோம். நமது குறிக்கோள்கள் எந்த அளவிற்கு நிறைவேறுகின்றனவோ அந்த அளவிற்கு அக் கருத்துரைகள் உண்மையுடையனவாகும். உண்மை எனக் கருதப்பெறுகின்ற ஒரு செய்தியை அல்லது கருத்துரையை ஏற்பதால், வெற்றி விளையும்; பிழையான கருத்தை ஏற்பதால், தோல்வி விளையும். 'பியர்ஸ்' என்பார் பயன்வழிக் கொள்கையை அறிவு நிலையிலிருந்தே கருதினார். திருப்தி, காரியத்தை நிறைவேற்றுவது, பயன்படுவது, துணைநிற்பது போன்றவற்றைப் புகுத்தி, ஜேம்ஸ் உண்மையைப்பற்றிய கொள்கையை விளக்குகிறார். இவ்வாறு விளக்குவதால், 'பியர்ஸ்' அறிவு நிலையில் மட்டும் வைத்துக் கருதிய 'பயன்வழிக் கொள்கை' இப்போது பெருமாற்றம் கொளகிறது. ஒரு கொள்கை, நம்பிக்கை, கோட்பாடு ஆகியவற்றை எப்படி நாம் தேருவது? அக் கோட்பாட்டின் பயன்களை, அறிகின்ற வகையிலேதான் தேர இயலும். இதுவே பயன்வழிக் கொள்கையின் முக்கியக் கூறாகும்.

ஒரு கொள்கையை ஏற்பதா? தவிர்ப்பதா? என்ற நிலையில் நாம் கருதவேண்டுவன, செயல்நிலையில் விளையக்கூடிய பயன்கள் யாவை என அறிதல் ஆகும். இது பயன்வழி உண்மையை நாடுவதாகும். சடவாதம் அல்லது கருத்துமுதற் கொள்கை ஆகிய இரண்டு கொள்கைகளுள் எதை ஏற்பது என்ற நிலையில் சடவாத ஏற்பால் விளைவன யாவை, கருத்துமுதற் கொள்கையின் ஏற்பால் விளைவன யாவை என அறிதல் வேண்டும். விளைவுகளைக் (effects or practical consequences) கருதி முடிவு செய்வதே பயன்வழி முறையாகும். இதேபோல யாவும் வரையறையுற்று விளங்குகின்றன என்ற கொள்கை ஒருபுறம், தமக்குச் செயல் உரிமை (free-will) உண்டு என்ற கொள்கை மறுபுறம். இவற்றிடையே எக் கொள்கையை ஏற்பது என்ற கேள்வி எழுகிறபோதும், ஒருமைக் கொள்கை (monism), பன்மைக் கொள்கை (pluralism) ஆகிய இரண்டினிடையே எதை ஏற்பது என்ற கேள்வி எழுகிறபோதும், இறையுண்மைக் கொள்கை, இறைமறுப்பு இரண்டினிடையே ஏற்கத்தக்கது எது என்ற கேள்வி எழுகிறபோதும் நாம் விளையத்தக்க பயன்களைக் கருதியே முடிவு செய்தல் வேண்டும். பயன்வழிக் கொள்கையின் அடிப்படைத் தத்துவங்களை நினைவில் வைத்து நாம் கருதுகிறபோது, இறையுண்மையைக் கருதுகோளாக (hypothesis) ஏற்பதால் பெரு நலங்கள் விளையுமெனில் அக் கொள்கை உண்மையே.

உண்மையை நாம் எவ்வாறு முடிவு செய்கிறோம்? ஒரு கருத்தை அல்லது கொள்கையை உண்மையெனக் கொண்டு விளையும் பயன்கள் யாவை என அறிகிறோம். உண்மையைப் பெறுவதே முடிந்த முடிபாகக் கொள்வதற்கு இல்லை. நாம் அறிவன, அதாவது நாம் பெறுகிற அறிவு கருவியே ஆகும். வாழ்க்கையை வளப் படுத்தும்பொருட்டே அறிவு பெறுகிறோம்; அறிவு பெறுவதற் காகவே நாம் வாழ்வதில்லை. அளவை இயைபு (logical consistency), ஏற்புடைமை (validity), சரிபார்த்தல், ஒன்றுதல், தன்வயமாதல் (assimilation) ஆகியவற்றின் துணைகொண்டே நாம் கருத்து களின் உண்மை நிலையை அறிதல் வேண்டும். எந்தெந்த எண்ணங்கள் அல்லது கருத்துகள் மற்றைக் கருத்துகளோடு இயைகின்றனவோ, பொருந்துகின்றனவோ, ஏற்புடையனவா கின்றனவோ அவையெல்லாம் உண்மையானவை. இவை உண்மையுடையனவாதலால் பயன்படுகின்றன; அல்லது அவை பயன்படுவனவாதலால் உண்மையுடையனவாகும். 'விஞ்ஞான உலகில் பெரிய அளவு திருப்தியைத் தருவது உண்மையாகும்; ஏற்கெனவே நாம் பெற்றுள்ள அறிவோடு பொருந்துவதும் ஆகும். புதிய கருத்தைத் தருவதுதான் மிக முக்கியக் குறிப்பாகும்'. (Truth in science is what gives us the maximum possible sum of satisfaction, taste included, but consistency both with previous truth and novel fact which is always the most imperious claimant.)

பயன்வழிக் கொள்கை, உண்மையை நாடும் முறையை விளக்க எல்லாத் துறைகளிலும் பயன்படும் எடுத்துக்காட்டு ஒன்றைக் கருதுவோம். ஜேம்ஸ் என்பவர் தாமே தத்துவப் பிரச்சினை ஒன்றின் உண்மையை உறுதிப்படுத்தும்போது பயன்வழிக் கொள்கையைப் பயன்படுத்தினார். உலகு ஒருமையுடையதா? ஒன்றா? பலவா? பன்மைக் கொள்கை, பயன்வழிக் கருத்துப்படி, ஒருமைக் கொள்கையைவிட ஏற்புடையதாகும்.

ஒருமைக் கொள்கை உடையோர் கருதுகின்ற உலகு, வேறு எவற்றிற்கும் இடம் தராத தனி உலகு (block universe) ஆகும். சடமே உள்பொருள் என்று கொண்டாலும் சரி, கருத்துகளே உள்ளன என்று கொண்டாலும் சரி, இக் கொள்கை ஜேம்ஸ் என்பார்க்குத் திருப்தி தருவதாக இல்லை. எல்லையற்ற பொருள் ஒன்றின் தோற்றமாக அனைத்துப் பொருள்களும் விளங்குகின்றன என்றால், ஒழுக்க வாழ்வில் நமக்குள்ள பொறுப்பு, செயலுரிமை, தனிநிலை முயற்சி, ஆர்வம் ஆகியவற்றின் பொருள் யாது? புதுமையுணர்வு, தேர்ந்து செயற்படுதற்குரிய வாய்ப்பு, தேவை,

போராட்டம் முதலியவை பயனற்றனவாகும். பரம்பொருள் என விளங்குகின்ற ஒன்றின் கைப்பாவை எனத் தனிமனிதன் விளங்குவான். பரம்பொருள் சடமெனக் கொண்டாலும், பரமமனம் எனக் கொண்டாலும், தனிநிலையில் விளங்குகின்றோர் அனைவரும் செயலுரிமையின்றி அப் பரம்பொருளின் கைப்பாவைகளாக விளங்குவர். (A puppet in the hands of the absolute substance whether conceived as universal matter or as universal mind.) வெற்றி விளைக்கவல்ல செயல்நிலைகள் உள்ளன என்றால், தேர்தற்குரிய செயல்கள் பலவகைப்பட்டு விளங்குகின்றன என்பது தான் பொருள். பகுப்பற்ற முழுவதும் ஒருமையோடு விளங்குகின்ற பரம்பொருள் ஒன்றே. உள்பொருள் என்ற நிலை உண்மையானால், உள்ளத்து உறுதி (will) செயலற்று விளங்கும் (Will would be paralised in the presence of a completely unified and undifferntiated absolute). செயல்நிலையில், ஒழுக்க, சமயத் தேவைகள் பன்மையுலகையே வற்புறுத்துவனவாகும்; செயலுரிமை, கடவுட்கொள்கை ஆகியவையும் இன்றியமையாது விளங்குவனவாகும்.

கருத்துகள் உண்மையுடையனவாதலால் அவை (எண்ணங்கள்) பயன்படுவன; எண்ணங்கள் பயன்படுவனவாதலால் உண்மையுடையனவாகும். இவ்விரண்டினுள் பின்னர்க் கூறப்பெற்றது முன்னர்க் கூறப்பெற்றதுள் அடங்கும். கருத்துகள் உண்மையாக விளங்குகின்ற காரணத்தினால்தான் அவை பயன் உடையனவாகின்றன. ஜேம்ஸ் கருதியது இதற்கு மாறானதாகும். எண்ணங்கள் பயன்படுவதால் உண்மையுடையன என்று அவர் கருதினர். ஒரு கருத்தின் உண்மை அக் கருத்தின் எதிர்காலத்தில் விளங்குவது (Truth of an idea lies in its future) என்னும் கருத்தைப் பலர் எதிர்க்கின்றனர். கருத்துகள் தற்போது உண்மையுடன் விளங்குகின்றனவா, அல்லது பொருத்தமற்றனவா என்றே அறிய விரும்புகிறோம். ஒரே கருத்து ஒரு காலத்தில் பயன்படும் போது உண்மையாகவும், பயனற்றுப்போகும்போது பொய்ம்மையுடையதாகவும் விளங்கும் என்று ஜேம்ஸ் கருதுவதைப் பலர் மறுக்கின்றனர். மனிதன் தான் வாழும் சூழ்நிலையோடு பொருந்தி வாழ முற்படுபவன்; மனிதனின் தோற்றமே, இவ்வகையில் சூழ்நிலையோடு பொருந்தி வாழ்வதில் கண்ட வெற்றியின் விளைவேயாகும். எவ்வெக் கருத்துகள் ஏனைய கருத்துகளோடு முரணாது இயைகின்றனவோ அவையே பிழைப்பன; நிலைபெறுவன. எவ்வெக் கருத்துகள் மற்றைக் கருத்துகளோடு முரணுகின்றனவோ, அவை நிலைபெறுவன அல்ல; அழிவன. பற்றுகின்ற கையமைப்பு உடைய விலங்குகள், குளம்புமட்டும் உடைய

விலங்குகளை நோக்க உணவினைத் தேடி அடைதலிலே வாய்ப்புள்ளவையாகும். வளர்ச்சி பெற்றுள்ள நரம்பு மண்டல அமைப்பும், நுட்பமிக்க இந்திரியங்கள் அமைப்பும், நீண்ட கால நினைவாற்றலும் சூழ்நிலையோடு இயைய வாழ்கின்ற முயற்சிகளில் வெற்றிபெறத் துணைபுரிவனவாகும். இதேபோலக் கருத்துகள் உயிரியல் சாதனங்களைப் போன்றவை. இயற்கையோடு பொருந்துமாறு வாழ்கின்ற முயற்சிகட்குக் கருத்துகள் பெரிதும் உதவுவனவாகும். கருத்துகளை உடையவன் வெற்றி தோன்ற வாழ்வான். ஒருவனின் வாழ்வு அவனிடமுள்ள கருத்துகளின் தரத்தைப் பொறுத்தன. கருத்துகளிடையே போட்டியுண்டு. எவ்வெக் கருத்துகள் மனிதன் இயற்கையோடு பொருத்தமுற வாழும் வகைக்குத் துணைநின்றனவோ, அவை யாவும் நிலைபெறும் கருத்துகளாகும். புதிய சூழ்நிலைகளில் பொருந்த வாழ்வதற்கு அறிவாற்றல் பயன்படும். புதிய சூழ்நிலைகளில் வெற்றி தோன்ற, பொருந்துவதற்குரிய கருத்துகளைத் தெரிந்து பயன்படுத்துபவன், அறிவாற்றல் மிகுந்தவன் ஆவான்.

மேற்கூறிய கருத்துகள் 'டியூயி' (Dewey) என்பார் விளக்கியவையாகும். டியூயி என்பவர் தந்துள்ள கொள்கையைக் 'கருவிக் கொள்கை' (instrumentalism) என்று கூறுவார்கள். வாழ்க்கைப் போராட்டத்தில் தகுதியுடையவர்களே வாழ்வார்கள் என்ற உயிரியல் உண்மையை அடிப்படையாகக்கொண்டு டியூயி கருத்து விளங்குகிறது. உயிரியல் உண்மையை அடிப்படையாகக் கொள்வதைவிட, முதலில் அறிவாராய்ச்சிக் கொள்கையையும் அதனின் தத்துவங்களையும் வரையறை செய்துகொள்ளவேண்டும். 'டியூயி' கொள்கை நிறுவவேண்டிய உண்மைகளை முன்கூட்டியே உண்மையென ஏற்கிறார் எனத் திறனாய்வாளர் கூறுகின்றனர்.

அனைத்துக் கருத்துகளும் வாழ்க்கைக் கருவிகளே என்றும் அவற்றுள் ஒருசில பெரும்பயன் விளைப்பன என்றும், வேறு சில சிறு பயன் விளைப்பன என்றும், உறுதியான உண்மையை ஒருபோதும் அடைதல் இயலாது என்றும் கருதும்போது, உண்மையை உறுதியாக யாங்ஙனம் அடைவது? நிறைவான அறிவை, உறுதியான அறிவைப் பெறுதல் இயலும் என்று நம்மில் கருதுவோர், உண்மையும் உறுதியும் கூடிய அறிவு பெறுதல் இயலாது என்று அறியும்போது ஏமாற்றமுறுகின்றனர். நிலைத்த கருத்துகள் (eternal ideas), பொதுப் பண்புகள் (universals) போன்றவை நெடுங்காலம் நமது கருத்து வளர்ச்சிக்குக் காரணமாக விளங்கின. ஆதலால், கருவிக் கொள்கையை உடையவனும் பிற கொள்கைகள் பயன்பட்டுவந்துள்ளதை மறுத்தல் இயலாது.

## (f) தற்காலத்து உலகுண்மை வாதம் (Modern Realism)

உலகுண்மைபற்றிய இது, ஒரு கொள்கையாக அமையாது பலதிறக் கொள்கைகளின் திரட்டாக அமைகின்றது. பலதிறக் கொள்கைகளினிடையே ஓர் ஒற்றுமையும் உண்டு; இக் கொள்கை களினிடையே மாறுபாடும் உண்டு. முறையாக இக் கொள்கையினை விளக்க முற்படுகின்றபோது முக்கியமான வேறுபாடுகள் புலனு கின்றன. கருத்து முதல் வாதிகள் (idealists) உலகைப்பற்றிய கருத்தைக் கோவையாக விளக்குகின்றனர்; உலகைக் கருதும் போதும் முழுமையாகவே கொள்கின்றனர். ஆனால், உலகுண்மை வாதிகள் உலகைப்பற்றி ஒரு கோவையான கருத்தை வெளிப் படுத்தக்கூடும் என்று கொள்வதில்லை. உலகு பலதிறக் கருத்து களின் தொகையாக இருக்கின்றது. அண்டம் ஒரு பெரிய பெட்டி; அதில் பலதிறப் பொருள்கள் அடக்கம். இத்தகைய ஒன்றின் விளக்கம் பொருள்களின் பட்டியலாக அமையும். தனி ஒரு கொள்கையினின்று பல உண்மைகளின் நன்கு இயைந்த திரட்டாக இது அமையாது.

'மெய்ப்பொருளியல்' (philosophy) முழுமையான, முறையான, கோவையான கருத்துகளின் திரட்டு எனக் கொள்வது ஒரு நம்பிக்கை. அது நிறுவப் பெற வேண்டும். ஆதலால், உலகுண்மைவாதிகள் என்ன சொல்கிறார்கள் என்பதை அறிதல் வேண்டும். இதற்குத் துணையான தனிப்பட்ட பல உண்மைகளை நாம் தெளிதல் வேண்டும். பலதிறக் கருத்துகளைச் சுருக்கமாக விளக்குதல் இயலாத ஒன்றாகும். இன்று வளர்ந்துள்ள உலகுண்மை வாதம் பலதிறப்பட்ட கருத்துமுதற் கொள்கைகளை (idealism) மறுத்தலிலேயே தோன்றியது. கருத்துமுதல் வாதத்தின் அடிப்படையை நாம் உணரவேண்டும். எங்ஙனம் கருத்துமுதல் வாதம் தகர்க்கப்படுகிறது என்பதை அடுத்துக் கருதவேண்டும்.

சாதாரணமாக உலகைப்பற்றித் தனி ஒரு மனிதன் கருதும் போது 'உலகுண்மை'யை மறுப்பதில்லை. தான், உலகில் பல பொருள்களின் மத்தியில் வாழ்வதை உணர்கின்றான். பல பொருள்கள் இவனுக்கயலாக உள்ளன என்பதையும் கருதுகிறான். தன்னுடைய உணர்வானது பல பொருள்களை விளக்கும் ஒளிக் கற்றையாக விளங்குவதாகக் கருதுகிறான்.

இக் கருத்துப்படி, தோற்றத்திற்கும் உண்மைக்கும் வேறுபாடில்லை (Being is seeming). தோற்றமே இருப்பு.

சிந்தித்தால், நாம் அனுபவத்தில் பல பொருள்கட்குத் தனியிருப்பைத் தர இயலாத நிலையை உணர்வோம். கனவு நிலையில் நாம் காணும் காட்சிகள், குடிமயக்கத்தில் காணப்பெறும் இருமைக் காட்சிகள் போன்றவை நமது காட்சிக்குப் புறக் காரணங்கள் அல்ல என்பதை விளக்கும். கனவுப் பொருள்கள் எங்குள்ளன? கனவு கண்டான் உள்ளத்திலேயே அமைவன. நமக்கு அமையும் சில கருத்துகட்குப் புறவுலகில் பொருள்கள் அமைவதில்லை. பிழை நேர்வதற்கு வாய்ப்பு உண்டு. சாதாரணமாக உலகுண்மையை வலியுறுத்தும் தனி ஒருவன் சில சமயங்களில் தனது கருத்தை நிறுவ முடிவதில்லை. கருத்துமுதல்வாதம் இந்த நிலையைப் பயன்படுத்திக்கொள்கின்றது.

முதன்முதலில் உலகுண்மையை ஏற்று, பின்னர் அதுபற்றிய கருத்துகளை மனத்தில் அமைத்துக்கொண்டு வந்த நாம் அதிலிருந்து மாறுபட்டு, கருத்துகளின் வாயிலாகவே புறப் பொருள்களை உணர்கின்றோம் என்ற நிலைக்கு வருகின்றோம். 'டேக்கார்ட்,' 'லாக்' போன்றவர்களது பிரதிநிதித்துவ வாதம் இதற்கு எடுத்துக்காட்டு. இவர்கள், உணர்வினைப் புறப்பொருளை வெளிப்படுத்தும் ஒளிக்கற்றையாகக் கொள்ளவில்லை. ஆனால், புகைப்படம் எடுக்கும் கருவியின் முக்கியப் பகுதியாக உணர்வினைக் கருதுகிறார்கள். நமது உணர்வில், புறப்பொருள்களின் சாயலே படுகின்றது. ஆதலால் உள்ளம் தனது கருத்துகளையே—பிம்பங்களையே உணர்கின்றது. இங்ஙனம் காணும் கருத்துகட்குக் காரணமான புறப்பொருள்களை நேரில் அறிவதில்லை. புறவுலகம் உண்டென்று நம்பப்படுகின்றது; ஆனால், நேரில் உணர முடியாது.

கருத்துமுதல்வாதம் இந்நிலையில் நெடிது நிலைக்கவில்லை. புறவுலகப் பொருள்களை அறிய முடியாது என்றால் அவற்றிற்கு நமது கருத்துகளைத் தூண்டுகின்ற திறனுண்டு என்று எப்படிக் கொள்வது? மேலும் அவை புறவுலகில் உள்ளன என்பதை எங்ஙனம் அறிய முடியும்? ஆதலால் அடுத்த நிலையில் புறவுலகினை நீக்கிக் காணும் உள்ளத்தையும், உள்ள நிலைகளையும் ஒத்துக் கொள்கின்றோம். இக் கருத்தினைக் கொள்பவர்கள், பார்க்லி, ஹியூம் என்பவர்களாவர். பார்க்லி என்பவர் தனது கொள்கையின் முடிந்த முடிபினைக் கொள்ளாது, அதற்கு மாறுபட்ட வகையில் தனக்கயலாக, "பிறர் மனங்கள் உண்டெனக் கொண்டார். அவற்றை யறிதல் யாங்ஙனம்? பார்க்லி என்பவர் ஒரு பொருளின் இருப்பானது அதனை அறிவதால் அமைவதாகக் கூறுகிறார்.

ஹியூம் என்பவர் மனத்தின் நிலைகளே, தாம் உணரக்கூடியன, அவையே உள்ளன என்றும் கொண்டார். மனமும், புறவுலகமும்,

நாம் அறியும் வகையில் அமைந்த காட்சிகளின் தொகுதிகளே (bundles of perception). ஹியூம் என்பவர் கருத்துமுதல்வாதக் கொள்கையினை அளவை நெறிப்படி ஆராய்ந்தார். புறவுலகு தம்மால் நேரில் அறிய ஒண்ணாதது; நாம் உணர்வதெல்லாம் நம் உள்ளத்தின் நிலைகளே. புறவுலகின் உண்மை மறுக்கப்பெறு கின்றது. இந்நிலையினின்று தப்புவதற்கு எழுந்த முயற்சியில் எழுந்தவைகளே 'காண்ட்' என்பவரின் தத்துவக் கொள்கைகள். காண்ட் என்பவர் 'தன்னுண்மை நிலை' (thing in itself) என்று ஒன்றைக் குறிக்கின்றார். இது, என்றும் அறியப்படுவதில்லை; இது, அறியுமாறுமில்லை. ஆனால், நாம் நம்முடைய அநுபவத்தில் உணர் கின்ற உலகிற்கு ஓர் உண்மை நிலை அமைவதற்குத் தன்னுண்மை நிலை காரணமாகும். அறியும் உள்ளம் இவ்வுலகிற்குச் சில சட்டங்களை வகுக்கின்றது; அவை காலத்தையும் இடத்தையும் பொறுத்தன.

மேலும் ஒரு வேறுபாடு காண்ட் காண்கின்றார். ஆன்மா அல்லது அறியும்பொருள் ' இரு நிலைகளில் இயங்குகின்றது. அறிபவனாகவும் அறியப்படுபொருளாகவும் ~~ஆகியவைகளே~~ அந்த இருநிலைகளாகும்; புறப்பொருள்களின் சாயல்களை அநுபவிக் கின்ற நிலையில் ஆன்மா அறிகின்றவனாக அமைகின்றது. ஆனால், ஆன்மா ஏனைய பொருள்கள்போல் அறியப்படும் ஒன்றாகவும் அமைகின்றது.

ஹெகல் என்பவர் 'தன்னுண்மை நிலை' (thing in itself) என்பதை நீக்கினார். உள்ளம் அண்டங்களின் சட்டங்களை வரையறை செய்வது என்ற கருத்தினை விரிவு செய்து அனைத்துச் சட்டங்கட்கும் உறவுகட்கும் உணர்வே மூலம் என்று கொண்டார். பரம்பொருள் (absolute), உள்ளப் பன்மையினை அல்லது ஆன்மப் பன்மையினை நீக்குகிறது. ஆன்மப்பன்மை காண்ட் என்பவரின் கருத்துப்படி ஒத்துக்கொள்ளப் பெறுவதாகும். பலதிற ஆன்மாக்கள் அறியப்படுவன என்று கூறும்போது அவை மற்றைப் பொருள்களோடு ஒத்த நிலையில் வைத்து எண்ணப்படுகின்றன.

இப் பொருள்கள் பரம்பொருளின் பரிணாமங்கள் எனக் கொள்கிறார் ஹெகல். இவை பரம்பொருளில் ஒன்றுதலும் கூடும். ஹெகல் கருத்துப்படி பரம்பொருளே உள்பொருள். நாம் காணும் புறவுலகின் பன்மைக் காட்சி மறைகிறது. உலகப் பொருள்கள் அனைத்தும் பரம்பொருளின் சாயல்களெனக் கருதப் படுகின்றன.

பொது அறிவு நோக்குப்படி, அதாவது சாதாரண மனிதன் தான் அறிவனவற்றைக் கூர்ந்து எண்ணுகிறபோது தன்னுடைய

காட்சிகளுள் சில பிழையுடையன என்று உணர்கின்றான். தானறியும் அனைத்திற்கும் புறக்காரணங்கள் இல்லை என்பதை உணர்கிறான். இவ்வுணர்வு மெல்ல மெல்ல வளர்ந்து புறவுலகின் உண்மையையே மறுக்கத் தலைப்படுகின்றது. புறவுலகம் நீங்குகிறது. அகவுலகம் நிலைபெறுகின்றது. உலகுண்மைவாதிகள் காட்சியில் பிழை நேர்வதை உணர்கிறார்கள். புறவுலகை மனத்தின் பரிணாமம் எனக் கொள்ளாது காட்சியை விளக்க முற்படுகின்றனர். உலகுண்மைக் கொள்கைகள் பலவகையின. ~~அவற்றுள் — சில~~. சாதாரணமானவன் எங்ஙனம் புறவுலகைப்பற்றிய ஐயம் கொள்ளாதிருக்கின்றானோ அவ்வகையிலேயே புறவுலகை ஏற்கின்றனர்.

அறியப்படாத ஒன்றைப்பற்றி நாம் ஏதும் அறிதல் இயலாது. அறியப்படுகின்றது என்று சொல்லப்படுகின்றபோது அறிதலாகிய நிகழ்ச்சியின் வாயிலாக அறியப்பட்டது என்பது பொருள். ஆதலால் நாம் அறியப்படாத ஒரு பொருளைக் குறித்து அவற்றின் கூறுகள் இவை இவை என்று குறிக்க முடியாது. இந்த நிலையினைக் 'கருத்து முதல் கொள்கையினர்' கூறும்போது பொருள்கட்கு அறியப்படாதபோது இருப்பு இல்லை என்றும், அறியப்படும் பொழுது அப் பொருள்கட்கு இருப்பு அமைகின்றதென்றும் கூறுகின்றனர்; ஆதலால் பொருள்களின் உண்மை அறிதலிலேயே அமைகின்றது. அறியப்படும்போது பொருள் உளதாகின்றது (things only exist when they are known). அளவை நெறிப்படி நாம் இதனைக் கருதினால் அறியப்பட்ட பொருள்கட்கே இவ்வுண்மை பொருந்தும். நம்மால் அறியப்படாத பொருள்களின் நிலைமை யாது? இதல்லாமல் நம்மால் அறியமுடியாத பொருள்களும் உண்டு. நாம் ஒரு பொருளை அறியாத நிலையில் அதன் இயல்புக் கூறுகளை அறிய முடியாது. எல்லாக் கூறுகளும் நம்மால் அறியப் படுவதில்லை. ஆதலால் நாம் அறியாத நிலையில் பொருள்கட்கு அமையும் இயல்புகள் குறித்துக் கூறமுடியாது.

கருத்துமுதல்வாதிகள் தமது கருத்தினை விளக்குகின்றபோது ஒரு பிழை செய்கின்றனர். அவர்களது வாதம் 'நாம் அறிவன வெல்லாம் நம்முடைய கருத்துகளேயாகும்.' இதனை முக்கூற்று முறையினால் (syllogism) விளக்கலாம். அது வருமாறு:

(1) கருத்துகள் மனத்திற்கு அயலாக இருக்க இயலாது. (2) புறப்பொருள்கள் காணப்பெறுவதாலும் அல்லது அறியப் பெறுவதாலும் உண்மையில் கருத்துகளே. (3) ஆதலால் புறவுலகப் பொருள்கள் நமது உள்ளத்திற்கு அயலாக இருப்பதற்

கில்லே. முக்கூற்று முறைப்படி இது பொருத்தம் உடையதாகும். ஆனால், கருத்து என்ற சொல்லானது ஒரே பொருளில் வழங்கப்படவில்லே. முதற் கூற்றில் கருத்து என்னும் சொல் காணுகின்ற செயலேக் குறிக்கின்றது. இரண்டாவது கூற்றில் காட்சியாகிய செயலின் பொருளாகக் குறிக்கப்படுகின்றது; அதாவது காணப்படுகின்ற பொருளாகக் குறிக்கப்பெறுகின்றது. சுருங்கக் கூறின் ஒரு பொருள், காட்சி; மற்றொன்று காணப்படும் பொருள். வேறு சொற்களில் முன்னது செயல், பின்னது செயப்படுபொருள். செயப்படுபொருள் செயலாவது யாங்ஙனம்? உலகுண்மைக் கொள்கையினர் உள்ளத்தினைத் தமக்கு அயலாக உள்ள பொருள்களையும் அறியும் திறத்தது என்று கொள்கின்றனர்.

ஹெகல் அவர்களது கொள்கையின் முக்கியக் கூறு யாது? அறியும் மனத்திற்கயலாகப் பரம்பொருளைக் கொள்கின்றார். அப் பரம்பொருளை ‘எண்ணம்’ என்றே குறிக்கின்றார். அப் பரம் பொருளின் பூரணமற்ற சாயலே அறியும் மனமாகும். பரம் பொருள் அறியக்கூடியது என்று கொண்டால், நம்முடைய அனுபவத்தில் அமைவது ஒன்றாகும். பரம்பொருள் உண்மையினை நமது அனுபவத்திற்கு அயலாக நிறுவவேண்டும். இப் பரம் பொருள் அறியொணாதது என்று கொண்டால், டேக்கார்ட், லாக் போன்றவர்கள் கொள்ளும் பௌதீகப் பொருளைப் போல்வதாக முடியும். அக் கருத்துப்படி அவை நேரில் அறிய ஒண்ணாதன என்றால் நாம் அவற்றைப்பற்றி என்ன கூற முடியும்?

எந்த ஒரு பொருளையும் அதன் உண்மை நிலேயில் அறிதல் இயலாது. அப் பொருளைப்பற்றிய பேச்சு அமைகின்றபோது அப் பொருள் அறியப்படுகின்ற ஒன்றாக மாறிவிடுகின்றது. அறிதலாகிய நிகழ்ச்சி அறியப்படும் பொருளை மாற்றியமைக்கின்றது.

உலகுண்மைவாதிகள், கருத்துமுதல்வாதிகளை மறுக்கின்ற வகையில் மூன்று முக்கியக் குறிப்புகளைத் தெரிவிக்கின்றனர். (1) அளவை இயல் அல்லது தருக்க இயல், கணிதம், பௌதிகத் துறைகள் ஆகிய துறைகளில் நாம் ஆராயும் பொருள்கள் அல்லது செய்திகள் உள்ளத்தைச் சார்ந்தவையென்று கூறும்போது எப்பொருளில் கூறுகின்றோம்? உள்ளத்தால் கருதப்பெறுகின்றவை உள்ளத்தில் அமைவன எனினும் அவை பருப்பொருள்கட்கு மாறான கருத்துப் பொருள்கள் எனக் கொள்வதற்கிடமில்லே. (2) மேற்குறித்தவை அறியப்படுதலால் மாற்றமுறுகின்றன என்று சொல்வதற்கில்லே. (3) பொருள்கள் அறியப்படாதபோது மாற்ற

முருது தொடர்ந்து இருக்கலாம்; அறியப்படலாம். அறியப்படும் போதும் அறியப்படாதபோதும் இப் பொருள்கள் தமது இருப்பில் மாற்றமுறுவதில்லை. அறிதலாகிய நிகழ்ச்சி ஒருவகை உறவு ஆகும். இவ்வுறவு உள்ளத்திற்கும் உள்பொருள் ஒன்றிற்குமிடையே நிகழ்வதாகும்.

மேற்குறித்தவற்றினின்றும் உலகுண்மைவாதிகள் பொதுவாகக் கொள்ளும் முடிவுகள் வருமாறு: பொருள்களின் தன்மையினை அல்லது இயல்பினை நாம் முழுமையும் பொதுவாக அறிவு நிகழ்ச்சிகளிலிருந்து அறிய முடியாது. இதற்கேற்ப நம்முடைய அறிதலாகிய செயற்கு அயலாகவே பொருள்களின் தன்மை அமைகின்றது. அதனால் பொருள்களின் தன்மைகள் உள்ளச் சார்புடையன என்று கூறமுடியாது.

உலகத்துப் பொருள் ஒவ்வொன்றும் மற்றைப் பொருள்களோடு தொடர்பு கொண்டுள்ளன. எடுத்துக்காட்டாக, கோழியின் முட்டை கிரிக்கெட் பந்தைவிட முட்டை (oval) வடிவமானது. இந்திய ரப்பரைவிட பிரிட்டன் ரப்பர் உடையும் தன்மையுடையது. ஒரு முட்டை பிறிதொரு முட்டையைவிடப் பெரியது. பிறிதொரு முட்டை இம் முட்டையைவிடச் சிறியது. மேற்குறித்த பிறபொருள்களோடு உறவு கொள்ளாதபோது அதனுடைய தன்மையினை நாம் உணர முடியாது. முட்டையின் உண்மை நிலையினை நிர்ணயிக்க மேற்குறித்த பொருள்களோடு உறவு காணவேண்டும். சார்பற்ற உறவு கிடையாது. உறவுகளெல்லாம் நாம் விவரிக்கும் பல பொருள்களின் நிலைகளே. ஆதலால் எல்லாப் பொருள்களும் ஒன்றோடொன்று உறவு கொண்டு விளங்குகின்றன. உலகுண்மைவாதிகள் பொருட்பன்மையினை நிறுவ விரும்பினால் உறவுகளின் சார்பற்ற நிலையினை நிறுவவேண்டும். அதாவது கோழிமுட்டைக்குத் தனிநிலை உண்டு.

பிற பொருள்களை ஒப்பிடும்போது இது பல வகை உறவுகளில் அமைகின்றது. முட்டையைப்பற்றி நாம் கருதும்போது— முட்டையைப்பற்றி நாம் அறியும்போது அது பல்வேறு உறவுகளின் நிலையமாக அமையப் பார்க்கின்றோம். பிற பொருள்களும் அத்தகைய உறவுகளின் தொகுதியே. ஆக, பல்வேறு தொகுதிகளின் உறவாக நம் உறவு அமைகின்றது.

ஆதலால் உலகுண்மைவாதி கீழ்க்காணும் புறவுலகுபற்றிய தற்புல உண்மையினை (axiom) வரையறை செய்கின்றார். 'அ' என்னும், எழுத்து, 'ஆ' என்னும் எழுத்தோடு ஒருவகை

உறவிலே அமைகின்றது. ‘ அ ’ என்பதின் தன்மை உறவினால் அமைவதொன்றன்று. இவ்வுறவும் ‘ அ ’ என்பதனால் வரையறை பெறுவதும் அன்று. இவ்வுறவிற்கும் ‘ அ ’, ‘ ஆ ’ என்பவற்றின் தன்மைக்கும் தொடர்பில்லை. இப் பொருள்களை மனமுணரும்போது அறிதலாகிய உணர்வினைக் கொள்கின்றது. ‘ அ ’ என்பது, ‘ ஆ ’ என்பதன் மாற்றத்திற்கு உட்படுவதில்லை. ‘ அ ’ என்பது புறவுலகிலே தனிவகை உறவு கொள்கின்றது.

ஆஸ்திரிய நாட்டுத் தத்துவ ஞானியாகிய மெனாங் (Meinong) காட்சியில் முக்கூறுகள் உள என்கிறார். (1) எண்ணமாகிய செயல்; (2) அச் செயல்படும் பொருள்; (3) எண்ணப்படும் பொருள். நான் ஒரு பசுவினைப் பார்க்கின்றேன். பசுவினைக் கண்டாலும் குதிரையினைக் கண்டாலும், இரண்டிலும் காணுகின்ற செயல் ஒன்றேதான். காட்சியில் அமைவன வேறு. முன்னதில் பசுத் தன்மை, பின்னதில் குதிரைத் தன்மை. அறியப்படும் பசுத் தன்மை, பசுவின் வேறானது. பசுத்தன்மை என்னுள்ளத்தில் அமைவது. பசு வயலில் மேய்ந்துகொண்டிருந்தாலும், அதைப் பற்றி நான் அறியும் பசுத்தன்மை உள்ளத்தில் உண்டு. பசுவை நான் முன்னர் கண்டுள்ளேன். பசுவினை நான் மாலை எதிர் பார்ப்பேன். கழிந்தகாலக் காட்சி நினைவிலிருப்பது. காட்சியும் எண்ணமும் ஒரு பொருளைப்பற்றியதாகத்தானிருக்கும். சிந்தனை என்பது அந்த ஒன்றைப்பற்றியதாகத்தான் அமையும். ஆனால், பொருள்களின் இருப்பு நம் சிந்தனையைப் பொறுத்தது அன்று. சிந்தனை பொருள்களின்றி அமையாது. ஆனால், பொருள் களின் உண்மை அல்லது இருப்பு சிந்தனையைப் பொறுத்ததன்று. சிந்தனை சிந்திக்கப்படும் பொருளின்றி நிகழாது. பொருளற்ற சிந்தனையைக் கருத முடியாது. எண்ணத்திற்கு உருவம் தருகின்ற எண்ணக் கூறுகளை நீக்கி எண்ணக் கூறுகளை அறிய முடியாது. ஒரு பருப்பொருளின் குணங்களையெல்லாம் (வடிவம் முதலாயின வற்றை) நீக்கினால் என்ன எஞ்சும்? கருதவும் முடியாது. குணமின்றிச் செயலுமில்லை; பொருளுமில்லை. மேலும் நம் உணர்வில் தனி எண்ணத்தைமட்டும் எண்ணுதல் முடியாது. எண்ணம் என்று சொல்லும்போதே அது எந்த ஒன்றைப்பற்றி யேனும் நிகழ்வதாக அமைகின்றது. உலகுண்மைவாதிகள், காட்சியைப்பற்றி பேசும்போது சிந்தித்தலாகிய செயலையும், அல்லது காணுதலாகிய நிகழ்ச்சியையும், சிந்திக்கப்படும் பொருளையும், காணப்பெறும் பொருளையும் ஒருங்கே எண்ணு கின்றனர். காட்சி என்பது இரு கூறுகளால் ஆயது. ஒன்று, காட்சி; அதாவது நிகழ்ச்சி அல்லது செயல். மற்றொன்று காணப்படும் பொருள் அல்லது கருதப்படும் பொருள்.

அலெக்ஸாண்டர் என்பவர் உலகுண்மைவாதிகள் நிலேகளே விளக்குகின்ருர். அவர் காட்சியை ஒரு நிகழ்ச்சியாகக் கருதுகிருர். இந் நிகழ்ச்சியில் மனமானது கருதும் அல்லது காணும் ஒத்த நிலேயிலிருந்து பொருளே அறிகின்றது எனக் கூறுகின்ருர்.

இக் கருத்தை டாஸ்ஹிக்ஸ் (Daweshicks) மிக அழகாக விளக்கு கின்ருர். பௌதிகப் பொருளுக்கும் அறியும் மனத்திற்கும் அமையும் உறவு ~~யாது?~~ இருவகையானதாகும். ஒன்று புறப்பொருள். அது காட்சியைத் தூண்டுகின்றது; காட்சியின் அமைப்பினே வரையறை செய்கின்றது. மற்ருென்று இப் புறப் பொருளே அறியும் மனம். இம் மனத்தின் அறிவு புறப்பொருளேப் பொறுத்திருக்கின்றது. நம்முடைய பொறிகளுக்கு நெருங்கிய நிலேயில் புறப்பொருள்கள் அமையுமாளுல் நமது பொறிகள் அவற்ருல் தூண்டப்படுகின்றன. நமது கண் அழகிய சிலே யொன்றினேக் காண்கின்றது. கண்ணின் வழியாக விழித்திரையில் அதன் சாயல் படுகின்றது. பின்னர் அது கண்ணினின்றும் மூளேக்குச் செல்லும் முக்கிய நரம்பின் வாயிலாகச் செல்கின்றது. காட்சியின் குறிப்பு அமைகின்றது. நரம்புகளின் வாயிலாகப் புறத்தூண்டுதல் மூளேயைச் சேர்கின்றது. மூளேயின் வாயிலாகப் பொருளுணர்வு அமைகின்றது. இவ்வுணர்வு பொருளேப்பற்றியே நிகழும். ஆதலால் புறப்பொருளானது காட்சியைத் தூண்டியதோடல்லாது காட்சியின் கூருகவும் அமைகின்றது (stimulant and content conscious). இதனின்றும் நாமறிவது காட்சியாகிய செயலின் தன்மையினேப் புறப்பொருள் வரையறை செய்கின்றது என்பதே. காட்சிகள் பலவகையின. செம்மைக் காட்சி பசுமைக் காட்சியினின்றும் வேறுபடுகின்றது. இந் நிகழ்ச்சியில் மனம் செயலற்றுப் புறவுலகினின்றும் அமையும் தூண்டுதல்களே வறிதே பதிவு செய்யும் கருவியாக அமைவதில்லே. துவக்கத்திலிருந்தே மனம் தொழிற்படுகின்றது. அத் தொழில் களுள் புறப்பொருள்களில் சிலவற்றைத் தேர்தல் முக்கியமான தாகும். அத் தேர்வு மனத்தின் விருப்பங்களேப்பொறுத்தது. நமது பொறிகளின் திறத்தையும்பொறுத்தது. ஒரு சோலேயில் செம்மை நலமிக்க ஒரு ரோஜா மலர் பூத்து அழகாகக் காற்றிலே அசைகின்றது. நமது கண்ணேக் கவருகின்றது. கவர்ச்சியும் அதனடியாகப், பிறக்கும் காட்சியும் வேறுபடும். தாவர இயல் அறிஞெருவன் அம் மலரிடம் அமைந்துள்ள செம்மையையும், மென்மையையும், உறுப்புகளின் அமைப்பையும் ஆய்ந்த வண்ணம் காண்கின்ருன். கலேஞன் காணும்போது இயற்கையின் எழில் நலத்தையும், அம் மலரில் மண்டியிருக்கும் கலே நலத்தையும் துய்த்தவண்ணம் தன்னே மறக்கின்ருன். கண்ணெளியைப் பெற்று

அதனால் நிற வேற்றுமையறியாத ஒருவன் மயங்குகிறான். காட்சிக்குக் காரணமாய மலர் ஒன்று. புறநிலையிலும் ஒன்றேயாம். காட்சிகளை உறவெனக்கொண்டு உறவுகளை முறையே உறவு 1, உறவு 2, உறவு 3 எனக் கொள்வோம். காண்பான் தனது விருப்பத்திற்கேற்பவும், பயிற்சிக்கேற்பவும், பொறிகளின் திறத்திற்கேற்பவும் காண்கின்றான். மலர்க்காட்சி ஒரு முழுமைக் காட்சியாகும். மலர் வழங்கும் புதுமைக் காட்சிகளுள் சில கூறுகளைத் தாவர இயல் அறிஞன் காண்கின்றான். வேறு சிலவற்றைக் கலைஞன் காண்கின்றான். இயற்கையில் அல்லது செயற்கையில் சிலவற்றை நாம் காணாது ஒழிகின்றோம். காரணம் என்ன? சில நமது கருத்தை ஈர்க்கின்றன. சிலவற்றினிடத்து நமது கருத்தைப் பதித்துக் காண்கின்றோம். மேற்கண்ட காட்சிகள் புறத்து இல்லாதன அல்ல; புறத்து இருப்பவையே. ஆனால், சில கூறுகள் சிறக்கக் காணப்பட்டன. சில கூறுகள் காணப்பெறாது போயின. இவ் விளக்கத்தால் புறப்பொருள்களின் தனிமையும், மனத்தைச் சாராது அமையும் நிலைமையும் நன்கு விளங்குகின்றன. ஒரே பொருள் பல காட்சிகளுக்குக் காரணமாகின்ற நிலையும் விளங்குகின்றது.

# 3, அறிவு அளவை இயல் கொள்கைகளும் உள்பொருட் கொள்கைகளும் ஆகிய இவற்றிடையே நிலவும் உறவு.

## அறிவுவழிக் கொள்கையும் அனுபவவழிக் கொள்கையும் (Rationalism and Empiricism)

**தோற்றுவாய்**

மனிதன் தொடக்கத்திலிருந்தே தன்னைச் சூழ்ந்திருக்கும் உலகைப் (பொருள்களைப்) பற்றியும் தன்னைப்பற்றியும் அறிந்து கொள்ள மிக்க அவாவுடன் முயற்சி செய்துவந்தான். அவனது சிந்தனைத் திறன் நாளடைவில் செம்மைப்படும்போது அச் சிந்தனைத் திறனைப்பற்றியும் ஆராயலானான். சிந்தனையைப்பற்றிய சிந்தனையே அறிவைப்பற்றிய ஆராய்ச்சி ஆகும் (reflection on thought). சிந்தனையானது சிறந்த முறையில் அறிவை வளர்க்கவும் அளவை இயலைத் தோற்றுவிக்கவும் உதவி செய்யலாயிற்று.

அறிவு எவ்வாறு எழுகிறது என்று ஆராயும்போது அதற்கு இரு வாயில்கள் உள என்று தெரிந்துகொள்கிறான். ஒன்று, மனிதனது அறிவாற்றல்; மற்றொன்று அவன் பெறும் அனுபவம். தனக்கு அயலாக உள்ள ஏனைய மனிதர்களோடும் இயற்கைப் பொருள்களோடும் உறவு கொள்ளுகிறான். இயற்கை நிகழ்ச்சிகளையும் மக்களது நடை, உடை, பாவனை முதலியவற்றையும் கூர்ந்து கவனித்து அறிந்துகொள்ளுகிறான். எனவே, புற உலகினின்று ஏற்படும் புலக் காட்சிகள், அனுபவங்கள் அறிவுக்கு இன்றியமையாதன எனத் தெரிந்துகொள்ளுகிறான். அதேபோல் காட்சிகளையும் ஏனைய அனுபவங்களையும் பாகுபடுத்தி அறிவாக மலரச் செய்வதற்குத் தனது அறிவாற்றல் அகத்தே நின்று துணை செய்கிறது என்றும் உணர்கிறான்.

அறிவாற்றல்; அனுபவம் இவ்விரண்டினுள் எது அறிவு வளர்ச்சிக்குக் காரணமாக விளங்குகிறது ? அறிவின் ஆக்கத்திற்குச் சிந்தனைத் திறன் முக்கியமா ? அல்லது, அனுபவம் முக்கியமா ? புறவுலகினின்று புலன்கள் வாயிலாகப் புகுகின்ற காட்சிகளின்றி, அறிவாற்றல் தொழிற்படுதல் இயலுமா ? அறிவாற்றல் அனுபவமின்றிப் பயன்பெறுதல் எவ்வாறு ? அறிவாற்றல் தனித்தன்மையைக் காண வல்லதோ ? சிந்திக்கும் திறன் இல்லையேல், புறக் காட்சிகள் தொழிற்படுதல் எங்ஙனம் ? இவ்விரண்டும் தேவை எனின், எதன் பங்கு பெரிது ? என்ற பிரச்சினைகள் எழுகின்றன. இவற்றுக்கு விடைகளைக் கூற முற்படும்போது, சிலர் அறிவு பெறுவதற்கு அறிவாற்றல், அல்லது சிந்தனை இன்றியமையாதது என்பர். தத்துவ வரலாற்றில் இவர் ‘அறிவுவழிக் கொள்கையினர்’ எனப்படுவர். அனுபவமே இன்றியமையாதது என்பவர், ‘அனுபவவழிக் கொள்கையினர்’ எனப்படுவர்.

ஒருசிலரே, கலப்பற்ற வகையில் அறிவுவகைக் கொள்கையையும், மற்றும் ஒருசிலரே கலப்பற்ற அனுபவவழிக் கொள்கையையும் கடைப்பிடிக்கின்றனர். இவ்விரு தீவிரக் கொள்கைகளுக்குமிடையே பலவகையான அறிவுவழிக் கொள்கைகளும் அனுபவவழிக் கொள்கைகளும் நிலவி வருகின்றன. இவ் விடைநிலைக் கொள்கைகள், அறிவாற்றலையோ அனுபவத்தையோ ஏற்று மற்றதை முற்றிலும் புறக்கணிக்காது, அதன் பங்கைப் பல படிகளில் குறைந்ததாகக் கருதுகின்றன. அறிவுத் தோற்றத்தைக் குறித்து இவ் விருதிறக் கொள்கைகளும் கூறியுள்ளதைச் சுருக்கமாகக் கூறுவோம்.

### (1) மூலங்களும் மரபுவழிக் கருத்துகளும்

அறிவைப் பெறுவதற்குரிய வாயில்களைக் குறித்த பிரச்சினையே அறிவாராய்ச்சி இயலுள் மிகவும் தொன்மையானதாகும். நாம் எவ்வாறு அறிவைப் பெறுகின்றோம் ? நமக்கு அறிவைத் தரும் வாயில்களைப் ‘பிரமாணங்கள்’ என்கிறோம். நம்மைச் சூழ்ந்துள்ள உலகு, நமது உள்ளம், கணித உண்மைகள், நன்மை, தீமை, அழகு ஆகியவற்றைக் குறித்தும் பிறவற்றைக் குறித்தும், நம்மில் ஒவ்வொருவருக்கும் சில கருத்துகள் உண்டு. இக் கருத்துகளை எவ்வாறு பெற்றோம் ? இக் கருத்துகளின் ஏற்புடைமை அல்லது உண்மை ஆகியவை அவை தோன்றுகின்ற வாயில்களைச் சார்ந்தனவாகும். நாம் பெற்றுள்ள அறிவின் ஒவ்வொரு கூறும், அதற்குரிய தகுதிகளைக் கொண்டு, தன் ஏற்புடைமையை (validity) நிறுவுதல் வேண்டும்.

அறிவாராய்ச்சியியலில், பழங்காலந் தொடங்கி வழங்கிவரும் கருத்து யாதென்றால், அறிவு, பிறவியிலேயே அமைவதாதல் வேண்டும் (inborn) ; இல்லையேல் சிந்தனையால் பெறப்பெற்றதாதல் வேண்டும் (reason) ; இல்லையேல் பொறி அல்லது இந்திரியங்களின் வாயிலாக அமைதல் வேண்டும் (senses). அதாவது கண், செவி, தோல், நாக்கு, மூக்கு போன்ற ஐம்பொறிகளின்மூலம் பெறும் காட்சி, கேள்வி, வெப்பதட்ப அழுத்த நிலை வேறுபாடுகள். சுவை, மணம் ஆகிய புலனறிவுகள் இல்லையேல் நேர்க்காட்சியாக, அகவுணர்வாக (intuition) அமைதல்வேண்டும்.

இன்று உள்ளத்தியல், புலப்பதிவு (sensation), புலனறிவு (perception), கருத்தமைவு (conception) ஆகியவற்றைக் குறித்துப் பல உண்மைகளை உணர்த்துகின்றது. உள்ளத்தியல், அளவையியல் ஆகிய துறைகளில் தோன்றியுள்ள ஆராய்ச்சியுண்மைகளின் காரணத்தால், நாம் பழங்காலத்தில் அறிவு பெறும் வாயில்களாக அறிந்திருந்தனவற்றைக் குறித்த நம் கருத்துகளை மாற்றிக் கொள்ள வேண்டியவர்களாகின்றோம். நாம் பெறும் அறிவு தொகுதிகட்கு நேராக அவற்றைத் தோற்றுவிக்கின்ற புறப் பொருள்களை நாடி அவற்றின் ஏற்புடைமையை அறிதல் இயலாது. பிறப்பிலேயே, பிழையற, அகனமர்ந்து விளங்கும் கருத்துகளை நாம் 'லாக்' காலம் தொடங்கி நம்புவதில்லை. புலன்களின் வாயிலாக அமைவன சில சமயங்களில் மயக்கம் விளைப்பதால் ஏற்கத்தக்கதாக அமைவதில்லை. அவை உடனடியாக ஏற்கத்தக்க அறிவாக ஆய்ந்து ஏற்க வேண்டுவனவாகலாம். நாம் பெறும் அறிவெல்லாம், புலன்களின் வாயிலாக அமைவதே என்பது அனுபவவழிக் கொள்கையின் (empiricism) கருத்தாகும். நமது மனம், ஏதும் எழுதப்பெறாத பலகை (tabula rasa) போன்றது. மெழுகினால் ஆன பலகை போல்வது. புறவுலகினின்று புலன்களின் வாயிலாக உள்ளத்தைச் சேரும் பதிவுகள் எல்லாம் அகத்தில் உள்ள பலகையில் பதிகின்றன என எண்ணினர்.

நாம் பெறும் அனைத்தறிவும் சிந்தனையினின்றே தோன்றுவது என்று கொள்வதும் பொருந்தாது. அறிவுவழிக் கொள்கையானது அனைத்தறிவும், புற, புலப்பதிவுகளே என்று வற்புறுத்துகிறது. இதுவும் பொருந்தாது. அறிவாற்றல் என நம்மிடம் ஒன்றமைந்து, அமையும் அறிவனைத்தையும் ஏற்புடையதாகச் செய்கின்றது என்பதை உள்ளத்தியல் கொண்டு நோக்கும்போது நாம் ஏற்றுக் கொள்வதற்கில்லை. (அனுபவத்திற்கு முன்னாக) அனுபவம் இன்றியே முற்கோள்கள் எனக் கொள்ளத்தக்கனவும் ~~(apriori)~~ நமது புலனறிவு கடந்தனவும் ஆகிய சில சட்டங்கள் உள்ளன

என்று அறிவுவழிக் கொள்கை (rationalism) கருதியது. முன்னரே, தனிப்புலப்பதிவுகள் மெல்லமெல்ல அமைந்து பின்னர் அறிவுத் தொகுதியாக ஆக்கமுறுகின்றன எனக் கொள்வதற்கும் இல்லை.

நம்மைச் சூழ்ந்து பல்வகை உலகுகள் உள்ளன. நமது விருப்பத்திற்கு ஏற்றவாறு நாம் ஒருவகை உலகோடு உறவு கொள்கிறோம். கொள்ளும் உறவினால், அவ்வுலகு குறித்துப் பல செய்திகளை அறிகிறோம். இவ்வாறு அறிவதால், இவ்வுலகோடு தொடர்புகள் பெருகுகின்றன. தொடர்புகள் அனுபவ ஆக்கத் திற்குக் காரணமாகின்றன. அந்த அனுபவத் திரட்டுதான் 'அறிவு' (knowledge) என வழங்கப்பெறுகிறது. பின்னர் இவ்வறிவு வகைப்படுத்தப்பெறுகிறது. மொழியின் வாயிலாக உணர்த்தப்பெறுகிறது. விஞ்ஞானத்துறைகள் வளர்த்துள்ள முறைகளின் துணையில் அனுபவம், தக்கவாறு உருக்கொள்கிறது. ஆதலால் அறிவுத் தொகுதி என்பது அறிவின் துணைகொண்டு வகைப்படுத்தப்பெற்ற அனுபவத் திரட்டு என்பதாம். முறைமை பெற்ற அனுபவமாக அறிவு திகழ்கிறது. அறிவுவழிக் கொள்கையும் அனுபவவழிக் கொள்கையும் தத்தம் பிணக்கு களையும், தனி முறைகளையும் நீக்கி, நண்பர்களாகி அறிவின் ஆக்கத் திற்கு வழி வகுக்கின்றன (knowledge is experience rationalised or organised).

முன் குறித்த இருதிறக் கொள்கைகளாகிய அறிவுவழிக் கொள்கை, அனுபவவழிக் கொள்கை ஆகியவற்றில் முன்ன தாகிய அறிவுவழிக் கொள்கையைப் ஃபிரெஞ்சுப் பேரறிஞரான டேக்கார்ட் என்பவர் மேலைநாட்டில் துவக்கி வைத்தார். இவர், அறிவுவழிக் கொள்கையாளர்களுள் முதல்வர். ஸ்பினோசா, லைப்னிட்ஸ் ஆகிய இருவரும் இவரைப் பின்பற்றியவர்களாவர். டேக்கார்ட் கணித இயல் அறிஞராவர். சிறந்த அறிவைக் கணித முறை மூலம்தான் பெறமுடியும் என்று நம்பியதால் அவர், அறிவு அளவை இயலைக் கணித முறையில் அமைத்து ஆராய்ந்தார். ஐயமற உணரத்தக்கனவாகிய தற்புல உண்மைகளை ஆராய்ந்தார். இந்த உண்மைகளையே மெய்ப்பொருளியலுக்கு அடிப்படையானவை என்று கருதினார். இவற்றிலிருந்தே ஏனைய முடிபுகளை அமைத்தால் தான் உறுதியான அறிவு பெற இயலும் என நினைத்தார்.

**'டேக்கார்ட்'** (Descartes)

டேக்கார்ட் கூறியது வருமாறு:

'எனக்குப் போதிக்கப்பெற்றவையும், மரபினின்று யான் அறிந்தவையும், புலன்கள் உணர்த்துபவையும், அன்றாட வாழ்வில்

பிறரிடமிருந்து அறிபவையும் எவ்வாறு உண்மை எனக் கொள்வது? கணித இயலில் எனது சிந்தனைகள் அமையும்போது, பிழையற அவை நிகழ்வதை அறிகிறேன். அன்றாட வாழ்வில் புலன்கள் நம்மை ஏமாற்றக்கூடும் என்பதை அறிகிறோம். ஒரு பொருளிடத்து விளங்கும் நிறத்தைப் பிறிதொரு நிறமாகக் காண்கிறோம். நீரில் அமிழ்த்தப்பெற்றுள்ள ஒரு சிறு கோல் வளைந்துள்ளதாகக் கண் காண்கிறது. ஆனால், அக் கோலை நாம் தொட்டறியும்போது அக் கோல் நேராக விளங்குவதை அறிகிறோம். புலன்களால் அறிவனவற்றுள் பிழைகள் நேருவதை அறிகிறோம். ஒருவேளை கணிதச் சிந்தனைகளுள் நிகழும் பிழைகளை அறியாது இருக்கின்றோமா? பிழைகள் எவ்வாறு நேருகின்றன? எவ்வாறு நீங்குகின்றன? புலக் காட்சிகளில் அமைபவைகள் பிழைபடக் காண்கின்றோம். சிந்தித்தறிவனவற்றுள்ளும் பிழை நிகழக்கூடும். இவ்வாறு புலனறிவு, சிந்தனை ஆகிய இரு நிலைகளில் பிழை நிகழ்வதை உணரும் நாம், நம்பிக்கையின் அடிப்படையில், மதிப்பவர்களிடத்திலிருந்து உண்மை என ஏற்பதில் விழிப்புடன் விளங்கவேண்டும். நமது அறிவு ஏற்புடையதாக விளங்க வேண்டுமெனில் தொடக்கத்தினின்று கருதுதல்வேண்டும். நாம் கொள்ளும் ஒவ்வொரு நம்பிக்கையையும், ஊன்றியறிதல் வேண்டும். நம்பிக்கைகளை—கொள்கைகளை ஐயுறுதல் வேண்டும், நாம் நமது இருப்பையுங்கூட ஐயுற வேண்டும். முழு நம்பிக்கை யுடன் ஐயமின்றித் தெளிய உணர்வதையே ஏற்புடைய அறிவெனக் கொள்ளுதல் வேண்டும்.'

கொள்கைகளாகக் கருதப்பெறுவன அனைத்தையும் ஐயுறுதலால் தெளிவது யாது? இத்தகைய ஐய நிலையில் ஆழ்ந்து, விடுதலையின்றி எதுவும் அறிதற்கில்லை என்று கொள்வதாகும்; ஐயுறுவதற்கு இடமின்றி விளங்குவதாகும். அதாவது, சில உண்மைகள் மறுக்க இயலாதவையாகும்; அவ்வுண்மைகளைத் தவிர்க்க முடியாத நிலையில் ஏற்கவேண்டுவதாகும். 'டேக்கார்ட்' சில உண்மைகளைச் சந்தேகிக்க இயலாது என்கிறார். இவ்வாறு சந்தேகத்திற்கு இடமின்றி விளங்குவது யாது என்றால், நமது இருப்பு அல்லது உண்மையைப்பற்றிய கருத்தாகும். ஏனெனில், சிந்திக்கின்ற, ஐயுறுகின்ற முயற்சியே அல்லது நிலையே ஐயுறுபவனை அல்லது சிந்திப்பவனை ஐயமறத் தெளிவுபடுத்துவதாகும். எனது உண்மையைச் சார்ந்தே எனது ஐயுறவோ, சிந்தனையோ நிகழும்.

ஐயத்திற்கு இடமின்றி விளங்குவனவும், தெளிவாக உள்ளனவும், நமது மனத்தில் உறுத்துவனவும் ஏற்புடையனவே; அவை

உண்மையே எனக் காண்பீர். இறையுண்மை மற்ற மனங்களின் உண்மை ஆகியவை ஐயமறத் துணிந்த உண்மைகள் எனக் கண்டார். டேக்கார்ட் ஐயக்கொள்கையில் தொடங்குகிறூர். ஆனல், ஐயத்திலேயே முழுகிவிடவில்லை. ஐயக்கொள்கை முடிவில் பயனற்றதாகும். அவர் ஐயுறுதலை ஒரு முறையாக, சாதனமாகக் கண்டார். முற்றிலும் ஐயக்கொள்கையில் நிலைத்தல் இயலாது என்பதை நிறுவுகிறூர். ஐயக்கொள்கையை மறுத்தலின் வாயிலாக நாம் பெறுகின்ற கருத்து யாது எனில் அறிவில் அக உணர்வில் அல்லது தன்னுண்மையோடு, தாமே விளங்கும் தற்புல உண்மைகள் சில உள என்பதாகும். இதனை முறைமையான ஐயக் கொள்கை (methodical doubt) என்பர். ஒவ்வொருவனும், முறையாக அனைத்தையும் ஐயுறத் தொடங்கி, தானே தன்னைத் தான் ஐயுறுதற்கில்லை எனத் தெளிந்து, தன்னைத்தான் ஐயுறுதல், தன்னுண்மையையே மறுத்தலில் முடியும் என்பதை உணரலாம். 'டேக்கார்ட்' மறைந்து ஐம்பதாண்டுகள் சென்ற பிறகு 'கான்ட்' என்பார் 'மெய்ப்பொருளியலில்' ஆற்றல் மிக்க இயக்கமொன்றைத் தோற்றுவித்தார். 'அறிவியலின் அடிப் படைகளை நன்கு ஆய்ந்தார். அறிவென வழங்குவன அறிவெனக் கொள்ளத்தக்க தகுதிகள் உடையதாதல் வேண்டும். அறிவெனக் கொள்ளத்தக்கன எவ்வகை அறிவு ஆகும்? இவ்வறிவின் பரப்பு யாது? எத்துணையளவு உண்மையும், உறுதி யும் உடையதாகும்? என்பனபோன்ற திறன் ஆய்வு முறையில் நல்ல முயற்சியைத் தோற்றுவித்தார். தலைசிறந்த மெய்ப் பொருளியல் வல்லார் அனைவரும் ஆழ்ந்த பகுப்பாய்வுகளை மேற் கொண்ட காலங்களில் ஐயக் கொள்கையை ஏற்பாராயினர்.

பிளேட்டோவின் உரையாடல்களில் 'சாக்ரடீஸ்' என்பாரிடத்தில் ஐயக்கொள்கை மிகச் சிறந்து விளங்குவதைக் காணலாம். சாக்ரடீஸ் கேள்விகள் கேட்டாலும், குறைகளைச் சுட்டலாலும் சிந்தனைக்குரியனவாக அமைந்தவற்றின் உண்மை நிலையை உணர்த்துவாராஞர்.

அனுபவ-அறிவியலில் புலக் காட்சிகளையும், கருவிகளால் அறிவனவற்றையும் சிந்தித்துத் தெளியப்பெறும் அறிவியலில் ஐயநோக்கு முழுப் பயனுடையதாகலாம்.

அறிவியலில் விளங்கும் பல முறைகளில் திறனும் முறை சிறந்ததாகும். அறிவியலுள் சான்றுகளாக அமைவனவற்றை நுணுகி அவற்றின் உண்மை நிலையை ஐயமற உணர்கிறேம். மாறுபாடில்லாத, வரையறையான அளவை முறைகளை நாம் ஏற்கு மிடத்து, உறுதியான உண்மைகளை அறிய இயலும்.

அனுபவம் கடந்து விளங்குபவைகுறித்து நாம் அறிய இயலாதெனினும் அவை குறித்து நாம் ஐயுற வேண்டுவதில்லை. நாம் நம்பலாம். இவ்வாறு நம்புவதன் பொருள் யாது? இதற்கு ஆதாரம் யாது? 'கான்ட்' கருத்துப்படி மனிதன் சிந்திக்கும் திறனோடு, உணரவும் செயல்கள் புரியவும் வல்லவன் ஆவான். மனித இயல்புகளில் ஒன்று, அனுபவம் குறித்த உண்மை யாது? என அறியும் விழைவாகும். அவ் விழைவு இயற்கை உண்மைகளை அறியும் ஆற்றலோடு சமய, அற உணர்வுகளைப் பெறுவதற்கு நம்மை ஈடுபடுத்துவதாகும். மனிதன் இயற்கையில் விளங்கும் உண்மைகளை அறிதலோடு மனச் சான்றிலிருந்து வழுவாது, கடனாற்றும் திறனையும், அழகுணர்வையும் பெற்று விளங்குகின்றான். இத் திறன்கள் சமய இயல், அறவியல், அழகு இயல், ஆகியவற்றின் அடிப்படைகளாகும். இறைவன் உளன் எனவும் பிரபஞ்சத்தில் ஒழுங்கு உளது எனவும், மனிதன் இறவாப் புகழ் உடையான் எனவும் நம்புகிறோம். அறிவுகொண்டு, சிந்தித்து, உணர இயலாத நிலையில் அறவியல், சமய உண்மைகளை உணர்வதற்கு அறிவு கடந்த நிலையில், பிற உண்மைகளைக்கொண்டு உணர முற்படுகிறோம். உயர்ந்த உண்மைகளை நாம் அறிய இயலாது. அவைகளை உண்மைகள் என நம்புகிறோம். இவ்வாறு நம்பிக்கை கொள்ளாவிடில் மனித வாழ்க்கையில் நாம் பலவற்றை அறிதல் இயலாது.

'டேக்கார்ட்' சிந்தனையில் ஐயக்கொள்கை, அக உணர்வு, உள்ளுணர்வு ஆகியவற்றிற்கு இடம் கொடுக்கிறது. இதேபோல் 'கான்ட்' சிந்தனையில், ஐயக்கொள்கை நம்பிக்கை என்பதால் மாற்றம் காண்கிறது. 'கான்ட்' வளர்த்த ஐயக்கொள்கையும் ஒருவகை முறைமை பெற்றதேயாகும்.

ஸ்பினோஸா (Spinoza) என்பார் டேக்கார்ட்டிற்கு அடுத்த நிலையில் அறிவுவழிக் கொள்கையை வளர்த்த சிந்தனையாளர் ஆவர். ஃபிரெஞ்சு நாட்டு இருமை வாதம் (cartesian dualism) மனம், உடலின் வேறு ஆகும் என்று வற்புறுத்துவதால் அந்த இருவேறு பொருள்களின் இருப்பை உணர்த்துகிறது. இடைக் காலத்துச் சிந்தனையாளர்கள் பொருள் (substance) என ஒன்று உள்ளது; இது பண்புகளைத் தாங்கி இருப்பது; அவற்றிற்கு உறைவிடமாவது; ஆனால், பொருள் அவற்றிற்கு அயலான இருப்பும், நிலைபேறும் உடையது. டேக்கார்ட் மனத்தையும் சடத்தையும் வெவ்வேறு பொருள்களாகக் கருதி, அவை ஒன்றையொன்று எவ்வகையிலும் இயக்கிக்கொள்ள இயலாது என்று உணர்த்தினர். தறுவாய்க் கொள்கையினர் (occasionalists)

இறைவனது இடையீடு மனத்தையும் சடத்தையும் தொடர்பு கொள்ளச் செய்கிறது என்றனர். ஒவ்வொரு மனமும் தனியொரு பொருள் என்று கருதலாம். இவ்வாறு கருதியதன் விளைவாகத் தோன்றியதே லைபினிட்ஸ் வகுத்த 'மொனடு' கொள்கை யாகும்.

ஸ்பினோஸா, இறைவன் என்னும் பரம்பொருள் ஒன்றே உள்பொருள் என்றும், அப்பொருளின் இருவேறு தோற்ற நிலைகளே சிந்தனையும் (thought) இடப்பரப்பும் (extension) என்றும் குறித்தார். ஸ்பினோஸாவின் சிந்தனைகள் 'அற இயல்' என்னும் நூலுள் இடம் பெறுகின்றன. அவர், தனது காலம் கடந்த நிலையில் சீரிய சிந்தனைகளைக் கொண்டு அற இயலுள்ளும் சமய இயலுள்ளும் விளங்குகின்ற சில சிக்கல்கட்கு விடை காணுவாராயினர். ஸ்பினோஸா, தனது அடிப்படைத் தத்துவக் கருத்திலிருந்து ஏனைய உண்மைகளைப் பெறுகிறார். சிந்தனை உரிமையை வலியுறுத்தியவர். ஸ்பினோஸாவின் சிறந்த சிந்தனைகள் அற இயலுள்ளும் சமய இயலுள்ளும் அமைவதால் இங்கு அவற்றைக் கருதுதற்கில்லை. டேக்கார்ட் நமது அகத்தே சில எண்ணங்கள் (innate ideas) இயல்பிலேயே பிறப்புக் காலந்தொடங்கி விளங்குவன என்றார். ஸ்பினோஸா இக் கருத்தை ஏற்றார்.

'லைபினிட்ஸ்' என்பவர் ஸ்பினோஸாவிற்குப் பிறகு விளங்கிய அறிவுவழிக் கொள்கையினர் ஆவர். இவரது சிந்தனைகள் புலன் கடந்த பொருளியல் அல்லது அடிப்படை மெய்ப்பொருளியலில் அமைவன. 'மொனடுகள்' குறித்த கொள்கை இவருக்குப் பெரும் புகழைத் தந்துள்ளது. ஒவ்வொரு மொனடும் தனியொரு பொருளாகும். பண்புகளால் இவை வேறுபடுவன. தனித்தனியே கருதவல்லன. இட, கால வரையறைக்குள் மொனடுகள் அமைவன அல்ல. காலமும், இடமும், புலன்கட்குத் தோன்று வனவும் உண்மையானவையும் அல்ல. கால இடம் கடந்த நிலையில் விளங்கும் உள்பொருளாக விளங்குவன மொனடுகள். ஒவ்வொரு மொனடும் பிரபஞ்சத்தைச் சிறிய அளவு வேறுபாடு தோன்றப் பிரதிபலிக்கவல்லது ஆகும். எந்த இரு மொனடுகளும் ஒத்தன அல்ல. இவை ஒத்து விளங்கினால் வேறுபாடு விளங்காது. மிகவும் விரிவாக மொனடு கொள்கையை ஆராய்ந்து லைபினிட்ஸ் விளக்கி யுள்ளார். அவ்விளக்கம் இங்குத் தேவையில்லை.

புலச்சார்பற்ற உண்மைகளே (apriorism) உள்ளன என்ற வாதத்தை, அனுபவ வழி (empiricism) அமையும் உண்மைகளே உள்ளன என்ற வாதத்தோடு பொருந்துமாறு செய்ய லைபினிட்ஸ்

பெரிதும் முயன்றார். இம் முயற்சி விரிந்த அளவில் காண்ட் அவர்களால் பின்னர் மேற்கொள்ளப்பெறுகிறது. இடம் (space) மனம் கொள்ளும் வடிவம் (form of mind) என லைபினிட்ஸ் கருதுவதில் 'காண்ட்' சிந்தனை முன்னரே எதிர்பார்க்கப் பெறுகிறது. புலக்காட்சியும் அறிவாற்றலும் பகுப்புக் கொள்ளாது. மொனுடின் தொழிற்பாடுகள் இயல்பால் ஒத்தவை; அளவில் வேறுபடுபவை. புலப்பதிவுகள் தெளிவற்றனவாகும்; மயக்கம் விளைப்பனவாகும். சிந்தனைக்கு உரியனவாக அமைவன தெளிவுடையன; புலக்காட்சிப் பொருள்களை உள்ளவாறு புலப் படுத்துவதில்லை. மொனுடுகள் ஒன்றித்துப் படி நிலையிலே விளங்குவன; ஆன்மீக இயல்பின. காண்பான் ஆன்மீக அமைப்பை இடத்தில் அகன்று விளங்குவதாகக் காண்கிறான். இடம், அளவு, மயக்கம், நிலைஆகிய எண்ணங்கள் மனத்தில் விளங்குவன என்றும், இவை யாவும் தூய அறிவாற்றலில் தோன்றுவன என்றும், புறவுலகைக் குறிப்பன என்றும் லைபினிட்ஸ் கூறுகிறார். இக் கருத்துப்படி இடத்தைப் (space) பற்றிய கருத்து மனத்தின்கண் விளங்குவது. பின்னர் இவ்வுண்மை காண்ட் என்பவரால் வற்புறுத்தப்பெறுகிறது. இடம் (space) உண்மையானதன்று; மொனுடினிடத்துத் தோன்றுவது அல்லது மொனுடுகளின் அமைப்பில் தோன்றுவது.

உள்ளார்ந்த தற்புல உண்மைகள் இலவேல் அறிவியல் அமையாது. இவ் வுண்மைகள் அடிப்படையாக விளங்குவதால் தற்புலச் சிந்தனை எழுவதாகிறது. எண்ண உலகில், உண்மையை அளக்கும் அளவுகோல், முரண் தத்துவமாகும் (principle of contradiction). அனுபவ உலகில் போதிய அளவு சிந்தனை (principle of sufficient reason) உண்மையான அளவுகோலாகும். ஒவ்வொரு தீர்ப்பிற்கும் அடிப்படையில் ஏற்கத்தக்க காரணம் வேண்டும். பௌதிக இயல், அற இயல் ஆகிய இயல்களுள் போதிய காரணம் ஆட்சி புரிகிறது. பிரபஞ்சம் பொருளுடைய அமைப்பு.

அறிவு அளவை இயல்பற்றி அறிவுவழிக் கொள்கையின ராகிய டேக்கார்ட், ஸ்பினோஸா, லைபினிட்ஸ் ஆகியவர்களின் கருத்து வளர்ச்சியைக் கண்டோம். இனி, அறிவு அளவை இயல் பற்றி அனுபவவழிக் கொள்கையினரின் கருத்துகள் யாவை எனக் காண்போம்.

அனுபவவழிக் கொள்கையினராகிய 'லாக்', 'பார்க்லி', 'ஹியூம்' ஆகியோரது கருத்துகளைச் சுருக்கிக் காண்போம்.

இதுபற்றி முன்னர்க் கண்ட தலைப்புகளில் விரிவாகக் கருதியுள்ளோம். முதலில் 'லாக்' கருத்தை ஆராய்வோம். மெய்ப்பொருளியல் என்பது பொருள்களைப்பற்றிய உண்மை அறிவு ஆகும். இவ்வறிவு அவர் கருத்துப்படி பௌதிக இயலின் (physics) பாற்படும். அறிவு படைத்த நிலையில் மனிதன் செயலுரிமையோடு செய்யவேண்டுவனவற்றை வரையறை செய்வது அறவியல் (ethics). இவ்வாறு பொருள்களைக் குறித்தும் அறவாழ்வின் இலக்குகளைக் குறித்தும் கருத்துகளை வெளிப்படுத்துவது மூன்றுவது இயலாக 'லாக்' கொண்டார். இவற்றுள் அறிவு அளவை இயல் பெரிதும் முக்கியமானது. நமது திறன்கள், அறிவின் எல்லைகள் ஆகியவற்றை வரையறை செய்வது அறிவளவை இயலாகும். நமது எண்ணங்கள் தோன்றுகின்ற முறைமையினை முதலிலே ஆராய்கிருர். இதையே அவர் மூலப்பணியாகக் கருதுகிருர். தத்துவங்களைப் பிறப்பிலேயே நாம் உணர்வதானல், அவற்றின் ஏற்புடைமை குறித்து ஆராயவேண்டுவதில்லை. உள்ளார்ந்த எண்ணங்களை (innate ideas) முதலில் 'லாக்' ஆராய்கிருர். உள்ளார்ந்த எண்ணங்கள் எனக் குறிக்கத்தக்கன எவையுமில்லை என்று பல காரணங்கள் காட்டி விளக்குகிருர். அறச்சட்டங்கள், தாமே புலனுகின்ற, நிறுவ வேண்டாத தற்புல உண்மைகள் அல்ல; பலர்க்கும் பொதுவாக அமைகின்றன என்றும் கொள்வதற்கில்லை. 'டேக்கார்ட்', 'கடவுளைப்பற்றிய கருத்து' உள்ளார்ந்த எண்ணமாகும் என்று கூறுகிருர். ஆனல், 'லாக்' கருதியது வேறு. பல மக்களிடையே கடவுட் கருத்து விளங்கவில்லை. அது உள்ளார்ந்த எண்ணமெனின் அனைவரிடத்தும் விளங்கவேண்டும். மக்கட் சமுதாயம் முழுமையுமே கடவுட் கருத்தை உடையதாயினும், அந் நிலையே கடவுட் கருத்தை உள்ளார்ந்த எண்ணம் என்று நிறுவாது. நெருப்பு, வெய்யோன், வெம்மை, எண் ஆகியவை மக்கள் அனைவராலும் உணரப்பெறுகின்ற காரணத்தால் இவை பற்றிய எண்ணங்கள் உள்ளார்ந்தவை என்று கூறுவதற்கு இல்லை. எளிய எண்ணங்களே முதலில் புலன்களின் வாயிலாக அமைவன. பின்னர் மனத்தின் ஆற்றலால், எளிய எண்ணங்கள் சிக்கலான எண்ணங்களாக உருக்கொள்ளுகின்றன. நிறம், ஒலி, சுவை, வெப்பம்போன்றவை எளியவை. இவ்வெண்ணங்கள் சில புலன் உணர்வுகள் ஒருங்குசேர்வதால் விளைகின்றன.

புலன்கள் முதலில் தனிக் கருத்துகளை உள்ளே புகவிடுகின்றன. மனம் படிப்படியே புகுகின்ற கருத்துகளைப் புரிந்துகொள்ளத் தொடங்குகிறது. சில நினைவிலே பதிகின்றன; சில பெயர்ந்து விடுகின்றன. இவ்வாறு தொடக்கத்தில் ஏதுமின்றி இருக்கும் மனம் என்னும் பெட்டி, பலவற்றல் நிறைவு கொள்ளுகின்றது. மேற்

குறித்தவாறு எண்ணத்திலும் மொழியிலும் மனம் நிறைவு பெறுகின்றது. இவ்வாறு அமைவனவே பல்வகையில் சிந்தித்தற்குரியனவாகின்றன. நாள்தோறும் அறிவாற்றல் பயன்படும் முறை விளங்குகிறது. புதியனவாகப் புகுவன எல்லாம் சிந்தனையை மேலும்மேலும் இயக்குவனவாகின்றன.

மற்றுமொரு மேற்கோளைப் பார்ப்போம். மனத்தினை ஒரு வெள்ளைத் தாளாகக் (clean paper) கருதுவோம். இத் தாளில் ஏதும் எழுதப்பெறவில்லை ; கருத்துகள் இல்லை. இவ்வாறு வெறும் தாளாக விளங்குவது எவ்வாறு பற்பலவாகத் தோன்றுவதற்குக் காரணமாகிறது ? சுறுசுறுப்பான எல்லையில்லாத மனிதக் கற்பனை, முடிவற்ற வகையில் பல்வகையான காட்சிகள் தோன்றும் வகையில், வண்ண ஓவியங்கள் தீட்டியது எவ்வாறு ? அறிவுத் தொகுதி அமைந்தது எவ்வாறு ? இக் கேள்விகள் அனைத்திற்கும் அனுபவம் என்னும் சொல் மறுமொழியாகும். அனுபவத்தில் நமது அறிவு ஊன்றியுள்ளது. அதிலிருந்தே அனைத்தும் தோன்றுகிறது. பின்னவை, மனம் தனித்து அகத்தே தொழிற்படும்போது விளைவன. புறத்தினின்று புலன்களின் வாயிலாகவும் அகத்தே புலன்தரு செய்திகளை வகைப்படுத்தல் முதலிய செயல்களின் வாயிலாகவும் எளிய எண்ணங்கள் உருவாகின்றன. இவையே அறிவு அமைவதற்குரிய பொருள்களாகும் சிந்தனைகளைப் பாகுபடுத்தி நாம் அறிவோமானால், எளிய எண்ணங்களாக அவை பகுப்புக் கொள்வதைக் காணலாம். இவ்வெளிய எண்ணங்கள் அகத்திருந்தோ புறத்திருந்தோ அமைவனவாகும்.

புலக்காட்சி அமையும்போதே, நமது சிந்தனை தொடங்குகிறது. புலன்கள் கொண்டு அறியத் தொடங்கும்போதே, அறிவு உருக்கொள்கின்றது. இவ்வுண்மையை, அறிவுவழிக் கொள்கையினர் ஏற்கின்றனர். புலன்தரு வரவுகள் சிந்தனையைத் தூண்டுவனவாகும். அனுபவவழிக் கொள்கையினர் கருத்துப்படி, அறிவு புலன்தரு வரவுகளாலேயே அமைவதன்று.

அறிவுவழிக் கொள்கையினரிடையேயும் அனுபவவழிக் கொள்கையினரிடையேயும் நாம் பல்வகைநிலைக் கொள்கைகள் நிலவுவதைக் காண்கிறோம். ஆதலால், அறிவுவழிக் கொள்கையினர் அனைவரும் ஒப்பும் உண்மை யாது ? அனுபவவழிக் கொள்கையினர் அனைவரும் ஒப்பும் உண்மை யாது ? பிரபஞ்சம்குறித்த மனம் பல்வேறு உண்மைகளை உறுதியாக அறிகின்ற திறனுடையது என்றும் இவ்வுறுதியான அறிவைப் புலக்காட்சி தராது என்றும் அறிவுவழிக் கொள்கையினர் ஒருமுகமாகக் கொள்கின்றனர்.

இவர்கள் கூறுவதை ஊன்றி ஆராய்வோம். உலகில் நிகழும் நிகழ்ச்சிகள் அனைத்திற்கும் காரணம் உண்டு ; காரணமின்றி எந் நிகழ்ச்சியும் நிகழ்தல் இயலாது. இவ்வுண்மையை நாம் எவ்வாறு அறிகிறோம்? புலக்காட்சியிலே நாம் சில நிகழ்ச்சிகள் நிகழக் காண்கிறோம்; அவற்றிற்குத் தொடர்பான வேறு சில நிகழ்ச்சிகள் நிகழக் காண்கிறோம். தனித்தனியே நிகழ்வனவற்றைப் புலக்காட்சி அறியவல்லது ; ஆனால், இவற்றிடையே நிலவும் காரண காரிய உறவு புலன்களின் வழி அமைவதன்று. மேலும், அனுபவத்தில் அனைத்து நிகழ்ச்சிகளையும் நேரில் கண்டறிவதும் இயலாது. கழிந்த காலத்தில் நிகழ்ந்தன, எதிர்காலத்தில் நிகழக்கூடியன இவை நமது அனுபவத்தில் அமையாதனவாகும். ஆதலால், காரண காரிய அறிவு எவ்வாறு தோன்றுகிறது? அனுபவம் இவ்வுண்மையைப் புலப்படுத்தாதெனின், அறிவிலே தற்புல உண்மையாக (self-evident truth) இவ்வுண்மை அறியப்பெறுதல் வேண்டும். புறக்காட்சியின் துணையின்றிப் பொது உண்மைகளைப் பற்றிய உறுதியான அறிவு நம்மிடத்தே விளங்கக் காண்கிறோம். இவ்வறிவு புலச்சார்பற்ற அனுபவம் கடந்த அறிவு ஆகும் (apriori knowledge).

தற்புல உண்மைகளால் அமையும் புலச்சார்பற்ற அறிவு குறித்து அனுபவவழிக் கொள்கையினர் கூறுவதைக் காண்போம். நாம் அனுபவத்தில் ஓர் உண்மையை வலியுறுத்தக்கூடிய எல்லா நிகழ்ச்சிகளையும் நேரில் அறிதல் என்பது இயலாதது என்பது உண்மையே. எனினும், அனுபவமே நமக்குக் காரணகாரிய உண்மையைப் புலப்படுத்துவதாகும். அனுபவத்தினின்று தற்புல உண்மைகளை அறிய இயலாதென்றால், அவற்றை முழு நிலையில் உறுதியாக அறிய இயலாதென்றே கூறவேண்டும். சில பொது உண்மைகளை உண்மைகளென நம்புகிறோம். சிற்சில நிகழ்ச்சிகளில் அவ்வுண்மைகள் பொருந்தும் முறைமையும் அறிகிறோம். அவற்றை அவ்வளவிலேயே ஏற்றல் வேண்டும் என்று அனுபவவழிக் கொள்கையினர் கூறுகின்றனர். ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் காரணம் உண்டென்று நாம் அறிவோம். இவ்வுண்மை 'தற்புலமாக அறிவது' என்பதன் ஒரு வரையறை எனவே கொள்ளவேண்டும். பொது உண்மைகள், பொருள்களை, தனி நிகழ்ச்சிகளைக் குறித்தனவல்ல; அவை வரையறைகள் என்றே கருதுதல்வேண்டும். மேலும், மற்றொரு வகையில் தற்புல உண்மைகளை விளக்குகின்றனர். நிகழ்ச்சிகளுள் அடங்கியுள்ள உண்மைகளையே தற்புல உண்மைகள் விளக்குகின்றன ; புதிய செய்திகளை வழங்குவனவல்ல. கூறியது கூறியனவாகவே அவற்றைக் கொள்ளுதல் வேண்டும் (tautologus). ஓர் உதாரணத்தைக் கருதுவோம். சடவுலகில் ஆற்றல் அழிவ

தில்லை ; பொருள் அளவு (quantity of matter) மாறுவதில்லை. அனைத்துப் பௌதிக நிகழ்ச்சிகளினூலும் பொருள் அளவும் ஆற்றலும் மாறவோ அழியவோ மாட்டா என்பது விளங்கு கின்றது. இவை அனுபவத்தில் அறியக்கூடியனவே.

அறிவுவழிக் கொள்கையினர் கருத்துகளைக் கருதுவோம். அறிவுவழிக் கொள்கையினர், அறிவு, பல உறுதியான அசைக்க முடியாத உண்மைகளால் ஆனது என்று கருதுகின்றனர். இத்தகைய அறிவின் அடிப்படையாக அமைவன முதலுண்மைகள், பொது உண்மைகள், புலச்சார்பற்ற உண்மைகள் ஆகும். இவற்றை உள்ளுணர்வினூலேயே தெளியலாம். இத்தகைய தற்புல உண்மை களிலிருந்து பிற உண்மைகளை அனுமானிக்கலாம். இவ்வாறு அனுமானிப்பது கணித இயலுள் சில பொது அடிப்படை உண்மை களிலிருந்து பல உண்மைகளைப் படிப்படியே அனுமானிப்பது போன்றதாகும். ஆதலால், நாம் பெறுகின்ற அறிவனைத்தும் உள்ளுணர்வினூல் அல்லது அனுமானப் பிரமாணத்தால் தெளியப் பெற்றனவாகும். அனுபவமும் புலக்காட்சியும் தற்புல உண்மை களை மேலும்மேலும் தெளிவதற்குத் தூண்டுவனவாகும் என்று தொன்மையான அறிவுவழிக் கொள்கையினர்களாகிய டேக்கார்ட்டும் ஸ்பினேஸாவும் கருதுகின்றனர். எக் காலத்தும் உண்மையாக விளங்கும் சில தற்புல உண்மைகளின் உணர்விற்குத் தூண்டுகோல்களாகப் புலக்காட்சிகள் அமைவன. மனம் தற்புலப் பொது உண்மைகளை உணரத் தொடங்கிவிட்டால், தொடர்ந்து பல உண்மைகளை அனுமானப் பிரமாணம்மூலம் அது பெறும். கணித இயலுள் அறியப்பெறும் உண்மைகளிடையே விளங்கும் இயைபு (cogency), முறைமை பிறழாமை, சரியாக விளங்கும் தன்மை முதலியன டேக்சார்ட், ஸ்பினேஸா ஆகியவர்களின் மனத்தைக் கவர்ந்தன. அடிப்படை உண்மைகள் எல்லாம் சார்பற்ற உண்மைகளாகும். இவ்வடிப்படையில் எழுப்பப்பெறும் உண்மைகள் உறுதியானவையாகும். முடிபுகளைவிட அடிப் படைகள் முக்கியமானவைகளாகக் கருதப்பெற்றன. அகவுணர் விற்கு அனுமான அளவைவிட உயர்ந்த இடம் தரப்பெறுகிறது. டேக்கார்ட் வகுத்த வரையறைகள் வருமாறு :

உறுதியான, ஐயமற்ற முடிபுகளையே ஏற்றல் வேண்டும். நமது மனத்தின் ஆற்றல் அறியவல்ல, தெளிவான, உறுதியான, சந்தேகத்திற்கு இடமில்லாத உண்மைகளே கொள்ளத்தக்கன. உறுதியற்ற உண்மைகளை, முற்றிலும் அறியப்பெருதவற்றை, ஐயுறக்கூடியனவற்றை ஒதுக்குதல் வேண்டும். இவ்வாறு நீக்கிக் கொள்ளத்தக்கன ஒருசில உண்மைகளே எனச் சிலர் கருதலாம்.

நாம் நன்முக எண்ணிப் பார்த்தால் பல உண்மைகள் உள்ளன என்பதை அறியலாம்.

உறுதியான அறிவு பெறுதலில், அடிப்படையாக இரு முறைகள் விளங்குவனவாக 'டேக்கார்ட்' குறிக்கிருர்.

புலன்கள் மாறுபடுகின்ற உண்மைகளை உணர்த்தும். கற்பனையானது பிழைபடும் கருத்துகளினுல் தவமுன தீர்ப்புகட்கு வழி வகுக்கும். புலனுண்மைகளையும் கற்பனையையும் டேக்கார்ட் நீக்கி அகவுணர்வை வற்புறுத்துகிருர். 'லாக்' அவர்கள், 'பொருள்கள் நமது மனத்தில் புலப்பதிவுகளை விளைக்கின்றன. இப் புலப்பதிவுகள் இயக்கம், நிறம், ஒளி, மனம், ஊறு என்பன. இவற்றுள் சில முதனிலைப் பண்புகளாகும்; மற்றையவை வழிநிலைப் பண்புகளாகும். முதனிலைப் பண்புகள், பொருள்களின் பண்புகளின் படிகளாகும்; சாயல்களாகும். வழிநிலைப் பண்புகள், பொருள்களிடத்து விளங்கும் ஆற்றலால் விளைபவை. புலப்பதிவுகளைப் பாகுபடுத்திச் சேர்த்தும், பிரித்தும், அவற்றின் உறவுகளைத் தெளிந்தும் மனம் தொழிற்படுகிறது. ஆனுல், அனைத்தறிவும் அனுபவத்திற்குள் கட்டுப்பட்டே விளங்குகிறது. நமது எண்ணங்களைத்தான் நாம் நேரே அறிய இயலும். ஆனுல், புறவுலகு உண்டு என்பதை அறிகிறேம். ஆனுல், புறவுலகு குறித்த அறிவு நமது எண்ணங்களைப்பற்றியுள்ள நேரறிவுபோல் தெளிவாகவும் தன்விளக்கத் தோடும் அமையவில்லை என்று கூறுகிருர்.

'லாக்' கருத்துகளை அடிப்படையாக வைத்து பார்க்லி தமது சிந்தனையைத் தொடங்குகிருர். சடப்பொருட் கொள்கையையும், கடவுள் உண்மையை மறுக்கும் கொள்கையையும் தகர்க்க, பார்க்லி அனுபவ அடிப்படையைப் பயன்படுத்துகிருர். அறிவிற்கு அடிப்படை புலக்காட்சியும் சிந்தனையும் என்ருல், புறவுலகைப் பற்றி அறிதல் எவ்வாறு இயலும்? சடப்பொருள்பற்றி நாம் அறிவனவெல்லாம் நமது மனத்தில் அவை காரணமாக எழும் எண்ணங்களே ஆகும். ஆதலால், இவ்வெண்ணங்களைச் சடப் பொருள்களோடு ஒப்புநோக்க இயலாது. சடமென ஒன்று இருப்பினும் அதனை அறிதல் அருமை என 'லாக்' உணர்த்துகிருர். சடம் என ஒன்று தனிநிலையில் இருப்பதாயின், இறைவனுக்கு அயலாக எல்லையற்ற, நிலைத்த, மாருத பொருளாகச் சடம் அமைந்து இறைவனது ஆற்றலைக் குறைக்கும். ஆதலால், சடத்திற்கு இருப்பு நல்குவது இறையுண்மையை மறுக்க நேரிடுகிறது. ஆதலால், மூலக்கேள்வியாக பார்க்லி எழுப்புவது என்னவென்ருல், மனத்திற்கு அயலான உலகு உள்ளதா அல்லது சடவுலகு என ஒன்று

உள்ளதா என்பதாகும். சடவுலகு என ஒன்று உள்ளது என்று கொள்வதால் விளையும் இடர்பாட்டைத் தவிர்க்க, சடவுலகின் உண்மையில் நம்பிக்கையை நீக்கிவிடுதலே வழியாகும்.

மனம், அறிவு அளவை இயலுள் எழுகின்ற சிக்கலை அறிய வல்லதே என்றும், அறியாமை மனித ஆற்றல்களில் உள்ள குறைகளால் எழுவதன்று என்றும் கூறுகிறார். நம்மிடத்து விளங்கும் வேட்கைகளின் நிறைவிற்கு இறைவன் வழிவகுப்பவனாகவும் இருக்கலாம். நாம் அறியும் எண்ணங்கள் நமது அறிவுக்கு அப்பாலும் இயங்குவன; இறைவனுடைய உள்ளத்தில் தொடர்ந்து இருப்பன. நாம் அறியும் பொருள்கள் நமது உள்ளத்தில் அமையும் எண்ணங்களே. இவை ஆண்டவனுடைய உள்ளத்திலும் அமைவதால், புறவுலகத்தின் இருப்பு தொடர்ந்து அமைகிறது. காரணம் நமது காட்சியால்மட்டும் அவற்றின் உண்மை அமையவில்லை; இறைவனது காட்சியை இன்றியமையாததாக ஆக்குகின்றோம். இதை நாம் ஒப்புக்கொள்ளாவிட்டால் புறவுலகம் அமையாது; அப்பொழுது உள்பொருள் அனைத்தும் நமது உள்ளத்து நிலைகளே.

'லாக்', 'பார்க்லி' ஆகிய இருவருக்கும் பின் வந்த அனுபவ வழிக் கொள்கையினராகிய 'ஹியூம்' என்பார் கூறிய அறிவு அளவை இயற் கருத்துகள் முன்னமேயே விளக்கப்பெற்றுள்ளன.

சுருங்கக் கூறின், 'ஹியூம்' ஐயக்கொள்கையை வெளியிட்டவர். நம் சிந்தனையை உள்முகமாகத் திருப்பி ஆராய்ந்தால் நமக்குக் கிடைக்கக்கூடியவைகள் யாவை? தனித்த எண்ணங்களும், உணர்ச்சிகளும், புலப்பதிவுகளுமேயாகும். இவை தவிர, இவற்றை உள்ளடக்கிய 'மனம்' ஒரு கூட்டுப் பொருளே அன்றித் தனிப் பொருளன்று என்று கூறிவிட்டார்.

'ஹியூம்' புறப்பொருள்களின் தூண்டுதலால் மனத்தில் அமையும் பதிவுகள் வேறு கருத்துகள் வேறு எனப் பிரித்துப் பேசுகின்றார். புலன்களின் வாயிலாக ஏற்படுவனவற்றைப் 'பதிவுகள்' என்றும், எண்ணம் அல்லது கருத்து என்பதைச் சிந்தனையில் விளங்கும் மங்கலான உருக்கள் என்றும் கூறுகிறார்.

இதுபற்றிய தெளிவான விளக்கங்களை முன்னமேயே ஆராய்ந்துள்ளோம். 'லாக்', 'பார்க்லி' ஆகியோர் கண்ட முடிவுகளை ஏற்று அளவை நெறிப்படி முறையே ஆய்ந்து, புறவுலகிலும் குணங்களின் இருப்பிடமாகப் பொருள் என ஒன்றில்லை என்றும்,

அகவுலகிலும் புலப்பதிவுகள், காட்சி, கற்பனை, நினைவுத்திறன் ஆகியவற்றின் கூட்டாக மனம் அமைகின்றதே அன்றி மனம் என ஒன்றில்லை என்றும் தம் கருத்துகளை வெளிப்படுத்தினர். காரண காரிய உறவு குறித்தும், அனுபவவழி அளவையின் கருத்துப்படி தொடர்ச்சியே அறிய இயல்வது என்றும், அதைக்கொண்டு காரணகாரியத் தொடர்ச்சியை உறுதிசெய்ய இயலாது என்றும் வலியுறுத்கிறார்.

மேலைநாட்டு அறிஞர்களாகிய டேக்கார்ட், ஸ்பினோஸா, லைபினிட்ஸ், லாக், பார்க்லி, ஹியூம், கான்ட் ஆகியோரின் சிந்தனைகள் அறிவாராய்ச்சி இயலுள் சிறக்க அமைவன எனினும், அச் சிந்தனைகள் உலகைப்பற்றிச் சிந்தித்த நிலையில் எழுந்தனவே யாகும். மனம், உடல் ஆகிய இருமை 'டேக்கார்ட்' அவர்களின் சிந்தனையில் முக்கியத்துவம் பெற்றது. இவ்விருமையை ஏற்றதால் விளைந்த சிக்கல், பின்னாளிலும் தீராது விளங்கியது. இடைக் காலத்திலிருந்து தாம் பெற்ற இப் பிரச்சினையை 'டேக்கார்ட்' தனது காலம்வரையிலும் தீர்க்கவில்லை; ஆனால், தெளிவுபடுத்திச் சென்றார்.

'ஸ்பினோஸா'வின் விளக்கம் ஒருவகை ஒருமைக் கொள்கையில் முடிந்தது. 'லைபினிட்ஸ்' என்பார் 'ஆன்மப் பன்மை'க் கொள்கையை 'மொனாடு'களின்மூலம் வெளிப்படுத்தினர். உள்பொருள்பற்றிய சிந்தனை வளர்ச்சியில் எழுந்த வேறு பல பிரச்சினைகளும் உள்ளன. ஆனால், அறிவுவழி, அனுபவவழிச் சிந்தனையாளர்கள் பெரும்பாலும் அறிவாராய்ச்சிப் பிரச்சினை களையே கருதினர். குறிப்பாக, 'லாக்', 'பார்க்லி', 'ஹியூம்' ஆகியோர், உள்ளத்தியல் கண்கொண்டு அறிவு அளவு இயல் பிரச்சினைகளைக் கருதினர் என்பது அறிஞர் கருத்து. அறிவு அளவை இயல் பிரச்சினைகளை, உள்ளத்தியல் சிந்தனைகளிலிருந்து பிரித்து அறிய முடியாது. இவற்றின் உறவை நோக்கும்போது, அவை பின்னிப் பிணைந்தே விளங்கின. அவ்வப்பொழுது ஆய்வை மேற்கொள்ளும் அறிஞரது அறிவுத்திறனுக்கு ஏற்பவும் காலச் சூழ்நிலைக்கு ஏற்பவும் சில சமயங்களில் சில கூறுகள் அறிவாராய்ச்சி இயலுள்ளும் சில சமயங்களில் வேறு கூறுகள் 'உள்ளதன் இயலுள்'ளும் (ontology) வலியுறுத்தப்பெற்றன.

# 4. உண்மை, பிழைபற்றிய கொள்கைகள்
## (THEORIES OF TRUTH AND ERROR)

### 1. மேலைநாட்டுக் கொள்கைகள்

உலகிலுள்ள பொருள்கள், நிகழ்ச்சிகள் ஆகியவற்றைக் குறித்து நமது கருத்தை வாக்கியங்களில் வெளிப்படுத்துகின்றோம். கருத்துப் பொதிந்த வாக்கியங்களையே அளவை இயலார் முதனிலையில் கொள்கின்றனர். உண்மையோ, பிழையோ இத்தகைய வாக்கியங் கட்கே அமையும். ஒரு பொருள் அல்லது நிகழ்ச்சியைப்பற்றி நமது கருத்து அமையாதாயின், அதனைக் குறித்த உண்மையை அல்லது பிழையைக் கருதுவதற்கில்லை. நிறம், ஒலி ஆகியவற்றை நாம் நம்முடைய பொறிகளால் பதிவு செய்கின்றபோது, அவை பற்றிய பிழையோ உண்மையோ அமைவதில்லை. பிறந்த குழந்தை பொறிகளின் வாயிலாகப் பலதிற அனுபவங்களைப் பெறுகின்றது. வளர்ந்து அறிவு முதிர்ச்சி பெறுகின்றபோதுதான் பொருள்களைக் குறித்தும் நிகழ்ச்சிகளைக் குறித்தும் கருத்துத் தெரிவிக்கக்கூடும். காண்பான், காணப்படு பொருள் ஆகிய இவ்விரண்டின் உறவு, உணர்வு கடந்த நிலையில் அமைகின்றபோது, கருத்துப் பொதிந்த வாக்கியம் அமையாது. இங்கு காண்பான், காணப்படு பொருள் ஆகிய வேற்றுமையைக் கடந்துவிடுகின்றோம். இதனைக் 'கடந்த உண்மை' என்றும் 'முழு உண்மை' என்றும் கூறுகின்றோம். அதை இங்கு நாம் கருதவேண்டியதில்லை. ஒன்றைப்பற்றிய கருத்தினை நாம் வெளிப்படுத்தும்போது, அது கருத்துப் பொதிந்த வாக்கியமாகிறது (judgement). கருதப்படும் பொருள் இது என்று நாம் ஒன்றைப்பற்றி உடன்படலாம்; அல்லது மாறுபடலாம். உண்மையை நாம் தெளிவதற்கு மேலும் சிந்தனை வேண்டும். சந்தேகம் என்பது உண்மையோ அல்லது பொய்யோ என்று தெளிய முடியாத நிலை. நாம் உடன்பட்டுக் கருத்துத் தெரிவிக்கலாம் அல்லது மறுக்கலாம். உடன்பாடு உண்மையை

**வெளிப்படுத்தாது;** எதிர்மறை பொய்யாக்கிவிடாது. எந்த நிலை உண்மை நிலையை வலியுறுத்துகின்றது? அல்லது உண்மை எக் காரணங்களால் துணியப்பெறுகின்றது? பிழை என முடிவு கட்டுதற்குத் துணையான நிலைகள், காரணங்கள் யாவை? சுருங்கக் கூறின், உண்மையும் பிழையும் எவ்வாறு அமைகின்றன? உண்மையை எங்ஙனம் தெளிகின்றோம்? பிழையை எவ்வாறு அறிகின்றோம்? எவற்றின் துணைகொண்டு உண்மையையும் பிழையையும் பிரித்தறிய முடியும்? இத் துறையில் நான்கு கொள்கைகள் உள்ளன. அவை உள்ளுணர்வுக் கொள்கை (intuitionism), இயைபுக் கொள்கை (coherence theory) அல்லது செயல்நிலைக் கொள்கை, பயன்வழிக் கொள்கை (pragmatism), ஒற்றுமைக் கொள்கை (correspondence) என்பன.

உள்ளுணர்வுக் கொள்கை (Intuitionism): ஒருவகையான அறிவு உண்மையினைத் தன் இயல்பாகக் கொண்டுள்ளது. உண்மையே அதன் இயல்பு. பிழையோ அல்லது மாறுபட்ட நிலையோ மற்றொரு வகைக்கு இயல்பாக அமைகின்றது. இவ்வாறு கூறுவதன் பொருள் யாது? சிலவகை அறிவு, இயல்பில் உண்மையாக அமைகிறது; வேறு சில பொய்யாகப் பிழையாக அமைகிறது. இவ்வாறு இயல்பில் உண்மை அல்லது பிழை விளங்குவதால், நாம் உள்ளுணர்வில் உடனுக அதன் உண்மையை அல்லது பிழையை அறிகிறோம். குறித்ததொரு நம்பிக்கை உண்மையா அல்லவா என்பதை எவ்வாறு அறிகிறோம்? 'டேக்கார்ட்' (Descartes), 'கட்வொர்த்' (Cudworth), 'ரீட்' (Reed) போன்றோர் பழைய காலத்து உள்ளுணர்வுக் கொள்கையினர் ஆவர். உடனுக நம்பிக்கையின், பொய்த் தன்மையையோ அல்லது உண்மை நிலையையோ அறிகிறோம் என்று 'டேக்கார்ட்' போன்றோர் கூறுகின்றனர். விழிப்பு நிலையில் நாம் அறிவன, காண்பன அனைத்தும் நேராக உணரப்பெறுகின்ற நிலையில் உண்மையுடையனவாகும். திரிபுக் காட்சி, கனவுபோன்ற நிலைகளில், நாம் பிறழக் காண்பதையும் அறிகிறோம். ஆதலால், உண்மையும் பிழையும் உள்ளுணர்வால் உடனுக அறியப் பெறுகின்றன.

அர்த்தம் அல்லது பொருள் வேறு; உண்மை வேறு. ஒரு வாக்கியம் பொருளுடையதாக இருக்கும்; ஆனால், அது உண்மையாக இருக்கவேண்டும் என்பதில்லை. எடுத்துக்காட்டாக, செவ்வாய்க் கிரகத்தில் அறுவகை உயிர்கள் இருக்கின்றன என்று அமையும் வாக்கியத்தைக் கருதுவோம். இவ் வாக்கியத்தின் உண்மையை நாம் அறிவதற்கில்லை; உண்மையாக இருக்கலாம்.

உண்மைக்கும் அர்த்தத்திற்குமுள்ள வேறுபாட்டை நாம் நன்கு நினைவிலிருத்திக்கொள்ளவேண்டும்.

**உண்மையாவது ஒன்றியிருத்தல் (Truth is correspondence):** இக் கொள்கை பலராலும் கொள்ளப்பெறும் ஒன்றாகும். எண்ணமும் உலகமும் இயையுமேல் அவ்வியைபு உண்மையின் பாற்படும்; இயைபின்மை பிழையின்பாற்படும் அல்லது உண்மைக்கு மாறான நிலையாகும். நாம் கொள்ளும் கருத்து, புறத்தில் ஒரு பொருள், நிகழ்ச்சி நிலை ஆகியவற்றுள் எந்த ஒன்றினோடும் ஒத்திருக்குமானால் அது உண்மையாகும். நாம் ஒரு கருத்தைக் கொள்கிறோம்; அக் கருத்தில் பல எண்ணங்கள் உண்டு, அவ்வெண்ணங்கட்கு ஒத்த பொருள்கள் அல்லது நிலைகள், நிகழ்ச்சிகள் அறியப்படுகிறபோது உண்மை உணரப்பெறுகின்றது. மெய்ப்பொருளியலாருள் பலர் இவ்வியைபுக் கொள்கையினைத் தழுவுகின்றனர்; பொதுவாக மக்கள் கொள்ளும் கருத்துமாகும். கருத்தும் நிகழ்ச்சியும் இயையுமேல் அது உண்மையின்பாற்படும். ஒத்திருத்தல் அல்லது இயைபு என்றால் என்ன? எண்ணங்களும், பொருள்களும், கருத்துகளும் அல்லது நிகழ்ச்சிகளும் இயைகின்றன என்றால் என்ன பொருள்?

இவ்வறையில் மேசை இருக்கும் என்று எண்ணுகின்றேன். அறையினுள் நுழைந்து மேசையினைக் காண்கிறேன். கருத்தும் காட்சியும் இயைகின்றன. உண்மை புலனாகிறது. இவ்வறையினுள் ஒரு யானை இருக்கும் என்று கருதுகின்றேன். அறையினுள் நுழைகின்றேன். யானை இல்லை; கருத்தும் காட்சியும் முரண்படுகின்றன. இவ்விரு எடுத்துக்காட்டுகளும் புறவுலகைப்பற்றிய பொருள்களைப்பற்றியன. இக் கருத்து உள்ளத்து நிகழ்ச்சிகட்கும் ஒவ்வும்.

நாம் ஒப்பிட்டுப் பார்க்கும்போது எவ்வெவற்றை ஒப்பிடுகின்றோம் என்பதனை அறியவேண்டும். ஒருபுறம் கொள்கை அல்லது புறநிகழ்ச்சி அல்லது நிலை. நிகழ்ச்சி அல்லது நிலையினை நாம் நேராக அறிவோமேயானால் ஒப்பிடுவதேன்? உண்மையைத்தான் நாம் நேராக அறிவதாகக் கொள்ளவேண்டும். புறவுலகை நாம் நேரில் அறியாவிட்டால் எப்படி, எங்ஙனம் ஒப்பிடுவது? இந்த மறுப்பினை நன்றாக நாம் உணர்வதற்கு அடிப்படையில் புறவுலகை நாம் புலன்களின் வாயிலாக அமையும் பதிவுகளின் வாயிலாகவே அறிகிறோம் என்பதை மறத்தல் ஆகாது.

ஒப்பிடுதலையும் இயைபு காணுதலையும் நன்றாக ஆராய்கிற போது, எண்ணங்களே மேலும்மேலும் ஒரு கொள்கையின் உண்மையினை மற்றொரு கொள்கையின் வாயிலாகவும், அக் கொள்கையினைப் பிறிதொன்றின் வாயிலாகவும் அறிய முயல் கின்றோம் என்பது தெரிகிறது. எல்லையில்லாமல் இந் நிலை ஒன்றை ஒன்று தழுவியே செல்லும். ' அநவஸ்தா தோஷம் ' என்று இதைக் கூறுவர்.

எந்த இயைபு அல்லது ஒப்புமை எங்ஙனம் கருதப்பெறுகிறது? நமது கருத்து அல்லது கொள்கை புறவுலக நிலைகளின் பிரதி பலிப்பா? நெருப்பைப்பற்றி நாம் சில கருத்துகளைக் கொண்டுள்ளோம். நெருப்பைக் காண்கிறோம். கருத்தும் காட்சியும் ஒத்துள்ளன. ஒரு செய்யுளைப் படிக்கின்றோம். அச் செய்யுள் அழகுடையதென்று கருதுகின்றோம். நமது கருத்தில் அழகுண்டு. செய்யுளில் அழகுண்டா? நாம் உணரும் நிலையில் அமையுமா? கொள்கையில் அல்லது கருத்தில் உள்ள அழகு புறத்தில் காணக் கிடக்கின்றதா? பிளேட்டோ என்கின்ற கிரேக்க தத்துவஞானி சாத்தனைவிடச் சிறந்தவர் என்று கருதுகின்றோம். இச் சிறப்பு எதனுள் அடங்கும்? சிறப்பு, கருத்தில் அமைகின்றது; காட்சியில் புறநிலையில் அமைகின்றதா?

**கருத்தியைபுக் கொள்கை** (Truth is coherence) : நாம் மேலே கண்ட மறுப்புகளின் காரணமாக மற்றொரு கொள்கை வளர்ச்சி பெறலாயிற்று. இக் கொள்கையின்படி கருத்தும் காட்சியும், நினைப்பும் நிலையும் இயைவதில், ஒத்திருப்பதில் உண்மை அடங்க வில்லை. ஒரு கருத்து உண்மையெனக் கொள்வதற்குக் காரணம், அக் கருத்து அதையொத்த பிற கருத்துகளோடு இயை வதனால் ஆகும். ஒரு கருத்தை நாம் தெளிகின்றோம் என்றால், அக் கருத்து பிற கருத்துகளோடு இயைகின்றது என்று பொருள். இவ்வியைபு கருத்தியைபு ஆகும். கருத்துகள் முரணின்றி அமைகின்றன. எண்ணங்கள் ஒன்றோடொன்று முரண்படாது அமையுமேல் உண்மையாகும். நாம் இன்று பெற்றுள்ள அறிவெல்லாம் இவ்வடிப்படையில் அமைவதாகக் கொள்வதற் கில்லை. உலகம் தட்டை வடிவமானது என்று கருதியிருந்தோம்; பிறகு உருண்டை வடிவமானது என்று தெளிந்தோம். பின்னைய கருத்து முன்னைய கருத்தோடு முரணுகின்றது. ஆதலால், நாம் கொண்டுள்ள கருத்துகளனைத்தும் முரணின்றி அமைந்துள்ள தாகக் கொள்வதற்கில்லை. ஆனால், மாறுபடும் இரு கருத்துகள் உண்மையைப் புலப்படுத்தா. நமது பூமி அண்டத்திற்கு

நடுவணதா ? சூரியன் நடுவணதா ? நெடுங்காலத்திற்குமுன் பூமி நடுவணது (geocentric) என்று கருதினர். பின்னர் பகலவன் நடுவிலே அமைய, ஏனைய கோள்கள் சுற்றி வருவதாகக் (heliocentric) கொண்டோம். முன்னையதை டாலிமிக் தியரி (Ptolemaic theory) என்றார்கள். இக் கொள்கை பின்னர் கோப்பர் நிக்கஸ் (Copernicus) என்பவரால் தகர்க்கப்பட்டது. இதை கோப்பர் நிக்கஸ் புரட்சி (Copernican revolution) என்று ஆங்கிலத்தில் கூறுவது வழக்கம்.

ஐரோப்பியத் தத்துவஞானிகளுள் சிந்தனையின் அடிப்படையாகத் தத்துவக் கொள்கைகள் அமையவேண்டும் என்று வற்புறுத்தியவர்கள் சிலர். டேக்கார்ட், ஸ்பினோஸா, லைப்னிட்ஸ் ஆகியோர் அவர்களுள் தலைசிறந்தவராவர். அவர்கள், 'உண்மையை'ப்பற்றிய கருத்தைத் தெரிவித்துள்ளனர். ஒரு கொள்கை உண்மை எனக் கருதப்படுவதற்குக் காரணம், அது புறவுலக நிகழ்ச்சிகளோடோ நிலைகளோடோ ஒத்திருப்பதனால் மட்டும் உண்மையாகிவிடாது. அக் கொள்கை நம்முடைய மற்றைய கருத்துகளோடு, கொள்கைகளோடு பொருந்துவதனால் உண்மையாகின்றது. எந்த ஒரு கருத்தும் உண்மையாவதற்கு இன்றியமையாததாக வேண்டுவது கருத்தியைபாகும். இதனை ஆங்கிலத்தில் 'consistency' என்பர். கருத்துகள் ஒன்றோடொன்று இயைய முரணாது இருத்தல்வேண்டும். புதிய கருத்துகளை நாம் ஏற்கின்றபோது, அவ்வேற்பு மற்றைய கருத்துகளோடு அவை பொருந்திச் செல்கின்ற நிலையைப் (coherence) பொறுத்திருக்கின்றது. நாம் புதிய கருத்துகளை ஏற்கும்போது சில பழைய கருத்துகளைத் தவிர்க்கின்றோம்; மாற்றியமைக்கின்றோம். விஞ்ஞானக் கருத்துகளின் வளர்ச்சியைப் பார்த்தால் இவ் வுண்மை நன்கு புலனாகும். 'பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல கால வகையினானே' என்பது நன்னூல் சூத்திரம். பழையன கழிதற்குக் காரணம் யாது? புதிய கருத்துகளோடு பழைய கருத்துகள் ஒவ்வாமையே. ஒவ்வுதல், இயைதல், பொருந்துதல் ஆகிய சொற்களை இக் கொள்கையினர் தம் கொள்கையினை விளக்குவதற்குப் பயன்படுத்துவர். புறநிலைகள் அல்லது நிகழ்ச்சிகள் அல்லது பொருள்கள் இவற்றோடு ஒத்திருக்கின்ற நிலையில் உண்மையாகின்றன என்று ஒரு கொள்கையினர் கூறுவனத மேலே கண்டோம். இப் புற ஒற்றுமையினை நாம் முழுமையும் நீக்குவதற்கில்லை. கருத்தியைபு ஒன்று கொண்டே நாம் உண்மையினைத் துணிந்துவிட இயலாது. கருத்துகள் ஒன்றோடொன்று இயைந்து அளவை நெறி பிறழாது அமையலாம்; ஆனால், உண்மைக்கு மாறாகவும் அமையக்கூடும். அளவை இயலில் ஒரு பகுதி இக்

கருத்தினை வலியுறுத்துகின்றது. நாம் சில கருத்துகளை முறையாக வருவித்துச் செல்லலாம். அமைப்பு முறையில் அளவை நெறிப் பிறழ்ச்சி இராது. ஆனால், பொருளியைபு உறுதிப்படாது.

இருவர் ஒருவரை ஒருவர் விரும்புவதாக வைத்துக் கொள்வோம். கிருஷ்ணன் இராமனை நேசிக்கின்றான். இங்கு நட்பு இருவரிடை அமைந்துள்ளது. இவ் வாக்கியத்தின் உண்மையினை உணர, இவ் வாக்கியத்திற்கயலாக இருவரை உணரவேண்டும். ஆகவே, கருத்துகளைக்கொண்டே உண்மையைத் துணிதற்கில்லை. வேறு வகையில் இக் கருத்தைச் சொன்னால், கருத்துகளின் உண்மையை உணர்வதற்குக் கருத்துகள் ஒன்றை ஒன்று தழுவிச் செல்வதை உணரவேண்டும். ஒரு கருத்து தன் உண்மையினை நிறுவுவதற்கு மற்றொரு கருத்தையும், மற்றொன்று பிறிதொன்றையும் சார்ந்து நிற்கின்ற நிலைமை வருகின்றது. நாம் புதிய கருத்தை ஏற்பதற்குக் காரணம், நம்முடைய ஏனைய கருத்துகளோடு பொருந்துவது மட்டுமன்று. பொருந்துவது என்றால் என்ன? ஏனைய கருத்துகட்கு விளக்கம் தருகின்ற நிலையாகும். ஆனால், விஞ்ஞானத்தில் மேலும் தெளிய இருக்கின்ற கருத்துகளை விளக்கவல்லதாகவும் இது அமைதல்வேண்டும்.

**செயல்நிலைக் கொள்கை அல்லது பயன்வழிக் கொள்கை (Pragmatism) :** பொருந்துதல், இயைதல் ஆகிய இவ்விரு கொள்கைகளினால் நாம் உண்மையினை உறுதியாக உணர்வதற்கில்லை. ஆதலால், மற்றொரு கருத்து எழுந்தது. பயனைக்கொண்டு உண்மையைத் தெளியலாம் என்பதுதான் மற்றொரு கொள்கை. அக் கொள்கையை இரு சாரார் கருத்துகள் கொண்டு அறியலாம். அக் கொள்கையின் ஒருவகையினை அமெரிக்க நாட்டு உள்ளத்து இயல் அறிஞர் ஜேம்ஸ் (James) என்பார் விரிவாக விளக்கியுள்ளார். அக் கருத்தையே கொண்டவர் ஷில்லர் (Schiller) என்கின்ற ஆங்கிலப் பெரியாருமாவர் (1864-1937). மற்றொரு கருத்தினை பியர்ஸ் (Peirce) என்பாரும் 'டியூயி' (Dewey) என்பாரும் விளக்கியுள்ளனர். ஒரு கொள்கையினை நாம் உண்மையெனக் கொள்ளும்போது அதனை நாம் மதிப்பிடுகின்றோம். சிலவற்றை நாம் நல்லவை எனவும் சிலவற்றைத் தீயவை எனவும் கொள்கின்றோம்; சிலவற்றை அழகுடையவை என்றும் சிலவற்றை அழகற்றவை என்றும் கொள்கின்றோம். பொருள்களை மதிப்பிடுவதுபோல கருத்துகளையும் மதிப்பிடுகின்றோம். உண்மையும் ஒருவகைப் பண்பேயாகும். உண்மை, பிழை ஆகிய சொற்களின் பொருள் யாது? ஷில்லர் என்பார் உண்மை என்பதற்குப் பயனுடையது என்றும் பிழையுடையது என்பதற்குப் பயனற்றது என்றும்

குறிக்கின்றார். ஒருவன் ஒரு கருத்தினை உண்மை எனக் குறிக்கின்றபோது, அவன் கருத்தில் பயனையே நன்கு நினைவில் வைத்துப் பேசுகின்றான். சில சமயங்களில் ஒரு கருத்தை உண்மையெனக் கொள்வான்; பின்னர் அக் கருத்தைத் தவிர்க்கலாம். தவிர்த்தற்குக் காரணம் பயனின்மை. பயன் நோக்கி உண்மை காணுதலும், பயனின்மை நோக்கித் தவிர்த்தலும் உள்ளத்தின் நிலையாகும். ஆகவே, மதிப்பிடுதல் உள்ளத்தைப் பொறுத்ததாகும். மதிப்பீடு ஒருவன் வளர்கின்ற சமுதாயத்தைப் பொறுத்ததாகும். மற்றவரோடு கருத்துறவுகொண்டு பழகிச் சிலவற்றைக் கொள்ளுகின்றான்; சிலவற்றை விடுக்கின்றான். மனிதன் சமுதாயத்தில் பிறந்த நாள்தொட்டு இறக்கும்வரை பலரோடு உறவு கொள்ளுகின்றான்; பலரைச் சார்ந்து வாழ்கின்றான். அவனுடைய வாழ்வு மற்றையவரோடு பின்னிப் பிணைந்து நிற்கின்றது. அவன் விடுபடுவதற்கில்லை. ஆகவே, உண்மையும் இவனுடைய சமுதாய வாழ்வினின்று முகிழ்க்கிறது. தனி ஒருவன் கொள்ளும் கருத்துகள் சமுதாயத்தில் ஏற்கப்பெறுவிட்டால், அவன் அதனை மாற்றியமைத்துக்கொள்ளுகின்றான். சில கருத்துகளைக் கருத்தளவில் கொள்ளுதலில் உள்ள சிறப்பைவிடத் தொடர்ந்து அவன் அவற்றைச் செயலளவில் கொள்ளுதலில் சிறப்பு அமைகின்றது. ஒரு கொள்கை கொள்ளப்பெறும்போது ஒரு சிலரால் கொள்ளப்பெறலாம். பலரும் அக் கொள்கையினைத் தழுவாவிட்டால் அக் கொள்கைக்கு வாழ்வில்லை. மற்றவர்கள் தழுவுவதைவிட இக் கொள்கையினைக் கொண்டவன் தொடர்ந்து வளர்க்கவேண்டும். இக் கொள்கையினர் கூறும் உண்மைபற்றிய விளக்கத்தை (theory of truth) 'உள்பொருள்பற்றிய கொள்கைகள்' என்ற தலைப்பில் விரிவாகக் காணலாம். இவ்வாறு மேலைநாட்டு நால்வகைத்தாய கொள்கைகள் விளக்கம் பெறுகின்றன.

## 2. இந்திய நாட்டுக் கருத்து வகைகள்

'உண்மை'யின் (truh) தன்மை யாது? 'உண்மை' பிழைபடும் அறிவினின்று எவ்வாறு வேறுபடுகிறது? இக் கேள்விகளே அறிவாராய்ச்சி இயலுள் முக்கியமான கேள்விகளாகும். இக் கேள்விகட்கு விடை காணும் முன்னர் சில தொடர்பான விஷயங்களைக் கருதுதல் வேண்டும். முதலில் 'காட்சி'யைப் பகுத்துப் பார்ப்போம். ஒருவன் தனது அறையில் உள்ள மேசையைப் பார்க்கிறான். இக் காட்சியில் மூன்று கூறுகள் உள்ளன என்று பெரும்பாலோர் கருதுவர். அவை (1) காண்பான், (2) காணப்பெறும் பொருள், அதாவது மேசை, (3) புலக்காட்சியில்

அமைவனவாகிய நிறம், வடிவு போன்றவையாகும். நிறம் போன்றவற்றை மேசையினோடு தொடர்புபடுத்தி அறிவதோடு அவ்வியல்புகள் மேசையின் உண்மைக் குணங்கள் என்று கருதப் பெறுகின்றன. மேற்குறித்த நிறம், வடிவு போன்றவை, மேசையை ஒருவாறு புலப்படுத்துகின்றன. மேசையின் நிறம், வடிவு ஆகிய இரு இயல்புகளைக் கருதும்போது, அப் பொருளுக்கு வன்மை, எடை முதலியன உளவாதல் வேண்டும் என்று நினைக்கிறோம். ஒரு பொருளை நாம் அறியுமிடத்துப் புலனாகும் புலப்பொருள்களாகிய நிறம், வடிவு முதலியனவற்றை அப் பொருளிலிருந்து பிரித்து அறிவது இயலாது. ஒரு நூலைப் படிக்கும் போது நமது கருத்தை ஈர்ப்பது, அந் நூலினுள் இடம்பெறும் கருத்தே ஆகும். கருத்திலே நமது கவனத்தைச் செலுத்தும்போது, கருத்தைத் தாங்கி இருக்கும் அச்சு எழுத்துகளை நாம் ஊன்றி அறிவதில்லை. பொதுவாகக் காட்சி நிகழும் இடத்து, காணுகின்றவன் நேராக அறிவதாக நினைக்கும் பொருள்பற்றிய அறிவும், அவ்வறிவு உடனாக விளங்குதலும் அப் பொருளின் இயல்புகளில் ஒருசில புலக்காட்சியில் விளங்குதலால் ஆகும். இங்கே காண்பானின் தன்மை, ஆற்றல் முதலியனவற்றைச் சிந்தித்தற்கு இடமில்லை. காண்பானின்றிக் காட்சி இல்லை. இந்த அளவிலே காண்பானைப்பற்றிக் கருதுகிறோம்.

புலப்பண்புகள் (sensa) பொருள்களின் உண்மைப் பண்புகள் என்பதை மேலே குறித்தோம். இவ் வுண்மையைச் சிந்திப்போம். இவ் வுண்மை அறிவின் எல்லா வகைகட்கும் பொருந்துவதாகாது. ஆனால், திரிபுக் காட்சி, பிழைபடும் காட்சி ஆகியனவற்றிற்கு மேற்குறித்த விளக்கம் பொருந்தாது. புறப்பொருள்களைக் குறியாத வகையில் திரிபுக் காட்சியை விளக்குதல் இயலும் என்று இந்தியாவில் சில சிந்தனையாளர்கள் கருதுகின்றனர். வெண்மையான பளிங்கு, சிவப்பு நிற மலரின் அண்மையில் உள்ள காரணத்தால் சிவப்பு நிறமுடையதோ என்று எண்ணவேண்டியுள்ளது. காமாலை உள்ளவனது காட்சியில் சிப்பி, மஞ்சள் நிறமுடையது எனத் தோன்றுகிறது. இந்த உதாரணத்தைச் சிறிது மாற்றி அறிவோம். சிப்பி வெண்மை நிறமுடையது. இதனை மஞ்சள் நிறமுடைய கண்ணாடியின் வாயிலாகக் காணுவதாக வைத்துக்கொள்வோம். இக் கண்ணாடியை நாம் காணாது விட்டு விடுகிறோம். இங்கே சிப்பியின் காட்சி உள்ளது. சிப்பியின் உண்மையான வெண்மை நிறம் தோன்றவில்லை. மற்றொன்று கண்ணாடியின் மஞ்சள் நிறம். புலக்காட்சியில் தோன்றுகிற இவ்விரு காட்சிகளும் ஒவ்வொன்றையொன்று தொடர்ந்து அமைகின்றன. விரைந்த தொடர்ச்சியின் காரணத்தால், இவை வெவ்வேறு என

உணர்த்தத் தவறுகிறோம். தவற்றை உணர்ந்த நிலையில், சிப்பியின் வெண்மையோ, கண்ணாடியின் மஞ்சள் நிறமோ பொய்யாவதில்லை. தொடக்கத்தில் இவை தனித்தனியே காணப்பெறாத காரணத்தால் பிழைபடும் காட்சி நேருகிறது. பிழையுணர்வு மேலும் அறிவில் தெளிவுபெறுதற்குத் துணையாகும். எந் நிலையிலும் முதலில் அறிந்தது மறுக்கப்பெறுவதில்லை. பிழை நிறைவுபெறாத அறிவு ஆகும். இவ்வறிவிற்குத் துணையான பிற செய்திகள் அறியப் பெறல் வேண்டும். காட்சியில் விளங்கும் கூறுகளுள் ஒன்றையோ சிலவற்றையோ காணாது ஒழியலாம்; ஆனால், பிறழ உணர்வதில்லை. பிழைபடும் அறிவுகள் யாவும் காணாது ஒழிந்தனவாகும் (errors of omission) ; அல்லது காணப்பெறாது தவறியன ஆகும். இக் கருத்து இந்தியத் தத்துவத்துள் ஒரு முக்கியமான விளக்கமாகும்.

அறிவில் எந்த அம்சத்தையும் பிறிதொன்றோடு வைத்து, சரி பார்க்க வேண்டுவதில்லை. ஏனெனில், அறியப்பெறுவனவற்றுள் எக் கூறும் பிழையுணர்வு நேர்ந்த பிறகு மறுக்கப்பெறுவதில்லை. தனியொரு காட்சியில் உள்பொருளோடு (reality) இவ்வறிவு இயைகிறதா என்ற கேள்வி பொருந்தாது. எனினும், உண்மையைப் பிழையினின்று பிரித்துப் பேசுகிறோம். பிழையென்பது குறைவு படும் அறிவாகும்; நிறைவுறாத அறிவாகும் (partial knowledge). மனித அறிவு நிறைவற்றது என்பது பொது உண்மை; எப்போதும் மனித அறிவினிடத்துக் குறையிருக்கும் ஆதலால், பிழையை நிறைவுறாத அறிவெனக் கூறுவதை விடுத்து வேறு விளக்கம் காண முயலுவோம். ஆனால், இவ்விளக்கம் நேராகப் பிழையை விளக்காது. சிறிது மறைமுகமாகவே விளக்கும். மனித அறிவு அனைத்தும் நிறைவுறாதது எனினும், பிழையானது; உண்மையை நோக்க நிறைவு குறைந்தது ஆகும். மேலும், ஒப்புநோக்குகின்ற நிலையில் உண்மையறிவை நோக்க, பிழைபடும் அறிவு நிறைவு குறைந்ததாகும். இவ்வாறு நிறைவு குறைந்து விளங்குவதைப் புறநிலையில் விளங்கும் அளவுகோல்கொண்டு விளக்குவோம். இவ் அளவு கோல் பயன் நோக்கி அமைவதாகும் (pragmatic). எல்லா அறிவும் செயல்நிலைகட்குத் துணைபுரிவனவாகும். தனி~~யொருத்த~~ அறிவு எந்த அளவிற்கு வெற்றிக்கோ தோல்விக்கோ காரணமாக விளங்குகிறதோ, அந்த அளவிற்கு அறிவு உண்மையுடையதாகவோ பிழையுடையதாகவோ கருதப்பெறும். அறிவு, பயன்படுவது; செயற்படுவது, எவ்வறிவு பயன்படாதோ, செயற்படாதோ, அவ்வறிவு பிழையுடையதாகும். இவ்வாறு அறிவினது நிலையைப் பயன்நோக்கித் தெளிதல் இந்தியத் தத்துவத்தில் ஒரு முக்கியக் கருத்தாகும். அறிவாராய்ச்சி இயலுள் ஓர் உண்மையை அறிய வேண்டும். பரமான உண்மை (absolute truth) நம்மால் அடைய

இயலாததாகும். ஏனெனில், அத்தகைய உண்மை இல்லை. இந்தப் பொருந்தாத காரணம்கொண்டு அறிவினைப் பிழையுடையது எனக் கொள்ளுதல் சரியன்று. இக் கருத்து ஏற்றற்குரிய எளிமை வாய்ந்தது. மேலும், இக் கருத்து முரண்பட அமையாதது ஆகும். இது 'காட்சிப் பொருள் உண்மைவாதத்தின்' நல்ல விளக்க மாகும். புறப்பொருள்கள் அறியுமறிவிற்கு அயலான தனிநிலை யுடையன என்றும், நேராக அப் பொருள்கள் மனத்தினால் அறியக் கூடியன என்றும் இக் கருத்துக் கூறுகிறது; பிழையையே மறுத்து விடுகிறது.

### நியாய-வைசேடிக தரிசனம்

இந்தியாவில் உள்ளத்தியல், மெய்ப்பொருளியலினின்று பிரிக்க வொண்ணாதது. ஒவ்வொரு தரிசனமும், அறிவு பெறுவதைக் குறித்துத் தனித்தனியே கருதியுள்ளதை இந்தியத் தத்துவ சாத் திரத்தில் காணலாம். நையாயிகர், ஆன்மா நிலைத்தது என்று கொண்டு, உணர்வை (consciousness) அவ்வான்மாவின் சிறந்த குணங்களுள் விசேஷ குணமாகக் கொண்டனர். இவ்வான்மா விற்குப் பிற குணங்கள் உண்டு. அறிவை நையாயிகர் 'ஞானம்' என்றனர். ஞானம் நேராகவும் ஒன்றன்மூலமாகவும் அமைய லாம். முன்னதைப் பிரத்யட்சம் என்றும், பின்னதைப் பரோக்ஷம் என்றும் கூறுவர். அனுமானத்தின்மூலமோ அல்லது சப்தப் பிரமாணத்தின்மூலமோ அறிவு பரோக்ஷமாகும். பிரத்யட்ச அறிவு, வேறு எவ்வறிவையும் சாராது விளங்குவது. மலையிடத்துப் புகையுண்டு என்று அறிவதற்குப் புகைக்கும் நெருப்பிற்கும் இடையே உள்ள மாறாத தொடர்பு தெரிய வேண்டும். ஒரு மேசையைக் காண்பதற்கு வேறு நினைவுகள் தேவையில்லை. பிரத்யட்சத்தில் எவ்வாறு பிழைபடும் அறிவு ஏற்படுகிறது என்பதைக் காண்போம்.

பிரத்யட்சத்தால் ஏற்படும் அறிவை நையாயிகர் கருத்துப்படி இருவகையாகப் பிரிக்கலாம். தீர்ப்பு வடிவத்தில் (judgment) பிரத்யட்ச அறிவை அமைக்கலாம். இத் தீர்ப்பில் எழுவாய், பயனிலை என இரு கூறுகள் உண்டு. இங்கு எழுவாய் என்பது கருதப் பெறுவதைக் குறிப்பதாகும்; பயனிலை என்பது கருதப்பெறுவது குறித்து யாது கூறுகிறோமோ அதைக் குறிப்பதாகும். நாம் ஒரு குதிரையைக் காணுகிறோம். குதிரைக் காட்சி தனி நிலையுடையது என்று கருதுகிறோம். குதிரை என்பது குதிரைப் பண்புகளையுடைய ஒரு விலங்கு ஆகும். பிரத்யட்சத்தை நாம் நன்கு கூர்ந்து அறியும் போது, அவ்வறிவு பல கூறுகளை உடையது என்பதைத் தெரிவோம்.

நையாயிகம் அனைத்துப் பொருள்களும் அணுக்களால் ஆயவை என்பதை வலியுறுத்துவதாகும். ஒரு பசுவை, வெண்மை நிறப் பசு என்று அறிகிறோம். பசுவையும் வெண்மை நிறத்தையும் தனித் தனியே முன்னர் அறிந்த நிலையில் குறித்த இப் பசுவின் வெண்மை புலனாகிறது. ஆதலால், 'சவிகற்பக் காட்சி', 'நிர்விகற்பக் காட்சி'யின் அடிப்படையில் எழுவதாகும். 'தனித்தனியே காண்பனவற்றை' ஒருங்குசேர்த்து அறிதல் 'பிரத்யட்சமாகும்'; திரண்ட காட்சியில் தனிக் கூறுகளைப் பிரித்தறிதல் அன்று. இங்கு நையாயிகர் கூறுவதை அறிதல் வேண்டும். 'சவிகற்பக் காட்சி'யே காட்சியாகும். காட்சிக்குரிய கூறுகள் கொண்ட நிர்விகற்பக் காட்சி, சவிகற்பக் காட்சிக்கு அடிப்படையாதல் வேண்டும் என்று ஊகிக்கிறோம்.

சவிகற்பக் காட்சியை அது தோன்றும்பொழுதே நாம் அறிவதில்லை. இவ்வறிவு பின்னரே எழுகிறது (after-knowledge). முதலில் பொருளை அறிகிறோம். பின்னர் சில சமயங்களில் எவ்வாறு நமது ஆன்மா அக் காட்சியைக் காணும் அறிவை இயல்பாகக் கொண்டுள்ளது என்பதை அறிகிறோம். இவ்வாறு அறிவதை 'மானசப் பிரத்யட்சம்' என்பர். இவ்வாறு பிரத்யட்சம் முதலில் பொருளை நோக்கியதாக அமைவதும், பின்னர் அகக் காட்சியில் அப் பொருளறிவு புலனாவதாக அமைவதும் நிர்விகற்பக் காட்சியில் விளங்கமாட்டா.

மேலே குறித்த பிரத்யட்ச அறிவு 'லௌகிக அறிவு' என்றும் வழங்கும். இதுவன்றி 'அலௌகிக அறிவெ'ன்பதையும் நையாயிகர் குறிக்கின்றனர். இதனைக் கடந்த காட்சி (transcendental) எனவும் கூறலாம். ஆனால், உள்ளார்ந்த அல்லது உள்ளமைந்த பிரத்யட்சம் (implicit) எனக் கூறுதல் பொருந்தும். ஓர் உதாரணத்தைக் கருதுவோம். கடைவீதி வழி செல்கிறோம். ஒரு ரோஜா மலரைப் பூக்கடையில் பார்க்கிறோம். அக் கடை சிறிது தொலைவில் உள்ளது. அந்த ரோஜாவின் செம்மை நிறம், வடிவம் போன்ற குணங்கள் நேராக அறியப்பெறுகின்றன. அம் மலரின் மணமும் நினைவில் எழலாம். மலர் தொலைவில் உள்ள காரணத்தால், மண நுகர்வு, சாதாரணமாக நேரில் முகரும்போது எழுவதுபோல எழுவதன்று. ஆதலால், நினைவில் எழுகிற மணம் 'அலௌகிக பிரத்யட்சம்' எனப்பெறும். பிரத்யட்ச அறிவில் இரு கூறுகள் உண்டு. ஒன்று நேராக அறிவது; மற்றொன்று நினைவில் எழுகிற கூறுகளால் ஆயது.

### நியாய-வைசேடிக தரிசனங்கள் ஏற்கும் பிரமாணங்களும் 'உண்மை', பொய்ம்மைபற்றிய கொள்கையும்

ஆன்மாவின் குணம் அறிதல் என்று நையாயிகர்கள் கருதுகின்றனர். ஆதலால், அறிவு என்பது பொருள்களைப் புலப்படச் செய்தல் ஆகும். சுருங்கச் சொன்னால், பொருள்களின் புலப்பாடு அறிவு ஆகும். அறிவு, பல்வகைப்படும். 'பிரமா' (prama) என்பது பொருந்தும் அறிவு; 'அப்பிரமா' (aprama) என்பது பொருந்தாத அறிவு. பிரத்யட்சம், அனுமானம், சப்தம், உவமானம் ஆகிய நான்கு வகையான பிரமாணங்கள் 'பிரமா' எனப்படும். ஸ்மிருதி, சம்சயம், விபர்யேயம், தருக்கம் ஆகிய நான்கும், 'அப்பிரமா' ஆகும். 'பிரத்யட்சம்' இந்திரியக் காட்சி ஆகும். 'அனுமானம்' தெரிந்த ஒன்றினின்று தெரியாததைத் தேர்தல் ஆகும். தெரியாத ஒன்று தெரிந்த ஒன்றோடு ஒத்திருத்தலால், அந்த ஒப்புமை காரணமாகப் புதியதாக ஒன்றை அறிதல் 'உவமானம்' ஆகும். ஆன்றோர் உரை 'சப்தப் பிரமாணம்' ஆகும். நினைவினின்று அறிபவை 'ஸ்மிருதி'. ஐயப்படுதல் 'சம்சயம்'. பிழையான அறிவு 'விபர்யேயமாகும்'. தொடர்புடையனவற்றை அல்லது நிகழக்கூடியனவற்றை முற்கோளாக நினைத்து அதுபற்றிக் கருதுதல் 'தருக்கமா'கும். வரையறையற்ற அறிவு, தெளிவற்ற அறிவு, சொப்பனம் ஆகியவை 'அப்பிரமா' ஆகும்.

உண்மையான ஏற்புடைய அறிவு வரையறையான உறுதியான அறிவு ஆகும். பொருளை உள்ளவாறு பிழைபடாத வகையில் உணர்வது உண்மையறிவு ஆகும். ஐயம், பிழைபடும் அறிவு, தருக்கம் ஆகியவை ஏற்புடைய அறிவு ஆகா. இவ்வகை அறிவு உறுதியற்றது, வரையறையற்றது; ஆதலால், பொருளின் உண்மை இயல்பினை உள்ளவாறு உணர்த்தாது. நேராக ஒரு பொருளை அறிதல் என்பது அப் பொருள் எக் காட்சியை வழங்குகிறதோ அவ்வாறே அதனை அறிதல் ஆகும் (presentative cognition). நினைவிலிருந்து எழுகிற காட்சி, பிழைபடும் இயல்பிற்று ஆதலால், நையாயிகர் நினைவில் எழுகிற அறிவை, ஸ்மிருதியை 'அப்பிரமா' என்றனர்.

ஒரு பொருளின் உண்மை இயல்போடு அறிவு பொருந்தி ஒத்து இருக்குமானால், அவ்வறிவு 'உண்மை அறிவு' ஆகும். எவ்வாறு இவ்வறிவின் உண்மையை அறிதல் கூடும்? வெற்றி தருகிற செயல் நிலைகளை ஊக்கும் அறிவு 'உண்மை அறிவு'; இவ்வாறு வெற்றிக்குக் காரணமாகாத அறிவு 'பிழைபடும் அறிவு' ஆகும். ஆதலால், அறிவின் உண்மை அவ்வறிவு உணர்த்தும் புறப்பொருள்களோடு

பொருந்துதல் (correspondence) என்றும், அறிவின் பொய்மை, பிழை என்பன அவ்வறிவு உணர்த்தும் பொருள்களோடு பொருந்தாமை என்றும் கூறலாம். உண்மை அறிவு வெற்றியை விளைக்கும்; பொய்யான, பிழைபடும் அறிவு தோல்வியைத் தோற்றுவிக்கும். அறிவினால் தோன்றுகின்ற செயல்நிலைகளின் வெற்றி, தோல்விகளை அடிப்படையாக வைத்து உண்மை பொய்ம்மைகளை அறிதல் 'பிரவிர்த்தி சம்வாதம்', 'பிரவிர்த்தி விசம்வாதம்' என்று முறையே வழங்கப்பெறும். இவ்வாறு புறநிலைகளின் துணைகொண்டு உண்மை பொய்மைகளை வரையறை செய்தல், 'பரதப் பிரமான்யம்' அல்லது 'அபிரமான்யம்' எனப்படும். புறப்பொருள்களோடு எவ்வாறு பொருந்துகின்றது என்று காண்பதாலும், வெற்றி தோல்வி என்கின்ற புறநிலைகளால் அறிவின் தன்மை அளந்தறியப் படுவதாலும் 'பரதப் பிரமான்யம்' என்றும், 'அபிரமான்யம்' என்றும் கூறப்பெறுகின்றன.

காண்பது நெருப்புதானா என்ற ஐயம் எழுகிறபோது, சுடுகிறதா என்று அறிந்தால் ஐயம் தீரும். இதேபோல, காண்பது நீர்நிலையா என்று ஐயுறும்போது, நீர்வேட்கையைத் தீர்த்தால் நீர்நிலையே என உறுதி பெறலாம். இதனைப் 'பயனுள செயல்நிலை' (fruitful activity) அல்லது 'சம்வாதி பிரவிருத்தி' என்று கூறுவர். சரிபார்த்தல் (verification) இங்கே பயன்நோக்கிய நிலையிலாகும். உண்மையின் வரையறை பயன்நோக்கியது அன்று. உண்மை யென்பது செயற்படுவதன்று; உண்மையோடு பொருந்துவது. அறிவு, அதனதன் அளவிலேயே அமைதல் வேண்டும். அறிவு சாதனமன்று. அவ்வறிவு கொண்டு, வேறு ஒன்றைப் பெறுவது நையாயிகர் கருத்தன்று. உண்மையின் தன்மையை ஒருவாறு கருதி, அவ்வுண்மையைச் சரிபார்த்து அறிதலை வேறு வகையில் கருதுவதால் குழப்பம் நேருகின்றது.

### சாங்கியத்தில் உண்மை, பொய்ம்மைபற்றிய கருத்து

சாங்கியத்தில் அறிவு, புத்தி விருத்திமூலமாகவே அமைகிறது என்பது முக்கிய உண்மையாகும். அறிவு, புத்தியின் விருத்தி யென்று கூறினால், அகநிலைக் கருத்துக் கொள்கை (subjective idealism) ஆகிவிடும். சாங்கியம், புறப்பொருட் கொள்கையை (realism) ஏற்பது; புற உலகுண்மையையும், ஆன்மாக்கள் (selves) பல என்பதையும், அடிப்படை உண்மைகளாக வற்புறுத்துவது. இவ்வுண்மைகளால் சுட்டப்பெறும் பிறிதோர் உண்மையை அறியவேண்டும். அனைத்து அறிவும் புறப் பொருள்களைச் சுட்டுகிறது. புறப்பொருட் கொள்கைக்கு

ஆதரவாக உள்ளது சாங்கியத்தின் ஆன்மீகப் பன்மையாகும். பலருக்குத் தனித்தனியே காணும் அனுபவம் யாவருக்கும் பொதுவாக அமைகின்றதால், புறப்பொருள்களது உண்மை வலியுறுத்தப்பெறும். புத்தி விருத்தி, அறிவானையும் அறி பொருளையும் ஒருங்கே இணைப்பதாகும். புத்திவிருத்தி அறிபொருளை நீக்குவதன்று. இதன் விளைவாகத் தோன்றுவது யாதெனில், 'உண்மை' என்பது புறப்பொருள்களோடு காணும் பொருத்த மாகும் என்ற கருத்தாகும். புத்தி எந் நிலையில் புறப்பொருள்களை உள்ளவாறு உணர்த்துகிறதோ அந்நிலையில் அவ்வறிவு உண்மை யுடையதாகும். பொருத்தமே உண்மையை உணர்த்துவது என்று நையாயிகர் கூறுவர். ஆனால், நையாயிகர்கள் 'விருத்தி'க் கொள்கையை ஏற்பவரல்லர். நையாயிகர் கருத்துப்படி மனம், அறிவை ஏற்கும் வாயில்; மனத்தின்மூலம் அறிவு அமைகிறது என்பதாகும். அறிவு பொருள்களை உள்ளவாறு உணர்த்துகிறது. ஆனால், சாங்கியத்தில் அறிவு புறப்பொருள்களை உள்ளவாறு உணர்த்துகிறது என்று கருதுவதற்கு ஆதாரம் இல்லை. நியாயக் கொள்கையில் அறிவானும், அறியப்பெறுபொருளும் நேராக உறவுகொள்ளுதற்கு இயலும். ஆனால், சாங்கியத்தில் ஒன்றன் வாயிலாகவே உறவு அமைகிறது. இங்கு புத்தி விருத்தியின் மூலமாகவே அறிவானும் அறியப்பெறுபொருளும் உறவுகொள்ள இயலும். இவ்வுறவு புறப்பொருளின் தன்மையைப் பொறுத்தது எனினும், புத்தி விருத்தியையும் சார்ந்தது. நியாயக் கொள்கையில் மனமாக விளங்குவதைப் புத்தியோடு ஒத்தது என்று இங்கே கொள்வோம். மனம் புறப்பொருள்களிலிருந்து தோன்றுவன வற்றைச் செயலற்ற நிலையில் பதிவு செய்வதாகக் கொள்வதற் கில்லை; ஓரளவு தனிநிலையில் செயலுடையது என்றே கொள்ளுதல் வேண்டும். மனமானது அனுபவத்தில் நெடுங்காலமாகப் பெற்று வந்த எண்ணிறந்த பதிவுகளின் பெட்டகமாகும். அனுபவத்திற்கு ஏற்ப ஒவ்வொரு புத்தியும் தனிவகையினதாகும். ஆதலால், பலர் ஒரே பொருளைக் காண்பதானாலும், காண்போர் ஒரே வகையாகக் காண்பதில்லை; வெவ்வேறு வகையில் காண்பர். புறப்பொருளும் புத்தியின் தனிநிலையும் அறிவு தோன்றுவதற்குக் காரணமாக விளங்கும் இரு கூறுகளாகும். பொருள் ஒன்றாயினும், அறியப்பெறும்போது — பலரால் காணப்பெறும்போது, அப் பொருள் பலவாகின்றது. தனி நபர்கள், அவரவர் புத்தியில் உள்ள வேறுபாடுகளால் பொருளை வெவ்வேறு வகையில் காண்கின்றனர். புத்தி, பொருளைக் காணுகின்ற வகையில் விளைக்கின்ற மாற்றங் களால் பிழையான அறிவு நேர்கிறது. புத்தியின் தன்மையும் புறப்பொருளும் ஒருங்கே ஒத்துழைக்கின்ற நிலையில் புறப் பொருளைப்பற்றிய பதிவு முழுமையுடையதாக அமைதல் இல்லை.

காணும் பொருளினிடத்து விளங்கும் இயல்புகளுள் ஒருசிலவற்றை மிகுதியாகவோ குறைவாகவோ வற்புறுத்துவதே புத்தியின் தொழிலாகும். புதியதாக எவ்வியல்பையும் புத்தி காட்சியில் சேர்த்தல் கிடையாது. காட்சியில், புத்தி சில கூறுகளைத் தெரிந்து (selective) எடுக்கிறது. காண்பானின் புத்தியோடு பொருந்துவனவே அவனது காட்சியில் இடம்பெறும். ஒத்தது ஒத்ததையே நாடும். இதனால் நேரும் பிழை பெரிதும் மாறுபடுகிறது. இங்கு நேருகிற பிழை, சில கூறுகள் காணப்பெறாமல் விடுபடுதலால் விளைவதாகும். புத்தி தருகிற காட்சியைப் புறப்பொருள்குறித்து அமையும் பிற கருத்துகளோடும் சேர்த்து அறிதல் வேண்டும். இவ்வாறு அறியும்போதே புறப்பொருளைப்பற்றிய உண்மை அறிவு தோன்றுகிறது. முழுமையான அறிவு நிகழத்தக்கதேயாகும். புத்தி நெடுநாள் நல்ல ஒழுக்க நெறிகளாலும் கட்டுப்பாடுகளாலும் செம்மையடையுமானால், முழுமையான அறிவைத் தரவல்லதாகும். இவ்வாறு முழுமையான அறிவு பெற இயலுமெனினும், அருமையானது ஆதலால், பொதுவாக நாம் காண்பது ஓரளவே உண்மையைத் தருவதாகும்.

நமது அறிவு பொதுவாகவே நிறைவற்றது; குறைவுடையது. வாழ்க்கையில் விளைகின்ற துன்பமெல்லாம் நமது அறிவை முழுமையுடையது என்று எண்ணுவதிலிருந்து எழுவதாகும். ஒரு பொருள் குறித்து இருவர் கருத்து வேறுபடலாம். ஆனால், இவ்விருவரும் ஓரளவில் சரியான கருத்தை உடையவர்களென்று கொள்ளலாம். இவ்விருவரும் வேறுபடுவதற்குக் காரணம் யாதெனில், இவர்கள் தனித்தனியே முழு உண்மையை அறிந்தவர்கள் எனக் கருதுவதாகும். விடுதலையுற்றவனாகிய ஜீவன் முக்தனது அறிவு பிழையின்றி விளங்குவதாகும்.

சாங்கியக் கருத்துப்படி, புத்தியோ புருஷனோ தனி நிலையில் உணர்வுடையதாகாது. புத்தி, இயல்பிலே சடமாகும்; அறிவற்றதாகும். புத்தி, பிரகிருதியிலிருந்து தோன்றுவதால் அறிவற்றதாகும். அனுபவம், சடத்திற்கு எவ்வாறு உரியதாகும்? புருஷன் மாற்றமற்றது. புறவுலகில் நிகழ்வனவற்றால் எந்த அளவினும் புருஷன் மாற்றமுறாதது. பிரகிருதி உலகில் நிகழ்வன புருஷனைப் பாதிக்காது. புத்தி பிரகிருதியின் இயல்புகளை உடையதாதலாலும், புருஷன் மாற்றங் கொள்ளாததாலும், இவ்விரண்டும் உணர்வுடையனவாகா. உணர்வு புத்தியின் தனித்த நிலையிலோ புருஷனின் தனித்த நிலையிலோ விளங்க இயலாது, இவ்விரண்டும் ஒன்றித் தொழிற்படும்போதே உணர்வு தோன்றுவதாகும். இவ்விரண்டும் ஒன்றித்துத் தொழிற்படுவதாகக்

கொண்டாலன்றி, அனுபவம் அமையாது என்பதைச் சாங்கியர் காணத் தவறுகிறார்கள். பிழையையும் எதிர்மறைமுகமாகவே கருதுகிறோம். புருஷனைப் பிரகிருதியினின்று பிரித்து அறியாது ஒன்றென மயங்குவதால் பிழை நேருகிறது. அனுபவத்தின் முன்னாக நிகழ்வது மேற்குறித்த மயக்கமாகும். இதனை 'அவிவேகம்' என்பர்; இது பகுத்துக் காணாது இருப்பதாகும் (non-discrimination).

**பூர்வ மீமாம்சையில் உண்மை பிழைபற்றிய கருத்து**

மீமாம்சையை 'பூர்வ மீமாம்சை' யென்றும் 'உத்தர மீமாம்சை' யென்றும் பிரித்துப் பேசுவார்கள். 'உத்தர மீமாம்சை' யென்பது வேதாந்தம் ஆகும். இதற்கு முன்னதாக அமைவதை உணர்த்த, ஜெய்மினி வகுத்ததை 'பூர்வ மீமாம்சை' என்று குறித்தனர். பூர்வ மீமாம்சைக் கொள்கை இரு பெருங் கொள்கைகளாக வளர்ந்தது. 'குமாரில பட்டர்' என்பவர் தலைமையேற்று ஒரு கொள்கையை வகுத்தார்; 'பிரபாகரர்' என்பவர் மற்றொரு கொள்கையை வகுத்தவராவர். இவ்விரு கொள்கைகள் பல கருத்துகளில் ஒத்திருந்தாலும், சில கருத்துகளில் மாறுபட்டிருக் கின்றன. இவ்வகையில் குறிக்கத்தக்க மாறுபாடு அறிவாராய்ச்சி யியலில் பிழை நேரும் வகைபற்றிய கருத்தில் எழுகிறது. 'குமாரில பட்டர்' வகுத்ததை 'பட்டர் கொள்கை' என்றும், 'பிரபாகரர்' வகுத்ததை 'பிரபாகரர் கொள்கை' என்றும் குறிப்போம். இவ்விரு கொள்கைகளும் புறவுலக உண்மையை ஏற்பன. உலகில் அடிப்படையான பொருள்கள் பல உள என்று இவ்விரு கொள்கைகளும் கருதுகின்றன. ஆன்மா இவ்வாறு பல பொருள்களைக் காணுகிற வகையில்—தொடர்பு கொள்கின்ற வகையில், அறிவு தோன்றுகிறது எனக் கொள்கின்றன.

பிரபாகரர் பிழை நேரும் வகைகுறித்து வகுத்த கொள்கை இந்தியத் தத்துவத்தில் 'அகியாதி'—'அ-கியாதி' (A-Khyati) என்று வழங்கும்; பட்டர் வகுத்த கொள்கை 'விபரீதக் கியாதி' (Viparita Khyati) என்று வழங்கும்.

கியாதி என்ற சொல் 'அறிவு' என்று பொருள்படும்; அ-கியாதி 'அறிவின்மை' என்று பொருள்படும். பிழை தனித்த நிலையில் நேர்வதன்று; அறிவின் கூறன்று; இரு வேறு ஞானங்களின் கூட்டே ஆகும். 'இப்பியை' வெள்ளியென்று மயங்குகிறோம். 'இது வெள்ளி' என்று கூறுவதில் 'இது' என்று சுட்டப்பெறுவது நம்மால் காணப்பெறுவது. இதேபோல், இப்பியின் சில கூறுகளும்

காணப்பெறுகின்றன. வெள்ளியை இப்பி எவ்வெவ் வகைகளில் ஒத்து விளங்குகின்றதோ, அவ் வொருமைப்பாடுகளே காணப் பெறுகின்றன. இக் கூறுகள் முன்னர் நம்மால் அறியப்பெற்ற தாகிய வெள்ளியின் நினைவை ஏற்படுத்துகின்றன. பிழையெனக் குறிக்கப்பெறுவது இரு வேறு ஞானங்களால் ஆயது. 'பிரத்யட்சமும்', 'நினைவும்', 'ஸ்மிருதியும்' ஒருங்கே பிழை நேர்வதற்குக் காரணமாவன. 'இது' என்று சுட்டப்பெறுவது முதலில் காணப்பெறுவதுபோல பிழையுணர்ந்த பின்னரும் காணப் பெறுகின்றது; ஆனால், நினைவுகூரப்பெறுகிற வெள்ளி பிழை யுணர்ந்த பின்னர் காணப்பெறுமாறில்லை. நினைவில் இருக்கின்ற வெள்ளியைப்பற்றிய அறிவை இது என்று சுட்டப்பெறும் பொருளோடு இணைப்பதால் பிழை ஏற்படுகிறது. பிரபாகரர் 'ஸ்மிருதி'யை எந் நிலையிலும் ஏற்புடையதாகக் கருதுவ தில்லை. பிரத்யட்சமாக அமையும் அறிவு எப்பொழுதும் ஏற்புடையதாகும். இவ்வேற்பும், பொருத்தமானதே; தக்கதே. பிழை எவ்வாறு நேர்கிறது என்ற கேள்வி இங்கு எழுகிறது. இருவேறு ஞானங்கள் உள; இந்த இரு ஞானங்களுக்கும் ஆதாரங்கள் உள. இவ்வாறு வெவ்வேறாக உள்ள ஞானங்களைப் பிரித்து உணராததால் பிழை நேருகிறது. இந்த இரு ஞானங்களும் தனித்தனியே உணரும் பொருள்களும் வெவ் வேறு என்று உணரத் தவறுகிறோம். இத் தவறே 'பிழை'யை உண்டாக்குகிறது.

பிரபாகரர் கருத்துப்படி, பிழையானது நிறைவற்ற அறிவாகும். மற்றோர் எடுத்துக்காட்டைக் கருதுவோம். பளிங்கு ஒன்று சிவப்பு நிறப் பூவின் பக்கத்தில் உள்ளது. இந்தப் பூவின் செம்மை பளிங்கில் படிகிறது. இதனை நாம் பிரித்து உணராமல் பளிங்கு சிவப்பு நிறத்தது என்று பிறழ எண்ணுகிறோம். இங்கும் இரு ஞானங்கள் உள. ஒன்று, பளிங்கை அறியும்போது அப் பளிங்கின் உண்மை நிறத்தை அறியாது விடுகிறோம். மற்றொன்று, பூவின் தனித்த செம்மை நிறமாகும். இவ்விரு ஞானங்களும் தனித்தனியே ஏற்கத்தக்கன. இந்த உதாரணத்தில் ஞானங்கள் இரண்டும் இந்திரியங்களின் வாயிலாகத் தோன்றுகின்றன. இவ்விரு ஞானங்களும் பளிங்கைப்பற்றியும் பூவைப்பற்றியும் முற்றிலும் விளக்காது விடுகின்றன. இங்கே பிழை நேர்வதற்கு அடிப்படை, இவ்விரு பொருள்களும் அடுத்தடுத்து நெருங்கியிருப்பதேயாகும். இவை ஒத்து விளங்குவதால், பிழை நேர்கிறதெனக் கூறுதல் இயலாது. மேலும், இங்கே தனித்தனியே இருவேறு பொருள்கள் உள; ஒரு பொருள் அன்று. காணப்பெற்ற கூறுகள் பொருள் களிடத்துத் தனித்தனியே விளங்குவனவாகும்; இப் பொருள்கள்

ஒத்த கூறுகளல்ல. இவ்விரு ஞானங்களைப் பிரித்து உணராததால் பிழை நேருகிறது. பிழை நேர்வதற்கு அகியாதி இரு காரணங்களைச் சுட்டுகிறது. ஒன்று உடன்பாட்டில் அமைவது; மற்றொன்று எதிர்மறையில் அமைவது. உள்ள பொருள்—சுட்டியுணரப்பெறுவது; முற்றிலும் உணரப்பெறுவது; மற்றொன்று—இப் பொருள்களில் பெறும் அறிவும், தனித்தனியே உணரப் பெறுவதாகும்.

### விபரீதக் கியாதி

'அறிவு' அதற்கு அயலாக அறியப்பெறும் பொருள் ஒன்றைச் சுட்டுவதைப் பட்டர் என்ற மீமாம்சை அறிஞரும் ஏற்கிறார்.

இப்பி வெள்ளியாகத் தோன்றுகிறது. இப்பியைச் சுட்டிப் பேச இயலும்; வெள்ளியைச் சுட்டுதல் இயலாது. சுட்ட இயலாமை காரணமாக வெள்ளி இல்பொருளன்று; மனத்திலே மட்டும் இருப்பதன்று. ஏனெனில், வெள்ளியை முன்னர் அறிந்திருக்கிறோம். அப்போது வெள்ளி சுட்டப்பெற்ற புறப்பொருளாக விளங்குகிறது. பட்டரும் பிழைபடும் அறிவை இரு கூறாக்கிப் பேசுகிறார். ஒன்றைச் சுட்டி அறிதல் கூடும்; மற்றொன்றை நினைவுகூர இயலும். பிழை இன்னது என்று அறிந்தவிடத்தும் பாழ்படாத, மாறாத அறிவு, சுட்டி அறியப்பெறுவது; மற்றொன்றும் இவ்வாறே பாழ்படாத அறிவே ஆகும். ஆனால், வெள்ளி காட்சிக்குரியதாக விளங்கவில்லை. வெள்ளி முன்னர் அறியப்பெறவில்லையேல், இப்பியிடத்து வெள்ளியைக் காணுதல் இயலாது.

'அகியாதி'யின் கருத்துப்படி, பிழையானது தரப்பெற்றது; காணக்கூடியது. நினைவுகூரப்பெறுவதினின்றும் வேறானது என்றும், அவ்விரண்டும் தனித்தனியே விளங்குவன என்றும் அறியத் தவறுவதாகும். ஆனால், இங்கு விபரீதக் கியாதியின்படி இப்பியையும் வெள்ளியையும் ஒருங்கே உள்ளனவாகத் தொகுத்து அறிதலால் பிழை நேர்கிறது என்று அறிதல் வேண்டும். அகியாதியின்படி பிழையானது 'பொருந்தாமையைக் காணத் தவறுதல்' ஆகும். காட்சிக்கு அமைவது இப்பி; நினைவினின்றும் எழுவது வெள்ளி. இவை வேறுவேறு ஆன இரண்டு எனக் கருதாததால் விளைவது பிழை. உள்ளதில் ஒரு கூறைச் சரியாக அறியத் தவறுதலால் பிழை நேர்கிறது. பிழையை அறியும்போது அறியப்பெற்றனவற்றிலிருந்து ஏதும் நீக்கப்பெறுவதில்லை. சரியான அறிவு, அறியப்பெறுவதுகுறித்து மேலும் அறிதலாகும். முன்னர்

அறியப்பெற்றதிலிருந்து ஏதும் நீங்குதல் இல்லை. இங்கே பிழை, காணப்பெறுகின்ற பொருளிற்கு அயலாக வேறு ஒன்றையும் சேர்த்து அறிதலாகும். அகியாதியில், காட்சியில் அமைவன வற்றுள் உள்ளது எது, நினைவினின்று எழுவது எது என்று பிரித்து அறியாமை பிழையாகும். விபரீதக் கியாதியில் உள்ளதற்கு அயலாக, இல்லாத ஒன்றைச் சேர்த்து அறிதலால் அறியாமை நேர்கிறது. முன்னது காணத் தவறுதலாம் (omission); பின்னது உள்ளதற்கு அயலாக இல்லாததையும் சேர்த்துக் காணுதலாகும் (commission).

'சிவப்பு நிறப் பளிங்கு' எனப் பளிங்கை அறியுமிடத்து, அவ்வறிவை ஆக்குவன பளிங்கும் செம்மை நிறமும் ஆகும். இவ்விரண்டும் காட்சியில் அமைவன. உண்மையில் சிவப்பு நிறம் தனித்தும், பளிங்கு தனித்தும் விளங்குவனவாகும். ஆனால், இவ்விரண்டு அறிவையும் சேர்த்து அறியப்பெறுதலால் பிழை நேருகிறது.

'அகியாதி' புறப்பொருள் உண்மையை ஏற்பது; அறிவில் அகநிலைக் கூறு ஏதும் இல்லை என்று கூறுவதாகும். காட்சியில் அமைவதை முற்றிலும் ஒத்ததாக அறிவு அமையாதுபோகலாம். ஆனால், காட்சியைக் கடந்து அறிவு செல்வதில்லை. காட்சியுலக உண்மை வாதத்தை இறுதிவரை வற்புறுத்துவதே இதன் நோக்கம். ஆனால், விபரீதக் கியாதியில், இப்பியும் வெள்ளியும் புறப்பொருள்களே ஆகும். இப்பி வெள்ளியாகத் தோன்றுகின்ற நிலையில் அமையும் அறிவிற்கு ஒத்த புறப்பொருள் இல்லை. ஆனால், வெள்ளி நினைவில்மட்டும் விளங்குவதல்லாது இப்பியை வெள்ளிபோல் தோன்றச் செய்கிறது. பூவின் செம்மை நிறம் பளிங்கினின்றும் நீங்கித் தனித்து விளங்காது, பளிங்கிற்கு உரியதுபோல விளங்குவது பிழைக்குக் காரணமாகும்.

### அத்துவிதம்—உண்மை, பிழைபற்றிய கொள்கை

பரம்பொருள் இருமையற்றது; சடமல்லாதது. வரையறை பெறுகின்ற அறிவு அனைத்தும் பரம உணர்வு. இவ்வுணர்வு மாறுபாடு பெறவல்லது என்ற அடிப்படையை ஏற்பதாகும். இவ்வுறவு கொள்கின்ற மாற்றங்கள்:

(1) அறிபவன் (subject).

(2) அறிகின்ற அறிவு, அந்தக்கரணத்தைப் பொறுத்ததாகும்.

(3) அந்தக்கரணம் பெறுகின்ற மாற்றங்கள் விருத்தி அறிவிற்குக் காரணமாவன.

(4) அறிபொருள் (object), இப் பொருளால் ஏற்படும் அறிவு.

பரம உணர்வு (ultimate consciousness) ஒன்றே ஆகும். எப் பொருளிலும் விரவியுள்ளது; அனைத்தையும் விளக்குவது; அந்தக்கரணத்தையும், அது கொள்கின்ற மாற்றத்தையும், அறிபொருளையும் பிரித்து உணரும் வகையில் அமைப்பது.

இந்திரியங்கள் புறத்து விளங்குவன. இவற்றின் தொழிற்பாடு அகத்து விளங்குவதால், 'அந்தக்கரணம்' எனப் பெயர்பெறுகிறது. இந்திரியங்கள் புற உலகினின்று செய்திகளைப் பெறுவதோடு அவற்றை ஒழுங்குபெறச் செய்வது அந்தக்கரணமாகும். அந்தக்கரணம் இந்திரியமாகாது. இந்திரியமாக விளங்கினுல், தன்னையும் தான் கொள்ளும் மாற்றங்களையும் நேராக அறிய இயலாது. அந்தக்கரணங்கள் பகுதிகள் உடையன; அணுத் தன்மை உடையன அல்ல; அளவற்றன அல்ல; ஒலியை ஊடுருவிச் செல்லவிடும். ஆதலால், பொருள்கள் புலனுகின்றன. அந்தக் கரணம் நிலைக்கண்ணுடி போல்வதன்று; பொருள்களைப் பிரதி பலிக்கச் செய்கின்ற ஆற்றல் அந்தக்கரணத்திற்கு இயல்பில் இல்லை. அது ஆன்மாவோடு தொடர்புடையதாதலால் இவ்வாற்றலைப் பெறுகின்றது. பொருள்களைப் புலப்படுத்துகின்ற மாற்றம் 'விருத்தி' என வழங்கப்பெறும். இந்த விருத்திகள் நால்வகைப்படும். இன்னது என்று வரையறை செய்யவொண்ணுமை (சம்சயம்), வரையறை பெறும் அறிவு (நிச்சயம்), தன்னுணர்வு, நினைவு ஆற்றல் என்பவையே அந் நான்கு வகைகளாகும்.

அந்தக்கரணம் தனது தொழிற்பாட்டிற்கு ஏற்பப் பெயர் பெறும். பொருள் இன்னது என்று வரையறை செய்ய இயலாத நிலையில் உள்ளபோது அந்தக்கரணம், 'மனம்' எனப் பெயர் பெறும்; பொருளின் தன்மை இன்னது என்று வரையறை செய்யும்போது 'புத்தி' எனப் பெயர் பெறும்; தன்னுணர்வு பெறும்போது 'அகங்காரம்' எனப் பெயர்பெறும்; பொருளை ஒன்றிய மனத்துடனும் நினைவாற்றலுடனும் அறியும்போது 'சித்தம்' எனப் பெயர் பெறும். அந்தக்கரணமும் அதன் தொழிற்பாடுகளும் வேறுபடுவன. அந்தக்கரணம் எல்லைக்குட்பட்ட ஆற்றலுடையது ஆதலால், அனைத்தையும் அறிகின்ற திறனுடையதன்று.

ஐயுறும் மனத்தைத் தெளிவுபடுத்தி உணரும் மனத்தினின்று பிரித்து சங்கரர் உணர்த்துகிருர். செயற்படும் நிலையையும்

(சங்கற்பம்), செயலின் நீக்கத்தையும் (விகற்பம்), இந்திரியங்களின் வாயிலாகப் பெறுகின்ற அறிவையும், நினைவாற்றலையும், விருப்பங்களையும், உணர்ச்சிகளையும் மனம் ஒருங்கே உணர்த்தும்; கருதுதல், தீர்ப்பு, சிந்தனை, தன்னுணர்வு ஆகிய மேலான ஆற்றல்களைப் புத்தி உணர்த்தும்.

சங்கரர் பிரத்யட்சம், அனுமானம், சப்தம் ஆகிய மூன்று பிரமாணங்களை ஏற்கிறார்; மற்றையோர் உவமானம், அர்த்தாபத்தி, அபாவம் ஆகியவற்றைச் சேர்த்து எண்ணுகின்றனர். ஸ்மிருதி 'பிரமாவில்' சேர்வதாகும். அறிவின் இயற்கை புதுமை ஆகும். 'பிரத்யட்சம்' ஸ்மிருதியின் வேறாகும். ஸ்மிருதியில் கழிந்த நிகழ்ச்சிகள்தாம் நினைவுகூரப்படுகின்றன. பல்வகையான 'பிரத்யட்சங்கள்' ஏற்கப்பெறுகின்றன. இந்திரியங்கள் வாயிலாகப் பெறுகின்ற ஞானம் 'இந்திரிய ஞான'மாகும்; இந்திரியங்களின் தொழிற்பாடு இல்லாது பெறுகின்ற அறிவு 'இந்திரியா ஜன்யமா'கும்; உதாரணம், விருப்ப உணர்வாகும். 'சவிகற்பக் காட்சி,' 'நிர்விகற்பக் காட்சி' என இருவகைக் காட்சி உணர்த்தப்பெறுகின்றன. வரையறை செய்யப்பெறும் பொருள், வரையறையுறும் குணத்தின் வேறாகும். முன்னது, பொருள்; பின்னது, அதன் குணம்; எடுத்துக்காட்டு, மலரும் மணமும். நிர்விகற்பக் காட்சியில் வரையறையுறும் குணங்கள் யாவும் நீக்கப்பெறுகின்றன.

அத்துவிதம் பிழைபடும் அறிவு குறித்துத் தந்த விளக்கம் 'அநிர்வசனீய கியாதி' என்று பெயர்பெறும். நாம் காணும் புறவுலகு உண்மையுடையதா, அல்லதா? உலகு உள்பொருளா இல்பொருளா? உள்பொருள் எனின், பிரமம்போல் உள்பொருளா? இல்பொருள் எனின், மலடி மகன்போல் இல்பொருளா? உலகு 'பிரமம்'போல் உள்பொருள் ஆகாது. நமது அனுபவத்திற்குரியதாக உலகு அமைவதால், மலடி மகன் போல் இல்பொருளாகாது. ஆனல், உலகின் தன்மை யாது? உலகம் பிரமம் அனைய உள்பொருளும் ஆகாது; மலடி மகன் போல இல்பொருளும் ஆகாது விளங்குகிறது எனின், இதன் உண்மை நிலை யாது? கயிற்றினிடத்து அரவு தோன்றுகிறது. கயிறு உள்பொருள்; அரவு தோன்றுகிறது. புறவொளியும் காட்சியில் தெளிவும் தோன்றுமிடத்து, அரவுக் காட்சி நீங்குகிறது. ஆனல், அரவு முதலில் காணப்பெற்றது; காணப்பெற்றிலதேல், அச்சம் நிகழ்ந்திராது. அச்ச நிகழ்வு அரவின் தோற்றவுண்மையை வலியுறுத்துவதோடு, அச்சம் நிகழ்ந்த அந்த அளவில் உண்மையே என்பதையும் வலியுறுத்தும். இதுபோல உலகமும், நாம் அதனோடு உறவுகொள்ளும் அளவிற்கு உண்மையுடையதே. ஆதலின், உலகு

'வியவகாரிக சத்யம்' என்பர். ஆனால், பிரமத்தின் உண்மையை நோக்க இவ்வுலகு இல்பொருளே ஆகும்; ஆனால், மலடி மகன் போல் இவ்வுலகு என்றும் இல்லதன்று. உலகைப்பற்றிக் கூறும் போது 'மாயை' என்ற சொல் ஆளப்பெறுகிறது. மாயையின் பொருள் யாது? உலகின் உண்மை நிலையினை வரையறை செய்து உள்பொருள் என்றோ, இல்பொருள் என்றோ, உள்ளதும் இல்லதும் இயைந்த ஒன்று என்றோ, இரண்டுமற்றது என்றோ கொள்ள இயலாது ஆதலால், 'சொல்லொணாதது' என்று கூறுவர். இப் பொருளைப் பயக்கும் தொடரே 'அநிர்வசனியம்' ஆகும்.

இப்பியினிடத்து வெள்ளியைக் காண்பது பிழைபடும் காட்சி ஆகும். இவ்விரண்டினுள் இப்பியின் உண்மையையோ வெள்ளியின் உண்மையையோ நாம் வலியுறுத்தல் இயலாது. 'வெள்ளி' உண்மையாயின், பின்னர் நீங்குதல் ஆகாது. இப்பியை இப்பியாகக் காணும்போது வெள்ளி நீங்குகிறது. உள்பொருள் மறைதல் இல்லை ஆதலால், வெள்ளி உள்பொருள் ஆகாது. ஆனால், வெள்ளி இல்பொருளில், முதலில் காட்சியில் அமைந்தது எவ்வாறு? வெள்ளி உள்ளதுமாகும் இல்லதுமாகும் என்று இருவேறு இயல்புகளை ஒருங்கே பொருத்துதல் பிழையாகும். இகலும் இருவேறு இயல்புகள் ஒன்றினிடத்துப் பொருந்துமாறு இல்லை. ஆதலால், வெள்ளியின் நிலை இத்தன்மையது என வரையறை செய்வதற்கு இல்லை. 'அநிர்வசனீயம்' வரையறை செய்ய வொண்ணாதது என்று அத்துவிதிகள் கூறுகிறார்கள்.

### இராமானுஜரின் உண்மை, பிழைபற்றிய கருத்து

இந்தியத் தத்துவ ஆசிரியர்கள் 'அற இயல்' (Ethics) சிக்கல் களையும் உண்மை இயல் (Ontology) சிக்கல்களையும் முக்கியமாகக் கருதினர் என்பது உண்மையே. ஆனால், சிந்தனை வளர்ச்சியில் அறிவாராய்ச்சி இயல் பிரச்சினைகளையும் கருதுவராயினர். இவ் வளர்ச்சியின் விளைவாக நாம் காண்பது யாதெனில், ஒவ்வொரு தரிசனத்திலும் அறிவு அளவை இயலின் சிக்கல் ஆராயப்பெறு வதைப் பார்க்கிறோம். ஆனால், அவை தனித்த நிலையில் கருதப் பெறாது ஏனைய கருத்துகளோடு சேர்த்தே காணப்பெறுகின்றன. ஆதலால், நாம் அறிவு அளவை இயலுக்கு உரியனவற்றைப் பிரித்து உணரவேண்டும். மரணத்திற்குப்பின் அமையும் வாழ்வு பற்றிய சிந்தனையும் வேதத்தின் தலைமை ஏற்பும் அறிவு அளவை இயல் பிரச்சினைகளோடு கலந்து விளங்குவனவற்றுள் குறிக்கத் தக்கன.

இராமானுஜர் அறிவு அளவை இயலில் வழங்கிய உண்மைகளைக் கருதுவோம். அறிவு (knowledge) ஒருபுறம் அறிவானை (subject) உட்படுத்தும்; மறுபுறம் அறியப்பெறும் பொருளை (object) உட்படுத்தும். ஒவ்வொரு தரிசனமும், அறிவின் தோற்றத்தை ஆராயும்போது உள்ளத்தியல் கூறுகளையும் உடன் ஆராய்ந்துள்ளது. ஆனால், இங்கு இராமானுஜர் உணர்த்திய உள்ளத்தியல் உண்மைகளை விடுத்து, அறிவு அளவை இயலின் அறிபொருள்பற்றிய குறிப்புகளையே கருதுவோம். இராமானுஜர் கருத்துப்படி ஆன்மா அல்லது ஜீவன், நிலைபேறுள்ள சடத்தின் சார்பற்ற பொருள் ஆகும். பல ஜீவர்கள் உளர். ஒவ்வொரு ஜீவனும் தனித்தனியே சில சிறப்புகளை உடையதாகும். ஜீவன்கட்குச் செயல்நிலை உண்டு; நுகர்வும் உண்டு. ஞானம் என்றும் ஜீவன்கட்கு உரியதாகும். ஞானத்தின் உண்மையான இயல்பை அறிய இராமானுஜர் அடிப்படையான உள்பொருள்கள் என வகுத்தனவற்றை அறிதல் வேண்டும். இங்கு இவர் கூறும் கருத்துகள் தனித்த சிறப்புடையன. ஆன்மாவும் சடமும் வெவ்வேறானவை; ஒன்று சடம், மற்றொன்று சித்து; ஒன்று சேதனம், மற்றொன்று உயிரற்ற சடமாகும். ஆனால், இராமானுஜர் மேற்குறித்த சடம், சேதனம் தவிரப் பிறிதொன்றைச் சேர்த்துக் கருதுகிறார். இந்த மூன்றாவது பொருள் சடமுமன்று; சேதனமுமன்று. இவ்விரு பொருள்களது இயல்புகளும் இப்பொருளினிடத்து விளங்குகின்றன. ஞானம் என்பது சடமும் அல்லாது, சேதனமும் அல்லாது இவ்விரண்டின் இயல்புகளையும் உடைய தன்மையதாகும். ஞானம் சடத்தைப்போல் அல்லாது மற்றொன்றின் துணையை நாடாது தானே வெளிப்படவும் புறப்பொருள்களைப் புலப்படுத்தவும் வல்லதாகும். சடம், தானே தோன்றாது; துணையின்றி வெளிப்படாது. ஆனால், ஞானம், தன்னிடத்துச் சேதனத்தின் இயல்புகளையும் பெற்று விளங்குவதில் சடத்திற்குள்ள குறைகள் நீங்கி விளங்குகிறது. ஆனால், ஞானம் புலப்படுத்துவன எல்லாம் தனக்காகவன்று; மற்றையோர்க்காகவே. அதாவது, ஞானம் புலப்படுத்தவல்லதே அன்றி, அறிய வல்லதன்று. இந் நிலையில், ஞானம், சேதனத்தின் இயல்பு இல்லாது விளங்குகிறது; சேதனம், அறிவித்தலோடு அறியவும் வல்லது. ஞானம் அறிவிக்குமே அன்றித் தான் அறியவல்லதன்று. ஞானம் ஒளிவிளக்கு போன்றதாகும். விளக்கு, சூழ்ந்துள்ள பொருள்களைப் புலப்படுத்துவதோடு தன்னையும் புலப்படுத்தும். இதுபோல ஞானம், மற்றைய பொருள்களையும், தன்னையும் புலப்படுத்துமே அன்றி, தன்னை அறியும் ஆற்றலற்றது. ஒளிவிளக்கு தன்னையும் அறியாது; பிற பொருள்களையும் அறியாது. இங்கு அடிப்படைப் பொருள்கள் சடம், சேதனம் என்று பகுப்புக்

கொள்ளாது சடம், அசடம் என வழங்குகிறது. 'அசடத்தைச்' சடமல்லாததெனக் கருதுதல் பொருந்தும்; இது சேதனத்தை உணர்த்தும் 'பிரத்யக்' என்று வழங்குகிறது. ஞானம் (பராக்) சேதனத்தின் இயல்புகளை உடையதானாலும் வேறுபடுவது ஆகும்.

ஞானம் சேதனத்திற்கே உரியது. இதனை 'தரும-பூத-ஞானம்' என வழங்குகிறோம். இதன் நேர்பொருள் 'வழிநிலை ஞானம்' அல்லது 'துணையான ஞானம்' என்பதாகும். முதனிலை ஞானம் அல்லது உயர்ந்த ஞானம், ஜீவனுக்கு இயற்கை—ஸ்வபாவம். ஜீவன் ஒளிவிளக்கின் ஒளியை ஒத்தவன். இவ்வொளி அவ் விளக்கினின்று வெளிப்படும் ஒளிக்கதிர்களின் வேறாகும். ஜீவனிடத்து ஞானம் விளங்குகிறது. இந்த ஞானம் ஜீவனிடமிருந்து புலன்களின் வாயிலாக வெளிப்பட்டுப் பொருளோடு தொடர்பு கொள்கிறபோது, அந்த ஜீவனுக்கு அந் நிலையில் அப் பொருளைப் புலனுக்குகிறது. இங்கு எவ்வாறு பொருள்கள் புலனுகின்றன என்பதை நாம் நன்கு விளங்கிக்கொள்ள வேண்டும். நாம் உள்ளத்தியல் கண்கொண்டு காணவேண்டுவதில்லை; அளவை இயல் நோக்கே வேண்டுவதாகும். வாழ்க்கை முழுவதும் 'ஞானம்' எல்லைக்குட்பட்ட நிலையில் தொழிற்படுகிறது. நாம் அறியும் அறிவு எல்லைக்குட்பட்டதாகும். இராமானுஜரது கருத்தில் நாம் அடுத்து அறியவேண்டுவது, ஞானம் பெரும்பாலும் சிக்கலான பொருளைக் குறிக்கும் என்பதாகும் (ச-விசேஷ வஸ்து). மனம் எப் பொருளையும் தனித்த நிலையில் பண்புகளின் தொடர்பின்றி அல்லது அப் பொருளோடு விளங்கும் பிறிதொரு பொருளின் தொடக்கின்றி அறிய இயலாதது; அறியப்பெறுவது பண்புகளோடு கூடியதே. பொருள்களிலிருந்து சில பண்புகளைப் பிரிக்க இயலாது.

நியாய-வைசேடிகக் கருத்துப்படி, நிர்விகற்பக் காட்சியில் தனித்தனியே பொருளையும் பண்பையும் காணுகிறோம். இராமானுஜர் நிர்விகற்பக் காட்சியை ஏற்கவில்லை; சவிகற்பக் காட்சி, ஞானத்தின் மிக முற்பட்ட நிலையைக் குறிப்பதாகக் கருதுகிறார். இராமானுஜர் சவிகற்ப, நிர்விகற்ப வேறுபாட்டை மறுப்பதாகக் கருதுதல் தவறு. இவ்விரு காட்சிகளும் ஒருங்கே சிக்கலான ஒரு காட்சியை உட்படுத்துவன. முதன்முதலாக ஒரு பொருள் அறியப்பெறும்போது நிர்விகற்பக் காட்சி அமைகிறது. இது முதனிலைக் காட்சியாகும். இதற்கு முன்னதாக அமைந்துள்ள எக் காட்சியையும் நினைவுகூர்ந்து இக் காட்சியை அறியவேண்டுவதில்லை. ஒரு குழந்தை பசுவை முதலில் பார்ப்பதாகக் கருதுவோம்.

பின்னர், பசுவைப் பார்க்கும்போதெல்லாம் முன்னர் கொண்ட காட்சிகளும் நினைவில் எழும். இவ்வாறு பின்னிலையில் அமையும் காட்சிகளையே 'சவிகற்பக் காட்சிகள்' என்று இராமானுஜர் விளக்குகிறார்.

பொருள்கள் அறிவிற்கு முன்னதாக அமைவன. அறியப் பெறுவதற்கு முன்னரே பொருள்கள் விளங்குகின்றன. பொருள்கள் ஆன்மாவைச் சாராது தனித்த இருப்புடையன. புறப்பொருள் உண்மையாக விளங்குகின்றன. பொருள்கள் புறத்தன மட்டுமல்ல, எவற்றையும் சாராதும் விளங்குவன. இவ்வாறு புற உலகுண்மையை இராமானுஜர் விளக்கும்போது அக் கொள்கை வேதத்தில் விளங்குவதாகக் குறிக்கிறார். இவ்வாறு புறவுலக ஏற்பை முற்கோளாகக் கொள்கிறார். இராமானுஜர் கருத்து 'சத்கியாதி' அல்லது 'யதார்த்த கியாதி' என வழங்கு கிறது. உள்ளதே அறியப்பெறுகிறது. அறிவிற்குரிய பொருள் இல்லாத இடத்து அறிவு நிகழ இயலாது. அறிவிற்கு ஒத்த பொருள் அமைதல் வேண்டும். சிக்கலான நிலையில் காட்சி வழங்கும் பொருள்களே உள என்றும் அவையே உணரப் பெறுகின்றன என்றும் இராமானுஜர் வற்புறுத்துகிறார். அறியப் பெறுகிறது என்ற நிலையிலிருந்து (பிரகாரின்) அறியப்பெறுவது யாது என்ற நிலைவரை அறிவு விரிவுபெற அமைதலே இங்கே குறிக்கத்தக்கது. இராமானுஜர் உண்மையாகப் புறவுலகு என்ற ஒன்று உண்மைப் பண்புகளோடு விளங்குவதை நம்புகிறார். உண்மைப் பொருள்களைப்பற்றிய அறிவில் இடர்ப்பாடு இல்லை. அறிவிற்கும் அவ்வறிவிற்குக் காரணமான பொருளிற்கும் இயைபு, பொருத்தம் காணுதல் எளிது. ஆனால், பிழையான அறிவு பொருந்துமாறு யாங்ஙனம்? பௌதிக, உடலியல் உண்மைகளைக் கொண்டு 'பிழைபடும் அறிவை' விளக்குதல் வேண்டும். இந்தியக் கொள்கைகளுள் சில விஞ்ஞானம் வளர்ச்சி பெறாத காலத்தில் தோன்றின; ஆதலால், சில விளக்கங்கள் வியக்கத்தக்கனவாக விளங்குகின்றன.

வேதாந்தம் 'பஞ்சீகரணக் கொள்கை'யை விளக்குவதாகும். பௌதிகப் பொருள்கள் பஞ்சபூதங்களின் கூட்டாகும். ஐம்பூதக் கூறுகள் அளவில் வேறுபடுவன. 'கானல்நீர் எவ்வாறு தோன்றுகிறது?' வெய்யிலில் பரந்த மணற்பரப்பு, வெப்பத்தை மிகுதியும் ஏற்றுள்ளது; இப் பரப்பில் தட்பக் கூறும் உண்டு. இக் கூறு சிறிதளவாயினும் நீரைக் 'காண்பதற்குக் காரணமாகும் அல்லது காட்சியில் அமைவதே, காணப்பெறுவதாகும். இராமானுஜர் தனது கொள்கைக்கு அடிப்படையாக, உண்மைப்

பௌதிக உலகு ஒருமை உடையது என்று கூறுகிருர். பஞ்சீ கரணக் கொள்கையைக்கொண்டு, பிழைபடும் காட்சிகள் அனைத்தையும் விளக்குதல் இயலாது. இப்பியும் வெள்ளியும் ஒத்தன ஆதலால், இப்பி வெள்ளியைப்போல் தோற்றமளிக்கிறது. வெள்ளியின் கூறே இப்பியிடத்து விளங்குகிறது. புலக்காட்சியில் அமைவதும் காணப்பெறுவதும் ஒத்து விளங்குகின்றன. இங்கு அறியவேண்டுவது, கானல் நீரிடத்து நீர்க்கூறு இல்லாமல் இல்லை; இப்பியிடத்து வெள்ளி இல்லாமல் இல்லை என்பதே. இவை இல்லா திருக்குமேல் காட்சி அமைதல் யாங்ஙனம்? ஆனல், இக் காட்சிகள் நமக்குப் பயன்படமாட்டா. உண்மையையும் பிழையையும் வேறு படுத்தி அறிவது வாழ்க்கையில் பயன்படுத்தற்பொருட்டேயாகும். அனைத்து அறிவும் விலக்கின்றி ஏற்புடையதே. ஆனல், அறியப் பெறுவன அனைத்தும் பயன்படுவன என்று கூறுதற்கில்லை. வாழ்க்கை முழுவதிலும் ஞானம் சில தடைகட்கு உட்பட்டே தொழிற்படு கிறது. தோஷங்களில் ஏதேனும் ஒருவகை ஞானம் அமைவதைத் தடை செய்கிறது. முத்தி நிலையிலேதான் ஞானம் எவ்விதத் தடையுமின்றி யாவற்றையும் வெளிப்படுத்துகிறது. இந் நிலையில் அனைத்துத் தோஷங்களும் நீங்கிவிடுகின்றன; மனிதக் காட்சி விரிவுறுகிறது; முகம் மலர்ச்சியடைவதாகக் கூறுவர். 'பிரமா' அல்லது 'ஏற்புடைய அறிவு' சரியாகப் பொருள்களை உணர்த்து வதோடு, எந்த அளவிற்கு உண்மையுடையதாக விளங்குகிறதோ அந்த அளவிற்கு வாழ்க்கையிலும் பயன்படும். பிழைபடும் அறிவு நீங்குகிறபோது உண்மை அறியப்பெறுகிறது. பிழையான அறிவு நீங்குகிறபோது பொருள் நீங்குவதில்லை; செயல்நிலை தடைப்படு கிறது. அன்றாட வாழ்க்கைக்கு முழு அறிவு தேவைப்படுகிறது. நாம் தேர்ந்து சிலவற்றை அறிகிறோம். இவ்வறிவு நிறைவுடைய தாகாது; வேண்டும் அளவிலே அமைவது ஆகும். பகுதியான குறைவுடைய அறிவு, வாழ்க்கைக்குப் பயன்படாமற்போகாது என்று குறிப்பிட்டுள்ளமை ~~இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்~~.

# மாதிரி வினாக்கள்

## சென்னைப் பல்கலைக்கழகம்

### பி.ஏ., செப்டம்பர், 1952

1. முரணுமைச் சட்டத்தை விளக்கி, அதில் அடங்கியுள்ள அளவை இயற் கருத்துகளை வெளிப்படுத்துக.

2. கருதலளவை அல்லது அனுமானம்பற்றிய முரண்தொடர் நிலை யாது என்று விளக்குக.

   கருதலளவையின் இன்றியமையாத இயல்பு யாது என்பதைப் புலப்படுத்துக.

3. விஞ்ஞானத் துறைகளின் முடிபுகளை விளக்குவதே மெய்ப் பொருளியலின் தொழிற்பாடு என்பதை விளக்குக.

4. 'உள்ளத்தியலானது கருத்துகள், உணர்ச்சிகள் ஆகிய வற்றின் இயல்பைக் கருதுகின்றது; அளவை இயலானது உள்பொருளை மனம் எவ்வாறு கருதுகின்றது அல்லது ஆக்குகின்றது என்பதை உரைக்கிறது'—இக் கூற்றை விளக்குக.

5. 'அறிவியலுள் அகநிலையிலிருந்து புறநிலைக்குச் செல்லும் செலவு இல்லை; ஆனல், புறநிலை வளர்ச்சியையே காண்கிருேம்' என்பதை விளக்குக.

6. 'பகுதிக்கும் முழுமைக்கும் இடையே உள்ள உறவு என்பது ஒத்திருத்தல், வேறுபடுதல் ஆகிய இவ்விரண்டினிடையே உள்ள உறவின் ஒருவகைத் தன்மையே ஆகும்' என்பதை எடுத்துக்காட்டுகளுடன் விளக்குக.

7. 'பொசாங்கே' என்பார் வகுத்துள்ள தீர்ப்புகளின் வெவ்வேறு வகைகளைச் சுருக்கி வரைக.

8. ஒவ்வொரு தீர்ப்பும் உண்மையே ஆகும் என்று கூறுவதன் பொருள் யாது? அத் தீர்ப்புகள் உண்மையை எவ்வாறு நாடுகின்றன?

## சென்னைப் பல்கலைக்கழகம்

### பி.ஏ., ஏப்ரல், 1962

1. 'அறிவு என்பது தீர்ப்பும் உறுதிப்பாடும் ஆகும்'—பொசாங்கேயின் இக் கருத்தை ஆய்க.

2. 'காட்சிப் பொருளுண்மைக் கொள்கையினர் உள்பொருள் அறிவுக்கு அயலான தனியிருப்பு உடையது என்று கருதுகின்றனர்.' இதனை விளக்குக.

3. விளக்கத் தொடர், தெளிவுபடுத்தும் அடையாளம் ஆகிய இரண்டையும் பாகுபடுத்தி உணர்த்துக; இவற்றின் தொழிற்பாடுகள் யாவை?

4. இயைபுக் கொள்கை என்பது யாது? உண்மையை அறிதற்குரிய தகுதி இயைபுக்கு உண்டா? இதனை ஆய்க.

5. பயன்வழிக் கொள்கையினர் 'பரம உண்மை' பற்றிய கருத்தைக் குறித்து எழுப்பும் தடைகள் யாவை? விளக்குக.

## சென்னைப் பல்கலைக்கழகம்

### பி.ஏ., செப்டம்பர், 1962

1. 'அளவை இயல் என்பது தூய வடிவங்களின் ஆராய்ச்சியாகும்' என்பதை விளக்குக.

2. 'அறிவு என்பது (புறப்பொருளின்) நகலே என்ற கருத்துக்கு ஆதாரம் யாது? அதிலுள்ள குறைகள் யாவை?

3. அறிவின் இயல்பு குறித்துக் கருத்துமுதற் கொள்கையினர் கூறுவது யாது?

4. காட்சிகள், கருத்தமைவுகள் என்பவற்றைப்பற்றி பாகுபடுத்தி விளக்குக. இவை எவ்வாறு அறிவின் ஆக்கத்திற்குத் துணை செய்கின்றன?

5. பயன்வழிக் கொள்கையினர் உண்மையின் அமைப்பைக் குறித்துக் கருதுவது யாது? ஆராய்க.

## சென்னைப் பல்கலைக்கழகம்

### பி.ஏ., ஏப்ரல், 1963

1. உணர்வு என்பது தொடக்கத்திலிருந்தே தீர்ப்பின் வடிவத்தைக் கொள்கிறது. இதனை விளக்குக.

2. அறிவின் வடிவத்தையும், பொருளையும், அவ்விரண்டினிடையே நிலவும் உறவையும் 'பொசாங்கே' எவ்வாறு கருதுகிறார்? அளவை இயலின் வரையறை இதனால் எவ்வாறு மாற்றங்கொள்கிறது?

3. அறிவுவழிக் கொள்கையைப்பற்றிக் கருத்துமுதற் கொள்கையினரும் காட்சிப் பொருளுண்மைக் கொள்கையினரும் கூறுவனவற்றை ஆய்க.

4. உண்மை என்பது யாது? உண்மையை ஆராய்வதில் எத்தகைய அளவுகோலை நீ ஏற்பாய்? அதற்குரிய காரணம் யாது?

5. பயன்வழிக் கொள்கையினர் அறிவாராய்ச்சி இயலைப்பற்றிக் கூறுவது யாது? மதிப்பிடுக.

## சென்னைப் பல்கலைக்கழகம்

### பி.ஏ., செப்டம்பர், 1963

1. ஒவ்வொரு தீர்ப்பும் 'பொதுமையும் இன்றியமையாமையும்' உடையது என்பதை விளக்குக.

2. கருத்து என்பதை எவ்வாறு பொசாங்கே, கருதுகிறார்? தீர்ப்பில் இக் கருத்தானது கொள்ளும் பங்கு யாது?

3. ஒத்திருப்புக் கொள்கையினர் கூறும் 'உண்மை' பற்றிய கருத்துகளின் இயல்பையும் குறைகளையும் ஆய்க.

4. இயைபுக் கொள்கையினரும் பயன்வழிக் கொள்கையினரும் 'உண்மை' பற்றிக் கூறும் கருத்துகளைத் தடைவிடைகளுடன் ஆய்க.

## சென்னைப் பல்கலைக்கழகம்

### பி.ஏ., ஏப்ரல், 1964

1. அறிவு ஆராய்ச்சி இயல் என்பதன் பொருள் யாது? அது எவ்வெக் கருத்துகளை ஆய்கின்றது?
2. அகநிலைக் கருத்துக் கொள்கையைப்பற்றித் திறனாய்வு முறையில் விளக்கம் தருக.
3. 'தீர்ப்பு' என்பது எக் கருத்தில் இன்றியமையாமை உடையதாகும்? எக் கருத்தில் பொதுமை உடையதாகும்?
4. எவ்வெக் கருத்துகளுக்குமட்டுமே உண்மையை நிறுவும் ஆற்றல் உண்டு? விளக்குக.
5. நகற் கொள்கையினர் கூறும் 'உண்மை'பற்றிய கருத்துகளின் குறைநிறைகள் யாவை?

# கலைச் சொற்கள்

## (ஆங்கிலம்—தமிழ்)

### A

Absolute certainty — முழு உறுதி
Absolute exactitude — முற்றிலும் சரியான அளவை
Absolute idea — பரம்பொருட் கருத்து
Absolute truth — பரமான உண்மை
Absolute universality — யாண்டும் பொருந்தும் உண்மை
Abstract — கருத்தியல்பானவை
Abstract monism — கருத்தியல் ஒருமைக் கொள்கை
Acosmism — உலகுண்மை மறுப்புக் கொள்கை
Aesthetics — அழகியல், முருகியல்
Affection — விழைவு-உணர்ச்சி
Agnosticism — அறியொணாக் கொள்கை
All-inclusive nature — யாவற்றையும் உட்படுத்தும் இயற்கை
Amoeba — தொடக்கநிலை உயிர்
Anology Analogy — உவமை
Appearance — தோற்றநிலை
Apriori — புலச்சார்பற்ற
Arguing for oneself — தன்பொருட்டு அனுமானம்
Arguing for others — பிறர்பொருட்டு அனுமானம்
Authoritarianism — ஆதிக்கக் கொள்கை, (அல்லது) ஆட்சிக் கொள்கை
Avenue, Source of knowledge — பிரமாணம்
Axiom, Self - evident truth — தன்னுண்மை நிலை

### B

Behaviourism — நடத்தைக் கொள்கை
Being — இருப்பு உள்ளது

Block universe — மாற்றங்கட்கு இடங்கொடாத உலகு
British empricists — ஆங்கில அனுபவவழிக் கொள்கையினர்

## C

Cartesian dualism — பிரஞ்சு நாட்டு இருமைக் கொள்கை
Cause — காரணம்
Cell — உயிரணு
Cognition — அறிவு
Coherence — இயைபு
Coherence theory — இயைபுக் கொள்கை
Common sense — பொதுவாக மக்கள் கருதுவது
Complex ideas — சிக்கலான கருத்துகள்
Conation — செயல்
Conception — கருத்தமைவு
Conclusion — முடிவு
Concrete monism — பருமையான ஒருமைக் கொள்கை
Cones — நிறவேறுபாடுகளை உணர்த்தும் கண் உறுப்புகள்
Copla — இணைப்பு
Copy — பிரதிபிம்பம்
Correspondence theory — ஒற்றுமைக் கொள்கை
Criteria — அளவுகோல்கள்
Critical naturalism — திறனாய்வு முறையில் எழுந்த இயற்கைவாதம்
Criticism — திறனாய்வு
Custom — மரபு

## D

Deductive — பகுப்புவழி அளவை
Determinate — சவிகற்பக் காட்சி, பகுத்துணர்வுக் காட்சி
Discussion, Dialectic — விவாத முறை, முரண் நிலைத் தருக்க இயல்
Divine substance — தெய்வப் பொருள்
Dualism — இருமைக் கொள்கை

## E

Elimination — ஒழிபு அளவை, பாரிசேடப் பிரமாணம்
Empricists — அனுபவவழிக் கொள்கையினர்
Enumeration — எண்ணிக்கை
Epistemology — அறிவு அளவை இயல், அறிவு ஆராய்ச்சி இயல்
Erroneous knowledge — பிழையுணர்வு, பிரமா
Eternal ideas — நிலைத்த கருத்துகள்
Ethics — அறவியல்
Evolution — பரிணும முறை
Existence — இருப்பு, பாவம்
External knowledge — வெளிப்புறத்திலிருந்து கிடைக் கப்பெறும் அறிவு, பாஹ்ய ஞானம்
External world — புறவுலகு, வெளியுலகு
Extraordinary perception — அலௌகிகக் காட்சி

## F

Faint images — மங்கலான உருக்கள்
Falsehood — பொய்மை
Formal consistency — சிந்தனையில் பெறப்பெறும் முடிவு மேற்கோளோடு வடிவ நிலையில் ஒத்திருத்தல் அல்லது வடிவநிலைப் பொருத்தம்
Formal logic — வடிவநிலை அளவை
Formula — வாய்பாடு
Freedom of the will — செயலுரிமை
Fruitful activity — பயனுள செயல்நிலை

## G

German idealism — ஜெர்மானியக் கருத்து முதற் கொள்கை

## H

Habit — பழக்கம்
Hallucination — இல்பொருட் காட்சி
Hypothesis — கருதுகோள்

## I

| | | |
|---|---|---|
| Idealists | — | கருத்துமுதற் கொள்கையினர் |
| Ideas | — | எண்ணங்கள், கருத்துகள் |
| Illusion | — | திரிபுக் காட்சி |
| Images | — | எண்ண உருக்கள் |
| Imagination | — | கற்பனை |
| Immaterial | — | சடமல்லாதது, பருமையற்றது |
| Immediate knowledge | — | அபரோக்ஷ ஞானம் |
| Impressions | — | பதிவுகள் |
| Indeterminate | — | நிர்விகற்பக் காட்சி, எழுவாய்க் காட்சி |
| Inductive | — | தொகுப்புவழி அளவை |
| Inference | — | அனுமானம், கருதலளவை |
| Infra-red | — | நிறமாலையில் சிவப்புக்குக்கீழ் உள்ளது |
| Innate ideas | — | உள்ளார்ந்த கருத்துகள் |
| Inner sense organ | — | அந்தக்கரணம் |
| Instrumentalism | — | கருவிக் கொள்கை |
| Internal knowledge | — | அந்தர் ஞானம் |
| Intrinsic quality | — | இயற்கைப் பண்புகள் |
| Introspection | — | அகக்காட்சி |
| Intuition | — | அகவுணர்வு, உள்ளுணர்வு |
| Intuitionism | — | உள்ளுணர்வுக் கொள்கை |
| Invalid knowledge | — | பயனில் அறிவு, அபிரமா |
| Invariable antecedent | — | மாறுமல் எப்போதும் முன்னிகழ்வது |

## J

| | | |
|---|---|---|
| Judgements | — | தீர்ப்புகள் |
| Judgements of causal connection | — | காரணகாரியத் தொடர்பு பற்றிய தீர்ப்புகள் |
| Judgements of individuality | — | தனிநிலைத் தீர்ப்புகள் |
| Judgements of measure | — | அளவுநிலைத் தீர்ப்புகள் |
| Judgements of necessity | — | தீர்ப்புகளின் இன்றியமையாமை |
| Judgements of quality | — | பண்புபற்றிய தீர்ப்புகள் |
| Judgements of quantity | — | அளவுகுறித்த தீர்ப்புகள் |
| Judgements of universality | — | தீர்ப்புகளின் பொதுமை |

## K

Knower or perceiver — அறிவான், பிரமாதா
Knowledge — பிரமிதி, அறிவு
Known object or perceived — அறியப்படு பொருள், அறிபொருள்

## L

Law of excluded middle — நடுப்பொருள் நீக்க நியதி
Law of identity — முற்றொருமை நியதி
Law of non-contradiction — முரணுமை நியதி
Law of sufficient reason — போதிய காரியகாரண நியதி
Logic — அளவை இயல்
Logical consistency — அளவை இயைபு
Logical priority — காரணநிலையில் முற்பட்டன

## M

Materialism — பொருள்முதற் கொள்கை
Materialistic monism — சடவுலக ஒருமைக் கொள்கை
Material consistency — பொருட் பொருத்தம்
Materialistic pluralism — சடவுலகப் பன்மைக் கொள்கை
Matter — சடப்பொருள்
Matter and spirit — சடமும் ஆவியும்
Mediate knowledge — பரோக்ஷ ஞானம்
Memory — நினைவாற்றல்
Mental construction of reality — உள்பொருள் ஆக்கம்
Metaphysics — அடிப்படைத் தத்துவ இயல், புலன் கடந்த பொருள் இயல்
Methodical doubt — முறைமையான ஐயம்
Microscope — உருப்பெருக்கி
Middle term — மத்திமப் பதம்
Mind — உள்ளம், மனம்
Mind-body dualism — மனம்-உடல் இருமைக் கொள்கை
Miracles — புதிரான செயல்கள்
Misperception, Illusion — திரிபுக் காட்சி
Monads — ஆன்மக் கூறுகள்
Monism — ஒருமைக் கொள்கை
Mystical knowledge — மறைபொருள் அறிவு, அனுபூதி அறிவு

## N

| | | |
|---|---|---|
| Naive unreflecting realism | — | பாமர, சிந்தனையற்ற காட்சிப் பொருள் உண்மைவாதம் |
| Natural | — | இயற்கையானது, சகஜம் |
| Naturalism | — | இயற்கை உண்மைக் கொள்கை |
| Nature of inference | — | அனுமானத்தின் இயல்பு |
| Necessity | — | இன்றியமையாமை |
| Non-apprehension | — | அனுபலப்தி, பொருட்பேறு |
| Non-existence | — | அபாவம் |
| Normative sciences | — | மதிப்பீட்டுத் துறைகள் |

## O

| | | |
|---|---|---|
| Objective | — | புறநிலையுடையது |
| Occasionalism | — | தறுவாய்க் கொள்கை |
| Ontology | — | உள்ளதன் இயல் |
| Ordinary perception | — | லௌகிகக் காட்சி |
| Other worldly | — | மறுமை உலகைச் சார்ந்தது |

## P

| | | |
|---|---|---|
| Panorama | — | விரிந்த காட்சி |
| Paradox | — | முரணுரை |
| Particular judgement | — | சிறப்பு உண்மைகள், தனி உண்மைகள் |
| Perception | — | வாயிற் காட்சி, பிரத்யட்சம், காட்சியளவை |
| Philosophy | — | மெய்ப்பொருளியல் |
| Physical sciences | — | பௌதிக ஆராய்ச்சிகள் |
| Physics | — | பௌதிக இயல் |
| Pragmatic method | — | பயன்வழி முறை |
| Pragmatism | — | பயன்வழிக் கொள்கை, செயல் நிலைக் கொள்கை |
| Pragmatist | — | பயன்வாதி |
| Prejudices | — | உளச்சார்புகள் |
| Premise | — | மேற்கோள் |
| Premise, major | — | மேற்கோள் பிரமாணம் |
| Premise, minor | — | துணைப்பொருள் பிரமாணம் |
| Presentative cognition | — | வழங்கும் காட்சி அறிவு |
| Presumption | — | அருத்தாபத்தி |

Primary qualities — முதனிலைப் பண்புகள்
Principle of contradiction — முரண் தத்துவம்
Principle of sufficient reason — போதிய அளவு சிந்தனை
Proposition — கருத்துரை
Positivism — நேர்முக வாதம்
Positive sciences — உள்ளதை உள்ளவாறு ஆராய்ந்து கூறும் விஞ்ஞானத் துறைகள்
Psychology — உள்ளத்தியல்

## R

Rationalists — அறிவுவழிக் கொள்கையினர்
Renaissance — மறுமலர்ச்சிக் காலம்
Representationalism — பிரதிநிதித்துவக் கொள்கை

## S

Sceptics — ஐயக்கொள்கையினர்
Secondary qualities — வழிநிலைப் பண்புகள்
Self — ஆன்மா
Self-consciousness — ஆன்ம உணர்வு
Sensations — புலப்பதிவுகள்
Sense data — புலன் தரு வரவு
Sense organs — புலன், இந்திரியம், வாயில்
Sense perception — புலக்காட்சி
Sensible qualities — புலப்பண்புகள்
Simple ideas — எளிய கருத்துகள்
Spiritualism — ஆன்மமுதற் கொள்கை
Spiritualistic monism — ஆன்ம ஒருமைக் கொள்கை
Spiritualistic pluralism — ஆன்மப் பன்மைக் கொள்கை
Spiritual substance — ஆன்மீகப் பொருள்
Stimuli — தூண்டுதல்கள்
Subjective — அகநிலையுடையது
Subjective idealism — அகநிலைக் கருத்துக் கொள்கை
Substance — பொருள்தன்மை
Supernatural — இயற்கை கடந்தது
System — அமைப்பு
Systematic — முறைமை
System of reality — உள்பொருள் உலகு

## T

Tabula rasa — எதுவும் எழுதப்பெறாத பலகை
Tautology — கூறியது கூறல்
Telescope — தொலைநோக்கி
Temporal priority — காலத்தால் முற்பட்டன
Theory — கொள்கை
Theory of knowledge — அறிவுக் கொள்கை
Thing-in-itself — தன்னுண்மை நிலை
Thinking — சிந்தனை
Three-membered syllogism — முக்கூற்று அளவை முறை
Touchstone criterion — உரைகல்
Tradition — ஐதிகம், மரபு, உலகுரை
Transcendental perception — கடந்த காட்சி
Tripudi samvit — அறிவான், அறிபொருள், அறிவு
Truth — உண்மை

## U

Ultimate consciousness — பரம உணர்வு
Ultrasonics — செவிப்புலன் கடந்த ஒலி
Ultraviolet — நிறமாலையில் ஊதா கடந்தது
Universal ideas — பொதுப் பண்புகள்
Universal judgement — பொதுநிலைத் தீர்ப்புகள்

## V

Validity — அளவை ஏற்புடைமை
Valid knowledge — பிரமா
Verbal testimony — உரையளவை, சப்த பிரமாணம், ஆகம அளவை
Verification — சரிபார்த்தல்

## Y

Yogic perception — யோக உணர்வு

# கலைச் சொற்கள்

## (தமிழ்—ஆங்கிலம்)

### அ

| | |
|---|---|
| அகவுணர்வு, உள்ளுணர்வு | — Intuition |
| அகக்காட்சி | — Introspection |
| அகநிலைக் கருத்துக் கொள்கை | — Subjective idealism |
| அகநிலையுடையது | — Subjective |
| அடிப்படைத் தத்துவ இயல், புலன் கடந்த பொருளியல் | — Metaphysics |
| அந்தக்கரணம் | — Inner sense organ |
| அந்தர் ஞானம் | — Internal knowledge |
| அபரோக்ஷ ஞானம் | — Immediate knowledge |
| அபாவம் | — Non-existence |
| அபிரமா | — Invalid knowledge |
| அமைப்பு | — System |
| அருத்தாபத்தி | — Presumption |
| அலௌகிகக் காட்சி | — Extraordinary perception |
| அழகு இயல் | — Aesthetics |
| அளவுகுறித்த தீர்ப்புகள் | — Judgement of quantity |
| அளவுகோல்கள் | — Criteria |
| அளவுநிலைத் தீர்ப்புகள் | — Judgement of measure |
| அளவை இயல் | — Logic |
| அளவை இயைபு | — Logical consistency |
| அளவை ஏற்புடைமை | — Logical validity |
| அறவியல் | — Ethics |
| அறியொணாக் கொள்கை | — Agnosticism |
| அறிவான், அறிபொருள், அறிவு | — Knower, Known, Knowledge; Tripudi samvit |
| அறிவு அளவை இயல், அறிவு ஆராய்ச்சி இயல் | — Epistemology |
| அறிவுவழிக் கொள்கையினர் | — Rationalists |

அறிவு, இச்சை, செயல் — Cognition, Affection, Conation
அனுபலப்தி, பொருட்பேறு — Non-apprehension
அனுபவவழிக் கொள்கையினர் — Empiricists
அனுமானம், கருதலளவை — Inference
அனுமானத்தின் இயல்பு — Nature of inference

ஆ

ஆகம அளவை, உரையளவை, சப்த பிரமாணம் — Verbal testimony
ஆங்கில அனுபவவழிக் கொள்கையினர் — British emprícists
ஆட்சிக் கொள்கை, ஆதிக்கக் கொள்கை — Authoritarianism
ஆன்ம உணர்வு — Self-consciousness
ஆன்ம ஒருமைக் கொள்கை — Spiritualistic monism
ஆன்மக் கூறுகள் — Monads
ஆன்மப் பன்மைக் கொள்கை — Spiritualistic pluralism
ஆன்மமுதற் கொள்கை — Spiritualism
ஆன்மா — Self
ஆன்மீகப் பொருள் — Spiritual substance

இ

இணைப்பு — Copula
இயற்கை உண்மைக் கொள்கை — Naturalism
இயற்கை கடந்தது — Supernatural
இயைபு — Coherence
இயைபுக் கொள்கை — Coherence theory
இருப்பு — Existence
இருப்புள்ளது — Being
இருமைக் கொள்கை — Dualism
இல்பொருட் காட்சி — Hallucination
இன்றியமையாமை — Necessity

உ

உண்மை — Truth
உயிரணு — Cell
உருப்பெருக்கி — Microscope

உரைகல் — Touchstone, Criterion
உலகுண்மை மறுப்புக் கொள்கை — Acosmism
உவமை — Analogy
உளச்சார்புகள் — Prejudices
உள்பொருள் ஆக்கம் — Mental construction of reality
உள்பொருள் உலகு — System of reality
உள்ளதன் இயல் — Ontology
உள்ளதை உள்ளவாறு ஆராயும் துறைகள் — Positive sciences
உள்ளத்தியல் — Psychology
உள்ளம் — Mind
உள்ளார்ந்த எண்ணம் — Innate ideas
உள்ளுணர்வுக் கொள்கை — Intuitionism

எ

எண்ண உருக்கள் — Images
எண்ணிக்கை — Enumeration
எளிய கருத்துகள் — Simple ideas

ஏ

ஏதும் எழுதப்பெறாத பலகை — Tabula rasa

ஐ

ஐதிகம், மரபு, உலகுரை — Tradition
ஐயக்கொள்கையினர் — Sceptics

ஒ

ஒருமைக் கொள்கை — Monism
ஒழிபு அளவை, பாரிசேடப் பிரமாணம் — Elimination
ஒற்றுமைக் கொள்கை — Correspondence theory

க

கடந்த காட்சி — Transcendental perception
கருதுகோள் — Hypothesis
கருத்தமைவு — Conception
கருத்தியல் ஒருமைக் கொள்கை — Abstract monism

| | |
|---|---|
| கருத்தியல்பாண்மை | — Abstract |
| கருத்துகள், எண்ணங்கள் | — Ideas |
| கருத்துமுதற் கொள்கையினர் | — Idealists |
| கருத்துரை | — Proposition |
| கருவிக் கொள்கை | — Instrumentalism |
| கற்பனை | — Imagination |
| காரணகாரியத் தொடர்பு பற்றிய தீர்ப்புகள் | — Judgements of causal connection |
| காரணநிலையில் முற்பட்டன | — Logical priority |
| காரணம் | — Cause |
| காலத்தால் முற்பட்டன | — Temporal priority |
| அறிவுக் கொள்கை | — Theory of knowledge |
| கூறியது கூறல் | — Tautology |
| கொள்கை | — Theory |

## ச

| | |
|---|---|
| சகஜம் | — Natural |
| சடவுலக ஒருமைக் கொள்கை | — Materialistic monism |
| சடவுலகப் பன்மைக் கொள்கை | — Materialistic pluralism |
| சடப்பொருள் | — Matter |
| சடமல்லாதது, பருமையற்றது | — Immaterial |
| சடமும் ஆவியும் | — Matter and spirit |
| சவிகற்பக் காட்சி, பகுத்துணர்வுக் காட்சி | — Determinate |
| சரிபார்த்தல் | — Verification |
| சிக்கலான கருத்துகள் | — Complex ideas |
| சிந்தனை | — Thinking |
| சிந்தனையில் பெறப்பெறும் முடிபு மேற்கோளோடு வடிவ நிலையில் ஒத்திருத்தல், வடிவ நிலைப் பொருத்தம் | — Formal consistency |
| சிறப்புண்மைகள், தனி உண்மைகள் | — Particular judgement |
| செயலுரிமை | — Freedom of will |
| செவிப்புலன் கடந்த ஒலி | — Ultrasonics |

## த

| | |
|---|---|
| தறுவாய்க் கொள்கை | — Occasionalism |
| தற்புல உண்மை | — Axiom, Self-evident truth |

| | |
|---|---|
| தனிநிலைத் தீர்ப்புகள் | — Judgement of individuality |
| தன்பொருட்டு அனுமானம் | — Arguing for oneself |
| தன்வேதனைக் காட்சி | — Experience |
| தன்னுண்மை நிலை | — Thing-in-itself |
| திரிபுக் காட்சி | — Illusion, misperception |
| திறனாய்வு முறை | — Criticism |
| திறனாய்வு முறையில் எழுந்த இயற்கை வாதம் | — Critical naturalism |
| தீர்ப்பு | — Judgement |
| தீர்ப்புகளின் இன்றியமையாமை | — Judgements of necessity |
| தீர்ப்புகளின் பொதுமை | — Judgements of universality |
| துணைப்பொருட் பிரமாணம் | — Premise, minor |
| தூண்டுதல்கள் | — Stimuli |
| தெய்வப் பொருள் | — Divine substance |
| தொகுப்புவழி அளவை | — Inductive |
| தொடக்கநிலை உயிர் | — Amoeba |
| தொலைநோக்கி | — Telescope |
| தோற்றநிலை | — Appearance |

ந

| | |
|---|---|
| நடத்தைக் கொள்கை | — Behaviourism |
| நடுப்பொருள் நீக்க நியதி | — Law of excluded middle |
| நிர்விகற்பக் காட்சி, எழுவாய்க் காட்சி, பொதுமைக் காட்சி | — Indeterminate |
| நிலைத்த கருத்துகள் | — Eternal ideas |
| நிறமாலையில் ஊதா கடந்தது | — Ultra-violet |
| நிறமாலையில் சிவப்புக்குக்கீழ் உள்ளது | — Infra-red |
| நிறவேறுபாடுகளை உணர்த்தும் கண் உறுப்புகள் | — Cones |
| நினைவாற்றல் | — Memory |
| நேர்முக வாதம் | — Positivism |

ப

| | |
|---|---|
| பகுப்புவழி அளவை | — Deductive |
| பண்புகளைப்பற்றிய தீர்ப்புகள் | — Judgments of quality |
| பதிவுகள் | — Impressions |

| | |
|---|---|
| பயனுள்ள செயல்நிலை | — Fruitful activity |
| பயன்வழிக் கொள்கை, செயல்நிலைக் கொள்கை | — Pragmatism |
| பயன்வழி முறை | — Pragmatic method |
| பயன்வாதி | — Pragmatist |
| பரம உணர்வு | — Ultimate consciousness |
| பரமான உண்மை | — Absolute truth |
| பரம்பொருட் கருத்து | — Absolute idea |
| பரிணும முறை | — Evolution |
| பருமையான ஒருமைக் கொள்கை | — Concrete monism |
| பரோக்ஷ ஞானம் | — Mediate knowledge |
| பழக்கம் | — Habit |
| பன்மைக் கொள்கை | — Pluralism |
| பாமர, சிந்தனையற்ற காட்சிப் பொருள் உண்மைவாதம் | — Naive, unreflecting realism |
| பாவம் | — Existence |
| பாஹ்ய ஞானம் | — External knowledge |
| பிரஞ்சு நாட்டு இருமைக் கொள்கை | — Cartesian dualism |
| பிரதிநிதித்துவக் கொள்கை | — Representationalism |
| பிரதிபிம்பம் | — Copy |
| பிரத்யட்சம், வாயிற் காட்சி, காட்சியளவை | — Perception |
| பிரமா | — Erroneous knowledge |
| பிரமா | — Valid knowledge |
| பிரமாணம் | — Avenue, Source of knowledge |
| பிரமாதா | — Knower |
| பிரமிதி | — Knowledge |
| பிரமேயம் | — Known |
| பிறர்பொருட்டு அனுமானம் | — Arguing for others |
| புதிரான செயல்கள் | — Miracles |
| புலக்காட்சி | — Sense perception |
| புலச்சார்பூற்ற | — Apriori |
| புலப்பண்புகள் | — Sensible qualities |
| புலப்பதிவு | — Sensation |
| புலன், இந்திரியம், வாயில் | — Sense organs |
| புலன்தரு வரவு | — Sense data |
| புற உலகம், வெளி உலகம் | — External world |
| புறநிலையுடையது | — Objective |

பொது உண்மைகள் — Universal judgement
பொதுவாக மக்கள் கருதுவது — Common sense
பொதுப் பண்புகள் — Universal ideas
பொய்மை — Falsehood
பொருள் தன்மை — Substance
பொருட் பொருத்தம் — Material consistency
பொருள்முதற் கொள்கை — Materialism
போதிய அளவு சிந்தனை — Principle of sufficient reason
போதிய காரண நியதி — Law of sufficient reason
பௌதிக ஆராய்ச்சிகள் — Physical sciences
பௌதிக இயல் — Physics

### ம

மங்கலான உருக்கள் — Faint images
மதிப்பீட்டுத் துறைகள் — Normative sciences
மத்திம பதம் — Middle term
மரபு — Custom
மறுமலர்ச்சிக் காலம் — Renaissance
மறுமை உலகைச் சார்ந்தது — Other worldy
மறைபொருள் அறிவு, அனுபூதி அறிவு — Mystical knowledge
மனம்-உடல் இருமை — Mind-body dualism
மாறாது எப்போதும் முன்னிகழ்வது — Invariable antecedent
மாற்றங்கட்கு இடங்கொடாத உலகு — Block universe
மானதக் காட்சி — Reflected knowledge
முக்கூற்று அளவை முறை — Three-membered syllogism
முடிபு — Conclusion
முதலுரை, மேற்கோள் — Premise
முதனிலைப் பண்புகள் — Primary qualities
முரணுமைச் சட்டம் — Law of contradiction
முரணுரை — Paradox
முரண் தத்துவம் — Principle of contradiction
முழு உறுதி — Absolute certainty
முழுவதும் சரியான அளவை — Absolute exactitude
முறைமை — Systematic
முறைமையான ஐயம் — Methodical doubt
முற்றொருமை நியதி — Law of identity

| | |
|---|---|
| மெய்ப்பொருளியல், தத்துவ இயல் | — Philosophy |
| மேற்கோள் பிரமாணம் | — Premise, major |

### ய

| | |
|---|---|
| யாண்டும் பொருந்தும் உண்மை | — Absolute universality |
| யாவற்றையும் உட்படுத்தும் இயற்கை | — All-inclusive nature |
| யோகக்காட்சி | — Yogic perception |

### ல

| | |
|---|---|
| லௌகிகக் காட்சி | — Ordinary perception |

### வ

| | |
|---|---|
| வடிவநிலை அளவை | — Formal logic |
| வழங்கும் காட்சி அறிவு | — Presentative cognition |
| வழிநிலைப் பண்புகள் | — Secondary qualities |
| வாய்பாடு | — Formula |
| விரிந்த காட்சி | — Panorama |
| விவாத முறை, முரண்நிலைத் தருக்க இயல் | — Discussion, dialectic |

### ஜ

| | |
|---|---|
| ஜெர்மானியக் கருத்துமுதற் கொள்கை | — German idealism |

# பொருள் அகராதி

# பிழைதிருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 5 | 4 | நிர்ணயித்தல் அல்லாமல் | நிர்ணயித்தால் அல்லாமல் |
| 5 | 21 | பல்வேறு முறைகளாக | பல்வேறு துறைகளாக |
| 8 | 5 | உள்ளத்தியல் ஆராய்கிறது | உள்ளத்தியல் ஆராய்கிறது. |
| 10 | 3 | வடிவநிலை பொருத்தம் | வடிவநிலைப் பொருத்தம் |
| 21 | 18 | நராக விழும் | நேராக விழும் |
| 44 | 12 | அவ் வெள்ளத்தினை | மனமானது அவ் வெள்ளத்தினை |
| 46 | 25 | குறித்த நம்பிக்கைக்கு | குறித்த கொள்கைக்கு |
| 58 | 3 | அனுபவம் | அனுபவமும் |
| 60 | 15 | 'அ' என்பது 'ஆ' | 'அ' என்பது 'அ' |
| 60 | 37 | வெற்றொருமை | முற்றொருமை |
| 62 | 2 | அன்று என்பது | என்பது |
| 65 | 20 | இந்த மூல அளவு வேறுபடும் பொருள்களை | வேறுபடும் பொருள்களை |
| 66 | 37 | பெருள்களைப்பற்றிய | பொருள்களைப்பற்றிய |
| 67 | 35 | தண்ணீரிலிருந்து பெற்றூர். | தண்ணீரிலிருந்து தோன்றியனவாகக் கண்டார் |
| 71 | 30 | அனைத்தறிவு 'நினைவு கூர்தல்' | அனைத்தறிவும் 'நினைவு கூர்தலே' |
| 72 | 37 | ஆராச்சிகளைக் | ஆராய்ச்சிகளைக் |
| 74 | 35 | கருதப்பறுகிறது. | கருதப்பெறுகிறது. |
| 76 | 37 | கட்டுருது | கட்டுருது, |
| 78 | 25 | இயல்புகளை உடையதாகின்றது. | இயல்புகளை அறிவுஉடையதாகின்றது. |
| 84 | 21 | கருத்தொன்றை உள்பொருளின் | கருத்தொன்றை—உள்பொருளின் |
| 88 | 6 | அது கருத்து இயற்கை | அது இயற்கை |
| 102 | 12 | அவ்வுற்றிற்குரிய | அவ்வவற்றிற்குரிய |
| 103 | 8 | விஞ்ஞான ஆராய்ச்சி, | மொனுடுக் கொள்கை விளைத்த விஞ்ஞான ஆராய்ச்சியானது |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 109 | 33 | உள்ளன | உள்பொருள் |
| 111 | 8 | உடயவன் | உடையவன் |
| 113 | 4 | புறக்காரணங்கள் அல்ல. | புறப்பொருள்கள் காரணங்கள் அல்ல |
| 114 | 16 | ஆகியவைகளே | அமைவதே |
| 115 | 8 | அவற்றுள் சில | அக்கொள்கையாளர்களுள் சிலர் |
| 117 | 27 | உண்டு. | உண்டு என்பது. |
| 118 | 27 | எண்ணக் கூறுகளை அறிய முடியாது | எண்ணம் என்ற ஒன்றைத் தனித்து அறிய முடியாது. |
| 119 | 7 | அமையும் உறவு யாது? இருவகையானதாகும். | அமையும் உறவு இருவகையானதாகும். |
| 123 | 3 | இல்லையேல் சிந்தனையால் | இல்லையேல் அறிவானது சிந்தனையால் |
| 123 | 4 | இல்லையேல் பொறி | இல்லையேல் அறிவானது பொறி |
| 123 | 7 | அழுத்தநிலை வேறுபாடுகள். | அழுத்த நிலை வேறுபாடுகள், |
| 123 | 8 | புலனறிவுகள் இல்லையேல் | புலனறிவுகள் ஆகியவைகளால் அறிவு அமைவது என்பது இல்லையேல், அறிவானது |
| 123 | 37 | (Aprion) | (Apriori) |
| 129 | 6 | கொள்ளாது மொனுடின் | கொள்ளாது. மொனுடின் |
| 129 | 19 | மொனுடினிடத்துத் | அது மொனுடினிடத்துத் |
| 133 | 24 | கணித இயலும் | கணித இயலுள் |
| 136 | 25 | அறிவை அளவு இயல் | அறிவு அளவை இயல் |
| 138 | 8 | பிறித்தறிய | பிரித்தறிய |
| 145 | 31 | தனியோர் | தனித்த ஒரு, |
| 146 | 1 | எந்தப் | இந்தப் |
| 146 | 12 | பெறுகிறது | பெறுவது, |
| 146 | 21 | பிரமாணத்தின் மூலமோ | பிரமாணத்தின் மூலமோ அமையும் |
| 151 | 36 | இயலாததால் | இயலாதது ஆதலால் |
| 153 | 12 | பிரபாகர | பிரபாகரர் கொள்கை |
| 156 | 13 | மாற்றங்களையும் நேராக | மாற்றங்களையும் அதனுல் நேராக |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 159 | 38 | புவப்படுத்துமே | புலப்படுத்துமே |
| 160 | 1 | வழங்குகிறது | வழங்கப்பெறுகின்றன. |
| 162 | 29 | இங்குக் குறிப்பிடத் தக்கதாகும் | இங்கே நினைவுகொள்ளத் தக்கதாகும். |
| 168 | 16 | Copla | Copula |
| 169 | 8 | Eternel | Eternal |

# தமிழ் வெளியீட்டுக் கழகம்

சென்னை-9

## இதுவரை வெளியிட்டுள்ள நூல்கள்

பொருளாதாரம்.

| | | | ரூ. | பை |
|---|---|---|---|---|
| *1. | பொருளாதாரம்—II | சி. வேலாயுதம் | 9 | 00 |
| 2. | புதுமைப் பொருளாதாரக் கூறுகள் | டாக்டர் திருமதி ஆர். தாமரஜாட்சி | 12 | 00 |
| 3. | பொருளாதாரம் ஓர் அறிமுகம்—I | தி. சி. மோகன் | 12 | 00 |
| 4. | பொருளாதாரம் ஓர் அறிமுகம்—II | எம். ஏ. அபூர்வசாமி | 10 | 75 |
| 5. | பொருளாதாரக் கோட்பாடு வளர்ந்த வரலாறு | பி. வி. ஸ்ரீநிவாசன் க. முத்தையன் | 7 | 00 |
| *6. | பணவியலும் பாங்கியலும்—II | சி. வேலாயுதம் | 11 | 50 |
| 7. | நவீன பாங்கு இயல் | க. வெற்றிவேல் | 7 | 50 |
| *8. | இந்தியச் செலவாணியும் பாங்குமுறையும் | பி. வி. ஸ்ரீநிவாசன் | 5 | 50 |
| *9. | அரசாங்க நிதி இயல் | அர. சேஷாசலம் | 4 | 75 |
| 10. | இந்தியப் பொருளியல்—I | எம். பாலசுப்பிரமணியன் | 10 | 00 |
| 11. | இந்தியப் பொருளியல்—II | எம். ஜார்துநாதன் | 4 | 25 |
| 12. | நமது பொருளாதாரப் பிரச்சினை—I | சி. சுந்தரராஜன் | 10 | 75 |
| 13. | நமது பொருளாதாரப் பிரச்சினை—II | எல். குழந்தைநாதன் | 10 | 50 |
| 14. | இங்கிலாந்தின் பொருளாதார வரலாறு—I | கீ. சீ. இராமசாமி | 6 | 00 |
| 15. | இங்கிலாந்தின் பொருளாதார வரலாறு—II | கீ. சீ. இராமசாமி | 6 | 00 |
| 16. | அமெரிக்காவின் நவீன பொருளாதார வளர்ச்சி | தி. சி. மோகன் | 5 | 00 |
| 17. | அமெரிக்கப் பொருளாதார வரலாறு—I | மு. க. சுப்பிரமணியம் | 11 | 00 |

*மூலநூல் (Original Book)

| | | | ரூ. | பை |
|---|---|---|---|---|
| 18. | அரசாங்க நிதியியலின் பொருளாதாரம்—I | மா. குமாரசாமி | 10 | 00 |
| 19. | இந்தியாவின் பொருளாதார வளர்ச்சி—I | தே. வேலப்பன் | 10 | 00 |
| 20. | பணம்—சிறு விளக்கம் | கோ. இராதாகிருஷ்ணன் | 10 | 00 |
| *21. | வணிக இயலின் தத்துவங்கள் | கு. ஆளுடைய பிள்ளை | 9 | 50 |
| 22. | பத்தொன்பதாம் நூற்றுண்டில் கிரேட் பிரிட்டனில் தொழில், வாணிபப் புரட்சி | சூ. ரா. கருப்பண்ணன் | 11 | 00 |

வரலாறு

| | | | | |
|---|---|---|---|---|
| *23. | பிரிட்டன் வரலாறு—I | கி. ர. அனுமந்தன் | 10 | 00 |
| *24. | பிரிட்டன் வரலாறு—II | கி. ர. அனுமந்தன் | 9 | 75 |
| *25. | ஐரோப்பிய வரலாறு—I | டி. வி. சொக்கப்பா | 4 | 50 |
| 26. | ஐரோப்பா—கடந்த ஐந்து நூற்றுண்டுக் காலச் சரித்திரம் | வை. விருத்தகிரீசன் | 15 | 00 |
| 27. | இங்கிலாந்து வரலாறு—I | இரா. அண்ணுமலை | 13 | 00 |
| 28. | இங்கிலாந்து வரலாறு—II | பா. மாணிக்கவேலு | 13 | 00 |
| 29. | இங்கிலாந்தின் வரலாறு—I | க. த. திருநாவுக்கரசு | 15 | 00 |
| 30. | இங்கிலாந்தின் சிறப்பு வரலாறு - I | தி. வெ. குப்புசாமி | 7 | 50 |

அரசியல்

| | | | | |
|---|---|---|---|---|
| *31. | இந்திய அரசியலமைப்பு | வி. கன்னையா | 4 | 75 |
| 32. | அரசியலுக்கு ஓர் அறிமுகம் | டி. செல்லப்பா | 8 | 50 |
| 33. | தற்கால அரசியல் அமைப்புகள் | மோ. வள்ளுவன் கிளாரன்சு | 8 | 50 |
| 34. | பன்னுட்டு அரசியல்—I | திருமதி நூர்ஜஹான்பாவா | 16 | 00 |
| 35. | பொதுத்துறை ஆட்சி இயல்—I | வி. கன்னையா | 9 | 00 |
| 36. | பொதுத்துறை ஆட்சி இயல்—II | அ. ஜெகதீசன் | 7 | 25 |

**உளவியல்**

| | | | |
|---|---|---|---|
| 37. குழந்தை உளவியல்—I | கி. ர. அப்புள்ளாச்சாரி | 8 | 00 |
| 38. குழந்தை உளவியல்—II | கி. ர. அப்புள்ளாச்சாரி | 7 | 00 |
| 39. உட்கவர் மனம் | சி. ந. வைத்தீஸ்வரன் | 7 | 00 |
| 40. இளையோர் உளவியல்—I | தி. இரா. அரங்கராசன் | 12 | 00 |
| 41. இளையோர் உளவியல்—II | தி. ரா. அரங்கராசன் | 9 | 00 |
| 42. சமூக உளவியல் | என். வேதமணி மானுவேல் | 9 | 25 |
| 43. பிறழ்நிலை உளவியல் | அ. பெசன்ட் கிரீப்பர்ராஜ் | 11 | 00 |
| 44. பித்தரின் உள்ளம் | அ. பெசன்ட் கிரீப்பர்ராஜ் | 3 | 00 |

**தத்துவம்**

| | | | |
|---|---|---|---|
| 45. இந்து சமயத் தத்துவம் | ஞா. ராஜாபகதூர் | 5 | 50 |

**அறவியல்**

| | | | |
|---|---|---|---|
| 46. அறவியல்—ஓர் அறிமுகம் | கோ. மோ. காந்தி | 8 | 50 |

**அளவையியல்**

| | | | |
|---|---|---|---|
| 47. அளவை இயல்—தொடக்க நூல் | கி. ர. அப்புள்ளாச்சாரி | 2 | 50 |

**மானிடவியல்**

| | | | |
|---|---|---|---|
| *48. மானிடவியல் | ம. சு. கோபாலகிருஷ்ணன் | 4 | 75 |
| 49. பண்பாட்டுக் கோலங்கள் | கி. பூ. சுப்பிரமணியன் | 4 | 50 |

**சமூகவியல்**

| | | | |
|---|---|---|---|
| 50. சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள் | ஜெ. நாராயணன் | 10 | 00 |

**புவியியல்**

| | | | |
|---|---|---|---|
| *51. ஆசியா—I | கொ. சேஷநரசிம்மன் | 9 | 50 |
| *52. ஆசியா—II | கோ. சோஷநரசிம்மன் | 8 | 75 |
| *53. ஐரோப்பாக் கண்டத்தின் புவியியல் | ஏ. எஸ். நாராயணன் | 8 | 50 |

*மூலநூல் (Original Book)

| | | | |
|---|---|---|---|
| *54. வட அமெரிக்கா | குமாரி இரா. அலமேலு | 8 | 00 |
| *55. தென் கண்டங்கள்—ஆஸ்திரேலியா | திருமதி எச். நியூமன் | 4 | 25 |
| *56. புவிப்புறவியல்—II | நா. அனந்தபத்மநாபன் | 6 | 00 |
| *57. செய்முறைப் புவியியல் | சு. ஜெயச்சந்திரன் | 9 | 00 |
| *58. மக்கட் பரப்பியல் | வி. எஸ். அனந்தபத்மநாபன் | 5 | 25 |
| *59. சமுத்திரவியல் | கோ. இராமசாமி | 6 | 50 |
| 60. காலநிலை இயல்—I | கொ. சேஷநரசிம்மன் | 10 | 00 |
| 61. வளியியலுக்கு ஓர் அறிமுகம் | கோ. இராமசாமி | 11 | 00 |
| *62. புவி அமைப்பு இயல் | சி. விசுவநாதன் | 4 | 75 |
| **புள்ளியியல்** | | | |
| *63. புள்ளியியல்—அறிமுகம் | சு. வைத்தியநாதன் | 10 | 00 |
| 64. புள்ளியியல் முறைகள்—I | கோ. சண்முகசுந்தரம் | 10 | 00 |
| 65. நம்மைச் சுற்றியுள்ள பேரண்டம் | தி. வி. லட்சுமிநரசிம்மன் | 6 | 50 |
| **விலங்கியல்** | | | |
| *66. விலங்கியல் | பெ. மா. அண்ணாமலை<br>இரா. முருகேசன் | 12 | 00 |
| **பௌதிகவியல்** | | | |
| 67. ஒளி நூல் | ச. சம்பத்து | 10 | 00 |
| **பொது நூல்கள்** | | | |
| 68. மகாத்மா காந்தி | சரஸ்வதி தங்கையன் | 3 | 25 |
| 69. இந்தியாவில் குடியானவர் வாழ்க்கை | எஸ். இலட்சுமி | 3 | 50 |
| 70. விவசாயப் புரட்சி | வி. கார்த்திகேயன் | 8 | 00 |
| 71. சேமக் கை-நூல் | ஆ. சுப்பிரமணியன் | 2 | 50 |
| *72. நீரிழிவு—க்ஷயரோகம் | ஜி. வெங்கடசாமி, எ. கதிரேசன் | 2 | 50 |

* மூலநூல் (Original Book)

## தமிழ் வெளியீட்டுக் கழகப் புதிய வெளியீடுகள், 1966

**வரலாறு**

கிரேக்க நாட்டு வரலாறு-I, II, III —ஜே. பி. ப்யூரி

**அரசியல்**

ஆங்கிலேயப் பயன்வழிக் கொள்கையினர் —பிளமனாட்ஸ்

பொதுத்துறை ஆட்சியியலுக்கு ஓர் அறிமுகம்–I, II —லியனார்ட் டி. ஒயிட்

**பொருளாதாரம்**

பென்ஹாம் பொருளாதாரம்-I, II —ஃபிரடெரிக் பென்ஹாம்

வரவுசெலவுத் திட்டம் —ஆர். ரங்காச்சாரி

**தத்துவம்**

அறிவு ஆராய்ச்சி இயல் —ஆர். இராமானுஜாச்சாரி

மேலைநாட்டுத் தத்துவம் —ரா. ஸ்ரீ. தேசிகன்

அத்துவித தத்துவம் —T. M. P. மஹாதேவன்

**உளவியல்**

குமர உள்ளம் —டாக்டர் எம். அறம்

**புவியியல்**

தென் அமெரிக்கா —எம். என். பத்மநாபன்

தென் கண்டங்கள்–ஆப்பிரிக்கா —எஸ். முத்துகிருஷ்ணக்கரையாளர்

தென் கிழக்கு ஆசியா —ஜி. கிருஷ்ணமூர்த்தி

**கணிதம்**

வகை நுண்கணிதம் —டி. கே. மாணிக்கவாசகம் பிள்ளை

தொகை நுண்கணிதம் —தி. கோவிந்தராசன்

ஆயத்தொலை வடிவகணிதம் —டி. கே. மாணிக்கவாசகம் பிள்ளை

**விஞ்ஞானம்**

வானவெளி வெற்றி —டாக்டர் எம். ஏ. தங்கராஜ்

ரேடியோ —டாக்டர் பி. திருஞானசம்பந்தம்

எக்ஸ்-ரே —பெ. நா. அப்புசாமி

பாம்புகள் —பெ. மா. அண்ணாமலை

தாவரம்–வாழ்வும் வரலாறும்-I —டாக்டர் சி. சீனிவாசன்

**மருத்துவம்**

மகப்பேறும் மாதர் நோயும் —ஏ. கப்லான்

பாக்டீரியா —சு. சுந்தரம்

**பொறியியல்**

நீங்களே வீட்டைக் கட்டலாம் —ஆர். எஸ். தேஷ்பாண்டே

**சட்டம்**

குற்ற இயல் சட்டம் —எம். சண்முகசுப்பிரமணியம்

**பொது**

கரும்பு —கு. பெரியசுவாமி

உணவும் ஊட்டமும் —தி. வேங்கடகிருஷ்ணய்யங்கார்

முற்காலச் சோழர் கலையும் சிற்பமும் —எஸ். ஆர். பாலசுப்பிரமணியம்

இவற்றுடன் மேலும் 11 நூல்களும் ஆக 42 நூல்கள்.